விரும்பினர்க் கின்பந் தரும்பூ லோகத்
திருசிவ லோகமு மெய்தாத துவாத
சாந்தமுஞ் சீவன் முத்தியுந் தோய்ந்த
சுதையாற் கிளைத்த மதுரா புரியும்
ஆதலிற் பெருந்தற் சிறிதெனைத் தேவர்
மணிப்பல திரளேண் மண்டபத் தெழுதிய
ஓவியத் தேவ ருடனினி திருக்கும்
ஆலவா யமுதங் காலன் கூற்று
வில்வேண் மறலி கல்விச் சொன்மலை
முருகனை பயந்த வொருதனிக் கடவுள்
மழைக்கடத் தருவிப் புழைக்கைக் கன்று
தவளநீ றுடும பவளக் குன்று
துன்றிள மதியிருள் கிழிக்கும
குன்றுக் கயிலைக் குன்றத் தோனே. (உரு)

வெண்பா.

உசு. குன்றுபோற் கோபுரஞ்சூழ் கூடற் குருமணியை
இன்றுபோய்க் [1]காணுங்கா ணேழையீர்—பொன்றுங்காற்
கையுங் கதையுமாய்க் காலனும்பூ ணேவருதல்
பொய்யுங் கதையுமாய்ப் போம். (உசு)

---

18–20. சிவலோகமும்............மதுராபுரி: "அத்திருமா நகரின்பேர் சிவநகரங் கடம்பவன மமர்ந்த சீவன, முத்திபுரங் கன்னிபுரந் திருவால வாய் மதுரை முடியா ஞானம, புத்திதரும பூவுலகிற் சிவலோகஞ் சமட்டிவிச்சா புரந்தென் கூடல், பத்திதரு துவாதசாந் தத்தலமென் றேதுவினாற் பகர்வர் நல்லோர்" (திருவிளை. தலவிசேட. 21.) சுதை—சந்திரனிடத்துள்ள அமுதம். கிளைத்த—வளர்ந்த. 25. கல்விச் சொன்மலை; "அறிந்தோர் சொன்மலை" (முருகு. 263.) 27. கன்று—விநாயகக் கடவுள். 27–8. 'மங்கோன், போர் கொண்ட வெண்கோட் பொலன்குவடு பொதியும்வெண் பொடிதுடி யடித்து வைத்துப் புழுதியாட் டயர்வொ ரயிரா வணத்துலவு போர்க்களிற் றைத்துதிப் பாம்" (மீனாட்சி. பிள்ளை. 1.) தவளநீறு—சிவபெருமான்திருமேனியிலுள்ள நீறு.

உசு. காண்: அசை. கதை—பொய்யாகக் கட்டிய வரலாறு; "கதை யெனக் கருதல் செய்யான் மெய்யெனத் தானுங் கொண்டான்" சீவக. 2144.

[பி-ம்.] [1]கண்டாலும்

### கலித்துறை.

௨௭. போம்போது சுட்டுப் பொடியாக் கியவெறும் பூழ்திகன்மம்
ஆம்போதெல் லாமுடம் பாகவந் தாற்சுமந் தாற்றுவனோ
நாம்போது நீயஞ்ச லென்றே சென்ன நாகந்தள்ளித்
தேம்போ தடியிணை நல்காய்தென் கூடலிற் றெள்ளமுதே. (௨௭)

### அகவல்.

௨௮. தெள்ளமு தென்னத் தீவிடங் குடித்துத்
தள்ளருங் கடவுளர் தமக்கருள் கடவுள்
காவணத் துயர்ந்த பூவணப் பாதமும்
கொங்குதே ரேடகப் பங்கய முகமும்
மன்பெருஞ் சீருடைத் தென்பரங் குன்றொடு
சொல்விடை கேட்டுச் செல்விடை வெற்பெனும்
கொங்கையுஞ் சுமந்த கூடற் பூங்கொடி
உள்ளம் போன்ற வெள்ளிமன் றுடைய
கோவே நின்னைப் பாவாற் பாடேன்
வீழேன் சூழேன் றாழே னாயினும்
தந்தையைக் கொன்ற பிள்ளையு மல்லேன்
பிள்ளையைக் கொன்ற தந்தையு மல்லேன்
கல்லா லெறிந்திலன் வில்லா லடித்திலன்
வதைத்திடு மூன்கொடுத் துதைத்திலே னதனிற்
பொல்லே னல்லே னல்லேன் யானே
எனக்கே நின்னரு ளேனையோர்க் [1]கில்லென

---

௨௭. நாம் போதும்—நாம் பாதுகாத்தற்கு வருவேம். தேம்போது—தேனையுடைய தாமரைமலரைப்போன்ற.

௨௮. 1. அமுதத்தை உண்ணுதல்போல.

3–7. இனி, மதுரை ஒரு பெண்ணாக உருவகிக்கப்படுகின்றது.

3. பூவணம்—திருப்பூவணமாகிய தலம்; மலரின் அழகென்பது வேறு பொருள். 4. ஏடகம்—ஒரு தலம்; இதழ்களையுடைய இடமென்பது வேறொரு பொருள். 6. விடைவெற்பு—ரிஷபகிரி; சோலைமலை 11. பிள்ளை—சண்டீசர். 12. தந்தை—சிறுத்தொண்டர். 13. சாக்கிய நாயனாரும் அருச்சுனனும் அல்லேன். 14. கண்ணப்பன் அல்லேன். 16. அருள் உரியதென ஒரு சொல் வருவிக்க.

[பி-ம்.] [1]இல்லையென

மனத்திற் றேறு மாணுப் பேதைமை
முப்புரம் போல வெப்பெழும் வன்னகை
விளையா தின்னகை விளைத்தலி னந்நகை
வளையா மேருவை வளைத்திடு மாபோல்
என்னையாட் கொண்டு முன்னைத் தீவினைக்
கொல்வாய்ப் புலிமுலை புல்வாய்க் குதவிய
தொல்வினை யென்ன நல்வினை பயப்பப்
புழைக்கை நீட்டிக் கழைக்கரும் பெடுத்துத்
திருந்துகல் லானை யருந்திடு மாறு
வெவ்வினை யேனு மவ்வினைப் பயத்தின்
ஊறுதே னருந்தி யேறுபோற் றிரிதலின்
முந்நூற் சிறுவ னுண்மறைக் கிழவன்
பழுத்த நீறு மெழுத்தோ ரஞ்சும்
அல்லாற் கடவு ளில்லையென் றுணர்ந்த
ஞானப் பிள்ளை தானுயிர் நடுங்க
மாற்றருந் துயர்தருங் கொடிய
கூற்றைச் சீறுதல் குறைகழற் குறித்தே. (உ௰)

வெண்பா.

உக. உருத்தக்கான் மாய்ந்தங் குயர்ந்தபுகழ்க் கூடல்
ஒருத்த னருளுங்கா லுண்டாய்க்—கருத்தனவன்
காண்பித்துக் காணுமிந்தக் காசினிக்கு ஞானென்னும்
வீண்பித்துக் காணும் வினை. (உக)

---

17. தேறும்-நான் தேறும். 19. விளைத்தலின்-நினக்கு விளைத்தலினால்; என் பேதைமைகண்டு நீ நகைக்கின்றாயென்பது கருத்து. 20-21. "தெவ்வரை மெய்யெரி காய்சிலை யாண்டென்னை யாண்டுகொண்ட, செவ்வரை மேனியன்'. (திருச்சிற்.) 21. தீவினை-எனது தீவினை. 23. தொல்வினை-பழைய செயல்'

விதிக்கு மாறாக என்னை யாண்டுகொண்டருளின தன்மையால், பூங்கழலுக்கு, விதித்த விதியை நீக்கிக் கூற்றைச் சீறியது வழக்கேயாகும்.

உக. உருத்தக்கால்-கோபித்தால்; என்றது சங்காரகாலத்தைக் குறிப்பித்தது. காண்பித்து-காண்பிக்க. காணும்: முன்னிலைப்பன்மை அசை.

கலித்துறை.

௩௰. வினையள வாய்நின்று வெறு யருள்வியன் கூடற்பிரான்
தனையள வாதவர் தாழ்வறி யார்தண் டுறைக்கமல
மனையள வானென்ன வொண்ணாத் திருமுடி வாய்த்ததென்றால்
தினையள வானு முயலாத கூனிளந் திங்களுக்கே. (௩௰)

மதுரை மும்மணிக்கோவை முற்றுப்பெற்றது.

---

௩௰. அளவிடத்தொடங்கியவர் தாழ்வசொன்க: “யாதவ குலத்துநெடு மாதவன் மருப்புடைய வேனமிரு கத்துருவமா, வேதமொழி பெற்றவய ஞேதிம மெனப்பறவை வேடமு மெடுத்ததிலையோ, ஓதருணை வித்தகரை மூவரி லொருத்தரென வோதியிடு மற்ப மதியீர், சீதமதி வைத்தமுடி பாதமல ரைச் சிறிது தேடுத னினைத்தபரமே” (அருணைக்கலம். 6.) கமல மனை அளவான்— தாமரையை வீட்டின் எல்லையாகப் பெற்றவன்; பிரமன். தண்டுறை யென்றது, சாதிபற்றிய அடை. திங்களுக்கு வாய்த்ததென்றால் அறியார்.

ஓம்.

அருட்பெருஞ்சோதி

தனிப்பெருங்கருணை.



நூலாசிரியர் வடலூர்

## இராமலிங்கசுவாமிகள்

# தெய்வமணிமாலை

# விருத்தியுரை.




உரையாசிரியர்:

புதுவை

**வித்துவான் மு. திருநாவுக்கரசர்**

சதாவதானம் சித்தாந்தப் பேராசிரியர்

பல்கலைக்கிழவர்.





பதிப்பாசிரியர்:

**K. C. James** (சின்னையா)

Karamalai Annai Malai Estates,

**Valparai Post,**

(Via) Pollachi.



**1950**

இதன் விலை அணா **0—8—0**

உ

முருகன் துணை.

# சிறப்புரை.

---

உயர்திரு, வித்துவான், முடிவை மு. திருஞானசம்பந்தம் சதாவதானம், சித்தாந்தப் பேராசியர், பல்கலைக்கிழவர் அவர்கள் எழுதிய தெய்வமணிமாலை விருத்தியுரையினைக்காணும்பேறு இன்று எய்தினேன். அம்மாலையால் அடிகளார் வணங்கும் கந்தவேள் எனது இளம்பருவத்தில், எனது பிறவியிடமாகிய சிற்றூரில் உள்ள தன் கோயிற்கு அடிக்கடி வந்து தன் திருவடியை வணங்கிச்செல்ல அருளுவார், இன்று திருவருளுருவில், தன் அடியார் ஆம் இந்நூலுரையாசிரியருடன் வந்தருளி, இந்நூலுரையினைக்காணும் பேற்றினை எளியேற்கு அருளினர் என எண்ணுகின்றேன்,

இவ்வுரை சமய, இலக்கிய, இலக்கண நூல்கள், ஏனைய பொதுஅறிவு நூல்கள் முதலாயவற்றின் பயிற்சியுள்ளார்க்கும், மாணவர் நிலையினர்க்கும் ஏற்ற பெற்றி உணர்ச்சியூட்டி மகிழ்விப்ப தொன்றாகும். அங்ஙனமே இந்த எளியேன் சிற்றறிவிற்கு எட்டியுள பொருள்களைக் காணுங்கால், பற்பல நயங்களைக் காட்டி வியப்பூட்டியது.

முருகவேள் அருளால், பன்மொழிப் பயிற்சியும், பல்கலைத் தொண்டும் உடையராய், நம் தாய்மொழிக்குப் பல்வகைத்தொண்டுகள் செய்துவரும் நம் நண்பர், எல்லா வாழ்வுகளும் இனிதுமேவி ஊழிஊழி வாழ்வார்களாக.

அன்பன், கவியரசு,

கரந்தை, 17—12—49.

**அரங்க (R.) வேங்கடாசலம் பிள்ளை,**
கரந்தைக் கவியரசு, முன்னாள் கரந்தைப் புலவர் கல்லூரித் தலைவர்,

# முகவுரை.



**பேரன்பு சால் நண்பர்காள்!**

அடியேன் எழுதப்புகுந்த தெய்வமணிமாலை விருத்தியுரையின்கண் பிழைகளிருப்பின் என்னைச் சேர்ந்ததன்று. என்னைப் பிடித்து மயக்கிக்கொண்டிருக்கின்ற ஆணவம், கன்மம், மாயையென்ற மும்மலங்களின் மறைப்பின்பாற்பட்டதாகும். இந்த உரையின்கண் ஏதாவது கொண்டுகொள்ளத்தக்கன இருக்குமேயானால் அதுஎன்னை ஆண்ட ஆண்டவன் திருவருளுக்குரித்தாகும்.

அடியேன் இந்தத் தெய்வமணிமாலை விருத்தியுரையினைப் பலகால் எழுதி கிழித்தெறிந்துவிட்டு இப்பொழுது முடிவாக இந்த உரையை எழுதி வெளியிட்டிருக்கின்றேன். இந்த உரையானது பல பெரியார்கள் முன்னிலையில் வாசித்துக்காண்பித்தும், ஒப்பு நோக்கியும் முடிவாக வெளிவருகின்றது.

இந்தவிருத்தியுரையை எழுதுவதற்கு உதவிய உயர்திருவாளர் வள்ளலார் அவர்களுக்கு எனது மனமுவந்த வந்தனத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இப்படிக்கு உழுவலன்பன்,
முடிவை, வித்துவான் மு. திருஞானசம்பந்தம்,
சதாவதானம் சித்தாந்தப் பேராசிரியர்,
பல்கலைக் கிழவர்.

தூத்துக்குடி,
27—12—49

உ

முருகன் துணை.

# அனுபந்தம்.

அடியேன் பரிசிற்றுறைநாடி கொ. சி. ஜேம்ஸ் (சின்னையா) அவர்களைப் பார்க்கச் சென்றிருந்தேன். அப்பொழுது அவர்களுடைய சீலம், ஒழுக்கம், தியாகபுத்தி இவைகளைக் காணுறும் பொழுது தொல்காப்பியத்தில் தமிழ் மகன் எடுத்துக் கொள்ள வேண்டிய பண்புகள் இன்னார் போன்றவர்கள் இன்றும் ஒழுகிவருவதினாற்கரியாகின்றது. இவர்கள் அடியேன் மீது கொண்டிருக்கின்ற அன்பைப் பார்க்கின்ற காலத்தில் ஒரு பெற்றமகன் மீது ஒரு தந்தை எவ்வளவு காதல் கொள்வார்களோ அதற்கு பன்மடங்கு அதிகமாக இருக்கின்றது. ஆனதுபற்றி இவர்கள் அடியேனை ஈன்றெடுத்த தந்தையெனக் கொள்கிறேன். இவர்களுடைய பெண் குழந்தைகளை எனது கூடப் பிறந்த சகோதரிகளாகக் காண்கின்றேன். ஆண் குழந்தைகளை எனது கூடப்பிறந்த சகோதரர்களாகக் காண்கிறேன். அவர்கள் அண்ணா என்று கூப்பிடுகிற பொழுது எனக்கு எவ்வளவுவரையொணாப் பேரானந்தமாக இருக்கிறது. எங்களப்பார் இல்லக்கிழத்தியென்னைப்பயந்த அம்மாளையானவருறைகின்ற காலத்திற்காணும் பாக்கியம் பெற்றிலேன். அவர்கள் அப்பொழுது சேலத்திற்குப் போயிருந்தமையே காரணம்.

யோசித்துப் பார்க்கின்ற காலத்தில் இந்த நூலைப்பதிப்பித்த எங்கப்பாவைத் தமிழ்நாட்டிற்கே அப்பா என்று சொல்லுகின்றேன். இது புனைந்துரையன்று. அவர்கள் ஜோதி நாடக சபை என்று ஒரு சபையை ஏற்பாடுசெய்து அவர்களுக்கு உறையுள் உணவு ஊதியம் இவைகளெல்லாம் வழங்குகின்றார்கள்.

ஐயா அவர்களுடைய தொழிற்றுறை தேயிலைத் தோட்டத்தைப் பராமரித்தல். ஒருநாள்கூட ஒழிவு கிடையாது. இரவு நான்கு மணிக்கே எழுந்திருந்து இரண்டு மணி நேரம் சங்க இலக்கியங்களை வாசிக்கின்றார்கள். வடலூர் இராமலிங்க சுவாமிகள்மீது நிறைய ஈடுபாடுடையவர்கள் என்று கண்டேன். இவர்களது இல்லிலும் மீ

யிலும் பூசை அறை இருக்கின்றது. அங்கே இராமலிங்க சுவாமிகள் ஓவியமே இடம் பெற்றிருக்கின்றது.

சுருங்கச் சொல்லுமிடத்து தனக்குக் கிடைத்திருக்கின்ற பணத்தை எங்கம்மாவும் எங்களப்பாவும் ஒன்றுபோலச் சேர்த்து தமிழ்முறைக்குப் பயன்படுத்துகின்றார்கள். இவர்களுடைய மலைக்கு அடியேன் சென்று இவர்களுடைய பங்களாவிற்குள் நுழைந்து பார்க்கின்ற பொழுது ஈ யென்று நாணொருவரிடநின்று கேளாத இயல்பும் என்னிடம் ஒருவரீதிடுவென்ற போதவர்க்கில்லையென்று சொல்லாத திறமும் என்கிற தெய்வமணி மாலைப்பிரபந்தத்திலுள்ள செய்யுள் அச்சுவாகனமேற்றி கண்ணாடி போட்டிருக்கின்றதைப் பார்த்தேன். இச்செய்யுள் இவர்களை வள்ளலெனக்காட்டியது.

இன்னும் அப்பாகூடப் பச்சைமலைக்கு எங்களுடைய நாடகக் கம்பெனியார் நடிக்கின்ற இராமாயணம் பார்க்கப் போனேன் அப்பொழுது தம்பி தொல்காப்பியத்தில் 5000 அடிகளுக்கு மேலிருக்கின்ற நிலத்திலிருக்கின்ற மக்களுக்கு வானவர்கள் என்று பெயர் ஆகவே இந்த மலை கடல் மட்டத்திலிருந்து 9000 அடிகளுக்கு மேலாக இருக்கின்றது. ஆகவே நாங்கள் வானவர்கள் என்றது அது சொல்லளவில் இல்லை உண்மையே. இவர்களைக்காணாத தமிழ்ப் புலவர்கள் எல்லாம் தமிழ்ப் புலவராகார்.

அவர்களோடு பேசுகின்ற காலத்தில் திருக்குறள், தொல்காப்பியம், சங்க இலக்கிய நூல்களுக்கு நகைச்சுவை தோன்ற உரை சொல்வது எவ்வளவு இன்பமாக இருக்கிறது இவர்களுக்கு நிகர் இவர்களே தவிரவே றொருவரில்லை. ஆகவே எங்கப்பாவுக்கு கோடாத செல்வமும் நீடித்த ஆயுளும் குறைவுபடாத அறிவையுஞ் செந்திற்கந்தவேள் கொடுக்க வேண்டுமென்று முருகவேள் திருவடிகட்கநேககோடி வணக்கங்கள் செலுத்துகின்றேன்,

இப்படிக்கு
உழுவலன்பன்,
முடிவை. வித்துவான் மு. திருஞானசம்பந்தம்,
சதாவதானம், சித்தாந்தப் பேராசிரியர்
பல்கலைக்கிழவர்.

தூத்துக்குடி,
7—1—50.

# பிழை திருத்தம்.

| பக்கம் | அடி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 18 | புண்ணிய | புண்ணியச் |
| 4 | 23 | சதிரப் | சாதிப் |
| 4 | 23 | உனது | கருணை |
| 5 | 31 | உன்னை | உன்னைப் |
| 5 | 33 | மோக்கும் | மோங்கும் |
| 6 | 8 | அவரென்ன | அவரன்ன |
| 6 | 14 | யெனு | யெனும் |
| 8 | 3 | லால் | லால்வேப |
| 8 | 4 | யாவ | யவ |
| 8 | 5 | ரடுத்தய | ரடுத்தைய |
| 8 | 27 | எல்வளவு | எள்ளளவு |
| 9 | 3 | கிறேன | கிறேன் |
| 9 | 10 | ஏன்ற | என்ற |
| 10 | 2 | ணத்தை | ணத்தில் |
| 10 | 8 | னுள்ள | னுள்ளே |
| 10 | 12 | பனே | பவனே |
| 10 | 19 | மேன்மெ | மேன்மைமெ |
| 11 | 10 | என்னை | எனை |
| 11 | 24 | னுக்து | னுந்து |
| 11 | 24 | கொடி | கொடிய |
| 11 | 29 | களும | களும் |
| 12 | 12 | மனம் | மனத்திற் |
| 13 | 1 | என்து | எனது |
| 13 | 16 | தாரண | தாரகுண |
| 13 | 16 | பொருளு | பொருளும் |
| 14 | 6 | நன்ப | நண்ப |
| 15 | 6 | பவா | பவ |
| 15 | 29 | வில்லா | வில்லாத |
| 17 | 9 | வளாத | வளர்த |
| 18 | 24 | வோதுரு | வோதுறு |
| 18 | 26 | பேசும் | பேசும |
| 18 | 29 | பறு | புறு |

| பக்கம் | அடி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 20 | 9 | வாதி | வாகி |
| 20 | 16 | மறவு | மறிவு |
| 21 | 1 | போதி | போதித் |
| 21 | 17 | நம்மை | நம்மைக் |
| 21 | 17 | வுளில்லை | ள் |
| 21 | 17 | யென்று | என்று |
| 22 | 5 | தில் | தில் உயிர் |
| 22 | 5 | திருக் | திருக்கின்ற |
| 22 | 21 | பொனற | பொனைற |
| 23 | 5 | பகிக்கு | பசிக்கு |
| 23 | 20 | ஞோர்கூ | ஞோர் = கூ |
| 23 | 23 | ரில்லா | ரில்லாப் |
| 23 | 25 | றுயை | றுடைய |
| 24 | 2 | வொட்டா | லொட்டா |
| 24 | 2 | அன்பொங் | அன்பபொங்க |
| 24 | 8 | புழு | புழுப் |
| 25 | 2 | சூழுமே | சூழுமோ |
| 25 | 13 | கொஞ்சங் | கொஞ்சம் |
| 25 | 18 | களு | களும் |
| 25 | 19 | யனை | யனுய் |
| 26 | 13 | கன | கான |
| 26 | 14 | டைகிற் | டையிற் |
| 27 | 2 | பாம | பரம் |
| 27 | 6 | பொய் | பொய்ப் |
| 27 | 20 | உள்ள | உள்ளைத் |
| 27 | 27 | முத்துக் | முத்துச் |
| 28 | 10 | மஞ்சளே | மஞ்சளோ |
| 28 | 17 | றுணவு | றுணர்வு |
| 28 | 26 | இழமை | இளமை |
| 28 | 26 | வேடமே | வேடமோ |

திருவோங்கு புண்ணியச் செயலோங்கி யன்பருட்
டிறலோங்கு செல்வ மோங்க
செறிவோங்க அறிவோங்கி நிறைவான இன்பந்
திகழ்ந்தோங்க அருள் கொடுத்து
மருவோங்கு செங்கமல மலரோங்கு வணமோங்க
வளர் கருணை மயமோங்கி யோர்
வரமோங்கு தெள்ளமுத வயமோங்கி யானந்த
வடிவாகி யோங்கி ஞான
உருவோங்கு முணர்வினிறை யொளியோங்கு
யோங்கி மயிலூர்ந்தோங்கி யெவ்வுயிர்க்கும்
உறவோங்கு நின்பதமென் உளமோங்கி வளமோங்க
உய்கின்ற நாளெந்த நாள்
தருவோங்கு சென்னையிற் கந்த கோட்டத்துள்வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே

(ப-ரை) திருவோங்கு புண்ணியச் செயலோங்கி=நன்மைகள் பெருகப்பெற்றபுண்ணியசெய்கை வளர்ந்து, அன்பருட்டிறலோங்கு செல்வமோங்க=அன்பர்கட்கு செல்வப்பலன் வளர்ந்து, செறிவோங்க அறிவோங்கி=அறிவு தட்டுத்தடங்கலின்றி வளர்ந்து, நிறைவான இன்பந்திகழ்ந்தோங்கஅருள்கொடுத்து=குறைவில்லாத இன்பம் கூடி வளர்தற்கு அருளைத்தந்து, மருவோங்கு செங்கமல மலரோங்கு வணமோங்க=மருக்கள் நிறைந்திருக்கிற செங்கமல மலர்கள் நிறைந்த நிறமானது வளர, வளர் கருணை மயமோங்கியோர் =உணரும் அடியார்களுக்கு நிறைந்த அறக்கருணைஓங்கி, வரமோங்கு தெள்ளமுத வயமோங்கி= தன்வயத்தில் தெளிந்த அமுதனைய வரம் வளர்ந்து, ஆனந்த வடிவாகி=பேரின்ப உருவாகி, யோங்கி ஞான உருவோங்கு=அறிவுநிறைந்தபதிகாரணம்வளர்ந்து, உணர்வினிறை யொளியோங்கி=அறிந்த அடியார்கள் உணர்ந்தால் ஒளியான

(சோதி) வளர்ந்து, ஓங்கி=பெருகி, மயிலூர்ந்தோங்கி=மயில் மீது இருக்கின்ற உருவம் வளர்ந்து, எவ்வுயிர்க்கும் உறவோங்கு நின் பதம்=உலகிலுள்ள சகல உயிர்களுக்கும் உற்ற துணையாகிய நின் பாதாரவிந்தம், என் உளமோங்க=என் மனதில் நிறைந்து, வள மோங்க=செழிப்போங்கி, உய்கின்ற நாளெந்தநாள்=நான் பிறவா மையடைகின்ற நாள் எந்த நாள், தருவோங்கு சென்னையிற் கந்த கோட்டத்துள்வளர் தலமோங்கு கந்தவேளே=மரங்கள் நிறைந் திருக்கிற கந்தக் கோட்டம் என்ற பதி உன்னை பெற்றதால் வளர்ந் திருக்கிற தன்மையைச் செய்கின்ற முருகக் கடவுளே, தண்முகத் துய்யமணி=உண்மையான தூய குளிர்ந்த முகம். உண்முகச்சைவ மணி=உணர்ந்து பூசிப்பதற்கேற்ற விபூதியணிந்த முகம், சண்மு கத் தெய்வமணியே=தெய்வங்கட்கெல்லாம் மணிபோன்ற ஆறுமு கக் கடவுளே, ஏகாரம் அசை.

(க-ரை) வள்ளி, தெய்வயானை ஆகிய அருளை இரு பக்கங்களி லும் வைத்திருக்கிற ஆறுமுகக்கடவுளே, எனக்குப் பதிகாண நிலை யைத் தரவேண்டும்.

(விளக்கவுரை) சுப்பிரமணியக் கடவுள், சிவந்த மேனியையுடை யவன். வள்ளி, தெய்வயானை என்ற இரண்டு சக்திகளும் இறை வன் இருமருங்கிலுமிருக்கின்றார்கள். அது செந்தாமரை மலரில் களங்கம் ஏற்பட்டதுபோன்று இருக்கின்றது. அறிவைப்வயப்படுத் திய அடியார்களுக்கு சோதியாகக் காட்சி கொடுப்பாய் என்று வள்ளலார் புகழ்கின்றார், உன்னுடைய அடியார்களுக்கு நீ அறக் கருணை சதிப்பாய். எல்லா உயிர்களுக்கும் ஆதாரமாகிய உனது என்னை உய்விக்கும பிறவாமையைத்தரும் "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடி சேராதார்" என்ற வள்ளுவர் குறளை உற்று நோக்க வேண்டியதாகிறது. கந்த கோட்டமென்ற ஊர் உன்னைப்பெற்றுக்கொண்ட பெருமையை உடையது. தூயகுளிர்ந்த முகமுடையாய், மனதுள்ளுணர்ந்து பூசிப்பதற்கேற்ற விபூதி யணிந்த முகமுடையாய், தெய்வங்கட்கெல்லாம் தலைமையான மணி போன்ற குமரக்கடவுள்.

பரமேதுவினைசெயும் பயனேது பதியேது பசுவேது பாசமேது
பத்தியேதடைகின்ற முத்தியே தருளேது பாவபுண்யங்களேது
வரமேது தவமேது விரதமேதொன்றுமில்லை மனவிரும்புணவுண்டுநல்
வத்திரமணிந்துமட மாதர்தமைநாடி நறுமலர்சூடி விளையாடிமேற்
கரமேவவிட்டுமுலை தொட்டுவாழ்ந்தவரோடு கலந்து மகிழ்கின்ற
சுகமே
கண்கண்ட சுகமிதே கைகண்ட பலனெனுங் கயவரைக்கூடாதருள்
தரமேவு சென்னையிற் கந்தகோட்டத்துள்வளர் தலமோங்கு
கந்தவேளே
தண்முகத்துய்ய மணிஉண்முகச் சைவமணி சண்முகதெய்வ
மணியே

(ப-ரை) பரமேது=மேலான பொருளேது, வினைசெயும் பயனேது=கர்மங்கள கொடுக்கின்ற பலன் ஏது, பதியேது=கடவுள் (இறை) ஏது, பசுவேது=உயிர்ஏது, பாசமேது=மலங்கள் ஏது, பத்தியேது=இறைமீது அன்புசெலுத்துவதேது, அடைகின்ற முத்தியேது=அதனாலுயிரடைகின்ற விடுதலை ஏது, அருளேது= சத்தியேது, பாவபுண்யங்கள் ஏது=நன்மை தீமைகள் ஏது, வரமேது=பெருகின்ற வரமேது, தவமேது=அனுட்டிக்கவேண்டிய தவமேது, விரதமேது=கடைப்பிடிக்கவேண்டிய கட்டுப்பாடுகள் ஏது, ஒன்றுமில்லை=ஒன்றுமே கிடையாது, மனம்விரும்புணவுண்டு =சித்தம்விரும்பக்கூடிய உண்டிகளைச்சாப்பிட்டு,நல்வத்திரமணிந்து =நல்ல துணிகளைக்கட்டி, மடமாதர் தமைநாடி=பெண்மானனைய பெண்டிர்களைக் கூடி, நறுமலர் சூடி=வாசனை பொருந்திய பூக்களையணிந்து, விளையாடி=விளையாடி, மேற்கரமேவவிட்டு=பெண்கள் கை தன்மீது இருக்க வைத்து, முலைதொட்டு=அவர்கள்முலையைத் தொட்டு, வாழ்ந்தவரொடு கலந்து=கூடி அவர்களைப் புணர்ந்து, மகிழ்கின்ற சுகமே=அனுபவிக்கின்ற இன்ப சுகமானது, கண் கண்டசுகமிதே=இந்த உடல் அனுபவிக்கின்ற கண்ணால் காண் கின்ற சுகமிதுதான், கைகண்ட பலனெனுங் கயவரைக் கூடா தருள்=கைமேற்கிடைக்கின்ற சுகமென்று சொல்கின்ற கயவர்களோடு கூடாதிருக்க அருள் செய், தரமேவு சென்னை=தன்னை உன்னை பெற்றதாலுயர்த்திக்கொண்டிருக்கின்ற கந்தகோட்டத்தைத் தன் னுள்ளடக்கி தலமோக்கும் மற்றெந்த நகரைக் காட்டிலும் சிறந் திருக்கிற சென்னையிலுள்ள முருகக்கடவுள்.

(க-ரை) கடவுளில்லை, உயிர் இல்லை, கர்மம் இல்லை, மாதர்களைக் கூடிய சுகமே கண்கண்ட சுகமென்று சொல்கின்றவர்கள் கயவர். அவர்களோடு என்னை சேரவிடாதிருப்பாயாக.

(வி-ரை) வள்ளலார் இந்தச் செய்யுளாற் பெரும்பாலும் நாத்திகத்தை வெறுக்கின்றார். உலோகாயதம், மாயாவாதம், பௌத்தம் முதலிய மதங்களையும் வெறுக்கின்றார். வள்ளலாரது கயவர் என்று சொன்னது வள்ளுவனார் குறளை தன்னுள்ளடக்குகின்றது. "மக்களே போல்வர் கயவர் அவரன்ன, வொப்பாரியான் கண்டதில்" "தேவரனையர் கயவர் அவருந்தான், மேவன செய்தொழுகலால்" என்ற குறள்களை மேவி அக்குறள்களை தானெடுத்து உரை கொடுக்கின்ற ஐந்தவித்தானாற்றலகல், விசும்புளார் கோமான், இந்திரனே சாலுங் கரி" என்ற குறளையும் கண்டு பொருளுரைக்கப்பட்டது.

துடியென்னு மிடையனம் பிடியென்னு நடைமுகிற்
றுணையென்னு பிணையலளகம்
சூதென்னு முலைச்செழுந் தாதென்னு மலைபுனற்
சுழியென்ன மொழி செயுந்தி
வடியென்னும் விழிபிறையும் மதியென்னும் வதனமென
மங்கையர் தமங்கமுற்றே
மனமென்னு மொருபாவி மயலென்னு மதுமேவி
மாழ்கநான் வாழ்க இந்தப்
இந்தப் படியென்னு மாசையைக் கடியென்சொ
லிப்படி யென்னவறியாதுநின்
படியென்ன என்மொழிப் படியின்ன வித்தைநீ
படியென்னுமென்செய்குவேன்
தடிதுன்னு மதில்சென்னைக் கந்தக்கோட்டத்துள்
வளர் தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே

(ப-ரை) துடி யென்னு மிடை = உடுக்கை போன்ற இடை, யனம்பிடி யென்னும் நடை = அன்னம், பெண் யானையைப்போன்ற நடை, முகிற்றுணை யென்னும் பிணையலளகம் = மேகத்துக்கு ஒப்

பான நிறத்தையுடைய வாரிப்பின்னி முடித்திருக்கின்ற கூந்தல், சூதென்னுமுலை=பார்ப்பவர்களை வஞ்சிக்கின்ற முலை, செழுந்தாதென்னுமலை=சமுத்திரத்திலிருக்கின்ற அலையின் நுரை போன்ற கொங்கைப்பால், புனற்சுழி யென்ன மொழி செயுந்தி=தண்ணீரிற் சுழிக்கின்ற சுழியென்று சொல்லக்கூடிய உந்தி, வடியென்னும் விழி=வடிவேலையை கண் நிறையும், மதியென்னும் வதனம்= பூரணச் சந்திரனைப் போன்ற முகம், என மங்கையர் தமங்கமுற்றே=இப்படியே பலவாறு பெண்களவயங்களைப் புகழ்ந்துகொண்டே, மனமென்னுமொருபாவி = மனமென்று சொல்லக்கூடிய ஒரு பாவிப் பயல், மாலென்னுமதமேவி=மோகவிகாரம் என்று சொல்லக்கூடியதைப் பெற்று, மாழ்க = கெட்டுப்போகின்றது, நான் வாழ்க—நான் உயர்வு பெற்று வாழ்வதற்கு, இந்தப்படி யென்னுமாசையை=இப்படி இப்படி இந்த ஆசை கேடு செய்யும் அதை, கடியென்ன= அதைத் தள்ளிவிடென்று சொல, என் சொலிப்படி யென்னவறியாது = என் சொல் இந்தவிதமானது என்று தெரியாமல், நின்படி யென்ன =உன் இஷ்டப்படி யென்ன, யென் மொழிப் படியின்னவித்தை நீ படி=என் சொற்படி மேலே சொல்லிய மந்திரத்தைச் செபிக்கப் படித்துக்கொள் என்று சொல்கின்றது. என் செய்குவேன் =என்ன செய்வேன், தடிதுன்னுமதில் சென்னை= அடுதற்கொழிற்கியலாதவாறு மதில்கள் நிறைந்திருக்கின்ற சென்னை.

(க-ரை) பெண்களவயங்களை மதிப்பிடுவதில் மனஞ்செல்கிறது. கூடாது என்றாற் கேட்கமாட்டேனென்கின்றது. என் வசப்படி மனந் தொழிற்படாமல் அதன்படி என்னைத் தொழிற்படுத்துகின்றது. நான் என் செய்வேன்.

(வி-ரை) இங்கே தடிதுன்னு என்ற இடத்திலே செல்வத்தடிப்பைக் கொள்ளலாம். இவ்விதமாக பொருள் கொள்ளல் வலிந்து கொள்ளக் கிடக்கின்றது என்று விட்டுவிட்டனம்.

வள்ளலுனை உள்ளபடி வாழ்த்துகின் றோர்தமை
மதித்திடுவதன்றி மற்றை

வானவரை மதியென்னில் நானவரை யொருகனவில்
மாட்டினு மறந்து மதியேன்
கள்ளமறு முள்ளமுறு முன்பதமலால்
கடவுளர் பதத்தை யாவரென்
கண்ணெதி ரடுத்தய கண்ணென வழிப்பினுங்
கடுவென வெறுத்து நிற்பேன்
எள்ளளவு மிம்மொழியி லேசு மொழியன் றுண்மை
யென்னை யாண்டருள் புரிகுவா
யென்றந்தையேயெனது தாயே யெனின்பமே
யென்ற னறிவே யெனன்பே
தள்ளரிய சென்னையிற் கந்த கோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே

(ப-ரை) வள்ளலுனை உள்ளபடி வாழ்த்துகின்றோர் தமைமதித் திடுவதன்றி மற்றை=கொடுக்குந் தன்மையிற் சிறந்தவனே உன்னை உள்ளவாறு புகழ்கின்றவர்களை மதிப்பேன், அப்படிக்கல்லாத வான வரை மதியென்னில் நானவரை யொரு கனவின் மாட்டினு மறந்து மதியேன்=தேவர்களை மதித்து வணங்குயென்று சொன்னாலும் மறந்திருக்கின்ற கனவிற்கூட கும்பிடமாட்டேன். கள்ளமுள்ள முறும் நின்பதம்=உன்னுடைய திருவடியானது நினைக்குந்தோறும் மனத்தின் நிகழ்கின்ற சகல விதமான மாசுகளும் அற்றுப்போகும் அலால் வேறு கடவுளர் பதத்தை=அப்படிக்கல்லாத வேறுகடவுள் திருவடியை, அவரென் கண்ணெதிரடுத்தைய கண்ணென வழிப்பி னும்=அக்கடவுள் என்முன்னே கொண்டுவந்து பெற்றுக்கொள்வா யாக என்று கொடுத்தாலும், கடுவென வெறுத்துநிற்பேன்=விட மென்று வெறுத்துத் தள்ளிவிடுவேன், எவ்வளவு மிம்மொழியிலே சுமொழியன் றுண்மை=எள்ளளத்தனைகூட இப்படிச்சொல்வது இலே சல்ல, சத்தியம், யென்னையாண்டருள் புரிகுவாய்=என்னையாட் கொண்டு அருளைச்செய்வாயாகவும்; தள்ளுதற்கரிதாகிய சென்னையிலி ருக்கின்ற முருகனே.

(க-ரை) உன்னைத்தவிர யான் வேறு தெய்வங்களை, அவர்கள் என் முன்னால் வந்து காட்சி கொடுத்தாலும் கும்பிடமாட்டேன் சுயமா சொலவதாகக் கருதவேண்டாம் சத்தியமாகச் சொல்கிறேனே.

(வி-ரை) வள்ளலார் மேலேசொல்லிய செய்யுளில தனது சித்த வைராக்கியத்தைபபற்றிச் சொல்கின்றார், மாணிக்கவாசக சாமிகள்

"கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்க்கை குடிகெடினும்
நள்ளேன் நினதடியா ரொடலலால் நரகம்புகினும்
உள்ளேன் பிறதெய்வம் உன்னையல்லா தெங்கள் உத்தமனே"

என்று புகன்றிருக்கின்றார். தண்முகத்துயயமணி உண்முகச்சைவ மணி சண்முகத்தெய்வமணியே என்ற அடிக்கு முதலாவது செய்யுளிற்கூறிய உரையே இந்தப்பிரபந்தத்திலுள்ள 31 பாட்டுகளுக்கும் கொள்ளவேண்டியது இந்தச் செய்யுளில வள்ளலார் சாக்கிர வஸ்தை கடந்த, சொப்பனவஸ்தையைப பற்றிச் சொலகின்றார். உள்ளபடி என்று செய்யுளில காண்கிறது. கள்ளங்கபடு, பொய்ப் பூசனை முதலானவைகளைக் களைந்து வணங்குகின்ற அடியார் பெருமை தெரியக்கிடக்கிறது.

பதிபூசைமுதல நற்கிரியையான் மனமெனும் பசுகரணமீங்கசுத்த
பாவனையறச்சுத்த பாவனையினிற்கு மெய்ப்பதியோகநிலைமையதனான்
மதிபாசமற்றதினடங்கிடு மடக்கவே மலவின்மெயஞ் ஞானமயமாய்
வாவுபோக்கற்றநிலை கூடுமெனவெனதுளே வநதுணர்வு தநத
குருவே
துதிவாய்மை பெறுசாந்த பதமேவுமதிபமே துரிசறு சுயஞ்சோதியே
தோகைவாகன மீதி லங்கவருதோன்றலே சொலலரிய நலலதுணையே
ததிபெறுஞ்சென்னையிற் கந்தகோட்டத்துள்வளர் தலமோங்கு
கந்தவேளே
தண்முகத்துயயமணி உண்முகச்சைவமணி சண்முகத்தெய்வ
மணியே

(ப-ரை) பதிபூசைமுதனற்கிரியையான் = சரியைகிரியையென்று சொலகின்றவைகளினால் முதலில, மனமெனும் பசுகரணமீங்கசுத்த பாவனையற = மனமென்று சொல்கின்ற உயிரினுடைய பசுகரணமற் றுப்போகும், மெய்ப்பதியோக நிலைமையதனாற்சுத்த பாவனையினிற்

கும் = உண்மையான இறை காண்பித்த யோகமென்ற சுத்தமாகிய பதிகரணத்தை உயிரைச் சேர்ப்பிக்கும், மதிபாசமற்றதினடங்கிடும் = மேலான ஞானம் மதிக்கக்கூடிய பாசங்களை அறுத்து மனமொடுங்கி நின்று, அடக்கவே = அப்படியடங்கியவுடனே, மலைவின் மெய்ஞ்ஞானமயமாய் வரவுபோக்கற்ற நிலைகூடுமென = மலைவில்லாத மெய்ஞ்ஞானமயமாக இறப்பு பிறப்பு இல்லாத நிலை கைக்குங் கிட்டிவிடுமென்று, எனதுளே வந்துணர்வு தந்தகுருவே = எனதுள்ளத்தினுள்ள உணர்ச்சி கொடுத்த குருவே, துதிவாய்மை பெறுசாந்தமதியமே = துதிக்கக்கூடிய தன்மையைப் பெற்றிருக்கின்ற குளிர்ந்த சந்திரனைப்போன்ற ஒளியே, துரிசறுசுயஞ்சோதியே = குற்றமில்லாத சுயமான பேரொளியே, தோகைவாகன மீதிலங்கவருதோன்றலே = தோகைகளையுடைய மயிலில் இலங்குதற்கு அதன்மீது உட்காருபவனே, சொல்லரிய நல்லதுணையே = சொல்லமுடியாத நன்மையைச்செய்கின்ற துணையே, தநிபெறுஞ்சென்னை உண்மையைக் கொடுக்கின்ற சென்னை.

(க-ரை) சரியை கிரியையால் அசுத்த பாவனைபற்றுப்போகும் யோகம் சுத்தபாவனையினிற்கும், ஞானமானது மலங்களை அறுத்து சாதல் பிறத்தல் இல்லாதபடி செய்யும், இந்த உண்மைகளையெல்லாம் என்னுள்ளத்தில் நீ வந்து உபதேசித்தாய் மயில்மேன்பெறற்கு நீ அதன்மீது ஆரோகணித்தாய்.

(வி-ரை) வள்ளலார் இந்தச்செய்யுளில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு படிகளும் உயிர்களுக்கு வேண்டிய நன்மைகளைச் செய்கின்றன என்று மூன்றாகப் பிரித்தார். சரியை, கிரியை, (1) யோகம் (2) ஞானம் (3) மனந்தான் வீடுபெறற்கும் நரகடைதற்குங் காரணம் இதையொட்டியே அருணகிரிநாதரும் "நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந்துருக, தஞ்சத்தருள் சண்முகனுக்கியல் சேர்" "செஞ்சொற்புனைமாலை சிறந்திடவே, பஞ்சக்கரயானை பதம் பணிவாம்" என்று புகன்றிருக்கின்றார். மனம் மூன்று வகைப்படும். மேன்மனம், மனமனம், கடிமனம் என்றவைகளில் கடிமனம் கேவலமான நிலைமைக்குக் கொண்டுபோய்விடும், மனமனம் உயிரின் இயல்

பான நிலையிற்றெழுநிற்படவிடும், மன்மனம் மேலான நிலையிற்றோழு நிற்படுத்த ஏதுவாகிப் பயன்படும்.

காமவுட் பகைவனுங் கோபமெனுங் கொடியனுங்
கனலோப முழு மூடனும்
கடுமோக வீணனுங் கொடுமத மெனுந்துட்ட
கண்கெட்ட வாங்காரியும்
ஏமமறு மாச்சரிய விழலனுங் கொலையென்
றியம்பு பாதகனு மாமிவ்
வெழுவருமிவர்க் குற்றவுறவான பேர்களும்
என்னைப் பற்றிடாமலருள்வாய்
சேமமிகு மாமறையினோ மெனுமருட் பதத்தி
றனருளிமலய முனிவன்
சிந்தனையின் வந்தனையு வந்த மெய்ஞ்ஞான சிவ
தேசிக சிகாரத்னமே
தாமமொளிர் சென்னையிற் கந்த கோட்டத்துள்
வளர்தலமோங்கு கந்தவேளே
தண்முகத்துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே

(ப-ரை) காமவுட்பகைவனும்=மனதுள் நிகழ்கின்ற காமமென்ற விரோதியும் கோபமெனுங் கொடியனும்=கோபமென்று சொல்கின்ற கொடிய கெட்டவனும், கனலோப முழு மூடனும்=லோபமென்று சொல்கின்ற முழு முட்டாளும், கடுமோக வீணனும்=விடம் போன்ற மோகமென்று சொல்கிற வீணப் பயலும், கொடுமத மெனுந்துட்ட கண்கெட்ட வாங்காரியும்=கொடி துஷ்டத்தனஞ் செய்கின்ற கண் இல்லாத மதமாகிய ஆங்காரப் பயலும், ஏமமறு மாச்சரிய விழலனும்=நன்மைகளைக் கெடுக்கின்ற பயனில்லாத ஆச்சரியமும், கொலையென்றியம்பு பாதகனுமா மிவ்வெழுவரும்= பாதகமாகிய கொலை யென்று சொல்கின்ற இவர்களோடுற்ற எழு பேர்களும, இவர்க்குற்ற உறவான பேர்களும்=இவர்களுக்கு பந்துக்களானவர்களும், எனைப் பற்றிடாமலருள்வாய்=என்னைப் பிடித்துக் கொள்ளாமலிருப்பதற்கு அருள் புரிவாய், சேமமிகு

மாமறையின்=நன்மைகள் மிகுந்திருக்கின்ற இலக்குமி அருள் மிகுந்த வேதங்களெல்லாம், அருட்பதத்திறனருளிமலய முனிவன்= ஓம் என்று சொல்லக்கூடிய பிரணவ மந்திரத்தின் பலத்தை அகத்திய முனிவனுக்கு உபதேசித்து, சிந்தையின் வந்தயுனையுவந்தமெய் ஞான சிவதேசிகரத்தினமே=மனதில் வணங்குதல் செய்தால் சந்தோடத்தோடு ஏற்றுக்கொள்கின்ற உண்மையான அறிவுமயமாகிய தெய்வங்கட்கெல்லாம் முடியிலணிபத்தக்க இரத்தினமே, தாமமொளிர்சென்னை=மாலைகள் அழகுபடுத்துவதற்காக மலர்கின்றசென்னை.

(க-ரை) ஏழு விதமான பகைகள் இருக்கின்றன. அவைகளாவன, காமம், கோபம், லோபம், மோகம், அகங்காரம், ஆச்சரியம், கொலை, இவைகள் என்னைப் பற்றாதிருக்கவேண்டும்.

(வி-ரை) மனம்பெரும்பாலும் பலதொழில்களிலும் நிகழ்கின்றது. பெண்ணைப் பார்க்கின்ற கண்கள் மனதிற்கு அறிவிக்கின்றது. உடனே மனமானது மற்றும் அவையவங்களுக்கு அறிவிக்கின்றது. அது கருதியே இராமலிங்க சுவாமிகள் காமத்தை உட்பகைவன் என்று சொல்லுகின்றார். மனிதன் கற்றதெல்லாம் தர்மஞ்செய்ய வேண்டுமென்று, பின்னர் பிச்சைக்காரன் வந்து பிச்சை கேட்டால் அறிவு, கற்றதெலலாவற்றையும் மறந்து பிச்சை போடமாட்டேனென்றுசொல்கிறான். இங்கே அறிவு மடமை யாகிறது. அறிவில்லாது போனால் மூடன் என்று பெயர் பெறுகிறான். தான் ஒரு செயலைச் செய்யக்கூடாது என்று தெரிந்து கொள்கிறான் கண்ணிற் படுவன யாவும் அழியும் அழிந்து கொண்டிருக்கின்றதைப் பார்த்துக் கொண்டுமிருக்கின்றான். அப்படியிருந்தும் கண்ணுற்கண்ட பொருளின்மீது மோகிக்கின்றான். இது எப்படி இருக்கிறதென்று பார்த்தால் இது வீணத்தனமானது வீணத்தனம் என்பது, அறிந்தும் அறியாதுபோன்று பாசாங்குபண்ணுதல். ஆனதுபற்றி மோகத்தை வீணன் என்று சொல்லியிருக்கின்றார். நான் என்று சொல்வது, உயிருமல்ல உடலுமல்ல, ஊனுமல்ல, கையுமல்ல, காலுமல்ல, இப்படியிருக்க மனிதன் என்ன செய்கின்றான், நான் வீடு கட்டினேன். நான் கலியாணம் பண்ணினேன், என்று சொல்கிறான் இந்த நான்

என்பது அகப்பற்று, அப்புறமாக என்று என்பது புறப்பற்று என்று பெயர் பெறும். ஆகவே நான், எனது, என்ற அகப்பற்று, புறப்பற்று, விருப்பு, வெறுப்பை, உண்டுபண்ணும். விருப்பும், வெறுப்பும், நன்மை தீமையை உண்டுபண்ணும். நன்மை, தீமை இரண்டுமாகச்சேர்ந்து, பிறப்பு, இறப்பை உண்டுபண்ணும். இவ்விதமான கேடுகள் ஆங்காரஞ் செய்கிறது அறிந்தும் உயிர் ஆங்காரிக்கின்றது. ஆனதுபற்றி கண்கெட்ட ஆங்காரி என்று சொன்னார். ஒருவர்க்கும் பயன்படாத ஆச்சரியம் விளையும் ஆகையால் ஆச்சரியம் விழலன் என்று புகலப்பட்டது. கொலையானது பாதகமானது. ஒரு உயிரைக் கொலைசெய்துவிட்டால் கொலை செய்யப்பட்ட உயிரால் கொலை செய்த உயிர் திரும்பவும் கொலைசெய்யப்பட்டாகவேண்டும். இதுவே ஆகமங்கள் சொல்வது. இரண்டு காதையும் பொத்திக்கொண்டால் தன்னுள் ஓங்காரம் ஒலித்துக்கொண்டிருக்கும்.

நிலையுறு நிராசையாம் உயர்குலப் பெண்டிரொடு
நிகழ்சாந்தமாம் புதல்வனும்
நெறிபெறு முதாரணமென்னு நற்பொருளு
மருணீக்கு மறிவாந்துணைவனும்
மலைவறு நிராங்கார நண்பனுஞ் சுத்தமுறு
மனமென்னு நல்லேவலும்
வருசகல கேவலமிலாதவிடமும் பெற்று வாழ்கின்ற
வாழ்வருளுவாய்
அலையிலாச் சிவஞானவாரியே ஆனந்த அமுதமே
குமுதமலர்வா
யணிகள் பொற்கொடி பசுங்கொடியிருபுரம் படர்ந்தழகு
பெறவரு பொன்மலையே
தலைவர் புகழ் சென்னையிற் கந்தகோட்டத்து வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே (7)

(ப-ரை) நிலையுறு நிராசையாமுயர்குலப் பெண்டிரொடு = நிலைத்தலைச் செய்கின்ற உயர்ந்த குலத்து மனைவியொடு, நிகழ்சாந்தமாம்

புதல்வனும்= நடைமுறையிற் சாந்தமென்று சொல்கின்ற மகனும், நெறிபெறு முதாரகுணமென்னு நற்பொருளும்=முறையான வழியினைத்தருகின்ற முதாரகுணமென்று சொல்லக்கூடிய நல்ல பொருளும், மருணீக்கு மறிவாந்துணைவனும்= துர்ப்புத்திகளைக் களைந்தெறிகின்ற அறிவாகிய சகோதரனும், பலைவறு நிராங்கார நண்பனும், மலைத்தல் என்பது இல்லாதநிராங்காரமென்ற நண்பனும், சுத்தமுறு மனமென்னு நல்லேவலும்=சுத்தத்தைக் கொடுக்கின்ற மனமென்று சொல்லக்கூடிய நல்ல வேலைக்காரனும், வருசகல கேவலமிலாதவிடமும் பெற்று வாழ்கின்ற வாழ்வருளுவாய் = வந்து கொண்டிருக்கின்ற சகலம் கேவலம் என்று சொல்லக்கூடிய பேதங்களற்ற இடத்தைப்பெற்று வாழ்கின்ற வாழ்க்கையைத் தரவேண்டும், அலையிலாச் சிவஞானவாரியே = சலனத்தைச் செய்கின்ற அலையில்லாத சிவஞானக்கடலே, ஆனந்தவமுதமே= ஆனந்தமாக இருக்கின்ற உண்டியே, குமுதமலர் வாயணிகள்= தாமரை மலர்களைப் போன்றிருக்கின்ற நிலையில், பொற்கொடி = வள்ளியம்மை, பசுங்கொடி= தெய்வயானை, யிருபுறம் படர்ந்தழகு பெறவரு பொன்மலையே=இரண்டு பக்கங்களிலுங் கொடிபோன்று அணைந்ததா லழகாகவிருக்கின்ற செவந்த நிறத்தையுடைய செம்பொன் மலையே, தலைவர் புகழ் சென்னை= தலைவன் புகழக்கூடிய சென்னை.

(க-ரை) நிராசையென்ற மனைவி, சாந்தமென்ற புதல்வன், முதாரகுணமென்ற பொருள், அறிவாகிய சகோதரன், நிராங்கார நண்பன், நல்லமனமாகிய வேலைக்காரன், ஆகிய இவர்களோடு வாழ வேண்டும்.

(வி-ரை) வள்ளலார் (இச்சை, கிரியை) இந்தசக்திகளும் வள்ளியம்மை, தெய்வயானையாக இருக்கின்றார்கள். இவர்களிருவரையும், படர்கின்ற பசுங்கொடியாக உவமித்து, இக்கொடிகள் பற்றுவதற்குரிய மலையாகவும் அவைகள் நிற்கின்ற இடமாகவும் சண்முகக் கடவுளை மலையென்று சொல்கின்றார். முருகன் சிவந்த ரூபமுடையவனாதலால், செம்பொன்மலை என்று சொன்னார். இறைவன், பிறத்தல், இறத்தல், என்ற இரண்டு தொழில்களையுஞ் செய்யாதவனானபடியினால் அலையிலாச் சிவஞானம் என்று சொல்கின்றார். சலனமில்லா

தது. கடலானது பெரும்பாலும் ஓயாது சலித்துக் கொண்டிருக்கும். சிவஞானக்கடலை சலித்தற்றொழிலைச் செய்யாது. கடல் பெரும்பாலும் உயர்வு பெற்றது.

ஒருமையுட னினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர் தம்உறவு வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவா
ருறவு கலவாமை வேண்டும்
பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண்டும்
பொய்மைபேசா திருக்கவேண்டும்
பெருநெறி பிடித்தொழுக வேண்டு மதமான
பேய்பிடியா திருக்க வேண்டும்
மருவுபெண் ணாசையை மறக்கவே வேண்டும்
உனைமறவா திருக்க வேண்டும்
மதிவேண்டும் நின்கருணை நிதி வேண்டும்
நோயற்ற வாழ்வினான் வாழவேண்டும்
தருமமிகு சென்னையிற் கந்தகோட்டத் துள்வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே (8)

(ப-ரை) ஒருமையுடன் உனதுதிரு மலரடி நினைக்கின்ற உத்தமர்தம் உறவுவேண்டும் = ஒன்றித்து வேறு செயலின்றி உனது திருமலரனைய திருவடியை நினைத்துக் கொண்டிருக்கின்ற உத்தமர்களுடைய நட்பு வேண்டும், உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுபவர் = மனதில் ஒன்றும் வாக்கிலொன்றும் வைத்துப்பேசுகின்றவர்கள், உறவு கலவாமை வேண்டும் = நட்பானது என்னைச்சேராமலிருக்கவேண்டும், பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண்டும் = பெருமையைக் கொடுக்கின்ற உன்னுடைய புகழைப்பேசவேண்டும், பொய்மை பேசாதிருக்கவேண்டும் = பொய்நான் பேசாமலிருக்க வேண்டும், பெருநெறி பிடித்தொழுக வேண்டும் = தவறுதலில்லா பெரிய வழியைப் பிடித்து நடக்கவேண்டும், மதமான பேய் பிடியாதிருக்கவேண்டும் = மதமென்று சொல்கின்ற பேய் பிடியாமலிருக்க

வேண்டும் மருவு பெண்ணாசையை மறக்கவே வேண்டும்=கூடுதற்றொழிற்கெனப் பெண்ணாசையை வைத்துக் கொள்ளாது மறக்க வேண்டும், ஏகாரம் வற்புறுத்தற்பொருட்டு வந்தது. உனைமறவாதிருக்கவேண்டும்=உன்னை யான் மறந்துவிடாமலிருக்கவேண்டும், மதிவேண்டும்=புத்தி வேண்டும், நின்கருணைநிதி வேண்டும்=உன்னுடைய கருணையாகிய செல்வம் வேண்டும், நோயற்றவாழ்வினான் வாழ வேண்டும்=நோயில்லாத வாழ்க்கையில் யான் வாழ்ந்து கொண்டிருக்க வேண்டும், தருமமிகு சென்னை=தருமங்கள் மிகுந்திருக்கின்ற சென்னை.

(க-ரை) அகத்தும் புறத்தும் ஒருமித்துக் கடவுளை வழிபாடு செய்யவேண்டும். உன்னை எக்காலத்தும் மறவாமலிருக்கவேண்டும். நான் நோயற்ற வாழ்க்கையிலே வாழ்ந்துகொண்டிருக்கவேண்டும்.

(வி-ரை) வள்ளலார் இந்தச் செய்யுளில் என்ன சொல்கின்றார் என்று பார்த்தால் சேக்கிழார் பெருமான் திருவெற்றியூரில் சங்கிலி நாச்சியார் செய்கின்ற திருப்பணியின் மூலமாகத் தெரிகின்றோம்; "அன்பு நாராயஞ்செழுத்தா னெஞ்சு தொடுக்க அலர் தொடுத்தே, என்புள்ளுருக்குமடியாரை இடையிற்றொழுது வேறிடத்து, முன்பு போலத் திரைச்சீக்கி முதல்வர் சாத்துப்பணி கொடுத்து, மின்போல் மறையுஞ்சங்கிலியார் தம்மை விதியாற் கண்ணுற்றார்" என்று சொல்லியிருக்கின்றார். நோயில்லாத வாழ்க்கை ஜீவன் முத்தர்களுக்குக் கூட வேண்டியதுதான். அந்த நிலை இல்லாது போனால் இறைவழிபாடு புரியவும், திருமூலருங்கூட இந்த உடம்பினை இது கருதியே ஓம்புதல் செய்யவேண்டுமென்று சொல்கின்றார். உடலை ஓம்புதல் கடனாம்.

யென்று நாமொருவரிட நின்று கோளாத இயல்பு
மென்னிட மொருவரீ
திடுவென்ற போதவர்க் கிலையென்று சொல்லாமல்
இடுகின்ற திறமுமிறையாம்
நீ யென்று மெனைவிடா நிலையுநானென்று முன்

நினைவிடா நெறியுமயலார்
நிதியொன்று நயவாத மனமுமெய்ந்நிலையென்று
நெகிழாத திடமுமுலகிற்
சீயென்று பேயென்று நாயென்று பிறர்தமைத்
தீங்கு சொல்லாத தெளிவும்
திரமொன்று வாய்மையும் தூய்மையுந் தந்துநின்
திருவடிக் காளாக்குவாய்
தாயொன்று சென்னையிற் கந்தகோட்டத்துள்
வளர்தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே (9)

(ப-ரை) ஈயென்று நானொருவரிடநின்று கேளாத இயல்பும்=நான் ஒருவரிடத்திலே எனக்கு இதைக் கொடு என்று கேட்காத செல்வமும், என்னிடமொருவரீ திடுவென்றபோதவர்க்கிலையென்று சொல்லாமல் இடுகின்ற திறமும=என்னிடத்தில் ஒருத்தர் வந்து இந்தப் பொருளை எனக்குத் தா என்று கேட்டால் நான் அவர்களுக்கு இல்லை என்று சொல்லாமல் கொடுக்கக்கூடிய பலத்தைத் தரவேண்டும், இறையாம்=கடவுளாகிய, நீயென்று மெனைவிடா நிலையும்=நீ எனை எப்பொழுதும் விட்டுவிடாத நிலையும்,நானென்று முன் நினைவிடா நெறியு=நான்எப்பொழுதும் என் மனதுள் உன்னை விடாத நெறியும், அயலார் நிதியொன்று நயவாத மனமும்=மற்றவர்களுடைய பணத்தைக் கொள்ளுவதற்கு நினையாத மனமும், மெய்ந்நிலையென்று நெகிழாத திடமு=உண்மையான நிலையென்றைக் குட்நெகிழ்ந்துவிடாத திடத்தையும்,உலகிற்=உலகத்திலே,சீயென்று, பேயென்று, நாயென்று=சீயென்றும், பேயென்றும், நாயென்றும், பிறர்தமைத் தீங்கு சொல்லாத தெளிவும்=மற்றவர்களைத் தீங்கு சொல்லாத தெளிவும்=தீங்கான வார்த்தைகளைச் சொல்லக்கூடாத தெளிந்த தன்மையும், திரமொன்று வாய்மையும்=திரம் ஒன்றக் கூடிய வாய்ம்மையும், தூய்ம்மையுந் தந்து நின்றிருவடிக் காளாக் குவாய்=தூய்மையைக் கொடுத்து உன்னுடைய திருவடியினுக்கு ஆளாக்குவாய், தாயொன்றுசென்னை=தாய்த்தன்மை கொண்டிருக்கின்ற சென்னை.

(க-ரை) நான் பிச்சை கேட்கக்கூடாது. என்னிடம் பிச்சை கேட்க வருகின்றவர்களுக்கு நான் இல்லை என்று சொல்லக்கூடாது. நீ எப்பொழுதும் என்னை விடக்கூடாது. நான் எப்பொழுதும் உன்னை நினைக்காமலிருக்கக்கூடாது. உன்னுடைய திருவடிக்கு என்னை ஆளாக்கவேண்டும்.

(வி-ரை) வள்ளலாரது உள்ளமானது மிகுந்த உயர்வு கொண்டிருக்கின்றது. நானும் பிச்சை எடுக்கக்கூடாது, பிச்சை எடுப்பவர்களுக்கும் நான் இல்லையென்று சொல்லக்கூடாது. முதலாவது இயல்பு என்று தன்மையைக் குறித்தார். அடுத்தவர்களுக்குபிச்சை இடவேண்டிய காலத்தில் என்னுடைய மனமானது இடவேண்டுமென்ற திறத்திலிருக்கவேண்டும். என்னுடைய மனமானது அயலாருடைய பணத்தைத் திருடக்கூடிய மனமானது என்னிடத்திலிருக்கக்கூடாது. வாய்மையும் தூய்மையும் உடையவனாக இருக்கின்றேன். இனிமேலும் அப்படியே இருக்கவேண்டும். வாய்மையுடையவனாக இருத்தலும் தூய்மையுடையவனாக இருத்தலும் பக்தி செய்வதற்கு வழி. பக்தி செய்வதற்குறிய முக்கிய முதற்படி இதுதான்.

கரையில் வீண்கதை பெலாமுதிர் கருங்காக்கை
போற் கதறுவார் கள்ளுண்டறீக்
கந்த நாறிட வுக்கை காத நாறிட வுறுகடும்
பொய்யிரு காதநாற
வரையில் வாய் கொடுதர்க்க வாதமிடுவார் சிவமணங்
கமழ் மலர்ப் பொன் வாய்க்கு
மவுனமிடு வாரிவரை மூடரெனவோ தருவழக்கு
நல் வழக்கெனினு நான்
உரையிலவர் தமையுறாதுனது புகழ் பேசும்
வரோடுறவு பெறவருளுவாய்
உயர் தெய்வயானையொடு குறவர் மடமானுமுள்
உவப்புறு குணக்குன்றமே
தரையிலுயர் சென்னையிற் கந்தகோட்டத்துள்
வளர்தலமோங்கு கந்தவேளே

*தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி*
*சண்முகத் தெய்வமணியே* (10)

(ப-ரை) கரையில் வீண்கதை யெலாமுனிர் கருங்காக்கைபோற் கதறுவார் = காகங்களானது கரைந்து தன்னினத்தை யெல்லாஞ் சேர்த்து பெரிய காக்கையைப் போன்று, கள்ளுண்டுழிக் கந்த நாறிட = கள் சாப்பிட்டதால் வீச்சம் அடித்திட, ஊத்தை காதம் நாறிட = இருந்த வாந்தியானது ஒரு காதத்துக்கு நாறிடவும், உறு கடும் பொய்யிரு காதநாற = அச்சமயத்திற் பேசுகின்ற பொய் இரு காதம் நாறிடவும், வரையில் வாய் கொடுதர்க்க வாதமிடுவார் = எல்லையில்லாத வாய்ப்பேச்சுக்களினால் தர்க்கமும் வாதமுஞ் செய்வார்கள், சிவமணங் கமழ் மலர்ப் பொன்வாய்க்கு = சிவமணமானது திகழ்ந்துகொண்டிருக்கின்ற மலர்போன்ற பொன் வாயைப் பெற்றவர்கள், மவுனமிடுவாரிவரை = பேசாது மவுனமாக இருப்பார்கள் இவர்களை, மூடரென வோதுறுவழக்கு நல்வழக்கு நல்வழக்கெனினும = மூடர்கள் என்று சொல்கின்ற வழக்கு நல் வழக்குதான். ஆனாலும், நான் உரையிலவர்தமை யுன்றனது புகழ் பேசுமவரோடுறவு பெறவருளுவாய் = நான் பேசுகின்ற பேச்சுக்களிலே கூட அவர்களைப் பற்றிய பேச்சுக்களிருக்கக்கூடாது உன்னுடைய புகழையே ஓயாது பேசிக்கொண்டிருப்பவர்களோடு என்னுடைய நட்பு இருக்கவேண்டுமாறு நீ அருள் புரியவேண்டும், உயர் தெய்வயானையொடு = உயர்வாகிய இந்திரன் மகளாகிய தெய்வயானையோடும், குறவர் மடமானொடு = வேடுவனாகிய நம்பிராசன் மகள் வள்ளியம்மையோடும், உள் உவப்புறு குணக்குன்றமே = மனதினுள் உவந்து கொண்டிருக்கின்ற நல்ல குணத்தினைப் படைத்திருக்கின்ற மலையே தரையிலுயர் சென்னை = தரையிலுயர்ந்திருக்கின்ற சென்னை.

(க-ரை) உன்னைப் பேசாமல் வீணாக மக்கள் பொழுதைப் போக்குகின்றனர். அவர்களைப்பற்றி யான் பேசாதிருக்கவேண்டும். ஓயாது உன்னைப் பேசுகின்றவர்களோடு எனக்கு நட்பு வேண்டும்.

(வி-ரை) வள்ளலார் பஞ்சமாபாதகங்களைச் செய்கின்றதற்கு ஏதுவாக இருக்கின்ற கள் குடியையும் அதனால் வருகின்ற விபரீதங்

களையும் பற்றிப் புகன்றிருக்கின்றார். புகழேந்திப் புலவர் "காதல் கவறாடல் கள்ளுண்ணல் பொய்மொழிதல், ஈதல் மறுத்தல் இவை கண்டாய்—போதிற் சிலையாமை வைகும் திருநாடனே செம்மை, நிலையாமை பூண்டார் நெறி" என்று பேசியிருக்கின்றார். மேலே சொல்லிய செய்யுளை நளவெண்பாவில் இறையை வணங்கி அருள் பெறவேண்டாதார் கொள்கின்ற நெறியாகக் காண்பிக்கின்றார்.

நாம்பிரம நமையன்றியாம் பிரமம் வேறில்லை
நன்மை தீமைகளுமில்லை
நவில்கின்ற வாதிபாந்தரமிரண்டினு மொன்ற
நடுநின்றதென்று வீணுள்
போம்பிரம நீதி கேட்போர் பிரமையாகவே
போதிப்பர் சாதிப்பர் தாம்
புன்மைநெறி கைவிடார் தம்பிரம விளையொன்று
போந்திடிற் போகவிடுவார்
சாம்பிரமமாமிவர்கள் தாம்பிரமமெனு மறிவு தாம்பு
பாம்பெனு மறவுகாண்
சத்துவ வகண்ட பரிபூரணாகாரவுபசாந்த
சிவசிற்பிரம நீ
தாம்பிரிவில் சென்னையிற் கந்தகோட்டத்துள்
வளர்தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்பமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே (11)

(ப-ரை) நாம்பிரம நமையன்றியாம் பிரம வேறில்லை= நாமே கடவுள் நம்மைத் தவிர கடவுள் என்ற வேறொன்றில்லை, நன்மை தீமைகளுமில்லை= நன்மையாவது தீமையாவது வேறு கிடையாது நவில்கின்ற ஆதியாந்தரமிரண்டினு மொன்ற நடுநின்ற தென்று வீணுள்= என்று சொல்கின்றவர்கள் ஆதியும் நடுவும் இரண்டும் ஒன்று பேரறிவும் சிற்றறிவும் ஒன்று என்றும் உயிரும் இறையும் வேதாகமங்களைப் போன்று பிரிக்கப்படாது என்று சொல்லிக் கொண்டு வீணுகப் பல நாட்கள், போம்பிரம நீதிகேட்போர்= இருத்தலில்லாது இறப்பதற்கு நீதி கேட்போர்கள் பிரமையாகவே

போதிப்பர் சாதிப்பர்=தங்களுக்கே புரியாதபடிசாதித்துப்போதித்துக்கொண்டிருப்பார்கள், தாம்புன்மை நெறி கைவிடார்=தங்களுடைய கெட்ட வழியைக் கைவிடமாட்டார்கள், தம்பிரமவினையொன்று போக்திடிற் போகவிடுவார்= அவர்களைப் பிரமமாக நினைத்துக்கொண்டிருக்கின்றவர்களைச் சோதித்துப்பார்க்கின்ற காலத்தில் அந்த நிலையைப் போக்கடித்துக் கொள்வார்கள், சாம்பிரமமாமிவர்கள்=இவர்கள் எல்லோரும் இறந்து போகப் போகின்ற கடவுட்கொள்கையர். அவர்களுடைய, தாம்பிரமமெனுமறிவு = தாங்கள் பிரமமென்று அறிவானது, தாம்பு பாம்பெனுமறிவுகாண்= இருட்டிற் கிடக்கின்ற கயிறு பாம்பென்று சொல்கின்ற அறிவைப் போன்றது, சத்துவ=சத்துவத்தன்மை, அகண்ட பரிபூரண= அளவில்லாது எங்கும் நிறைந்திருக்கின்ற சேர்க்கவேண்டியதில்லாத பரிபூரணமாகவும், உபகார=உயிர்களுக்கு உதவியாகிய, உபசாந்த சிவ=பிரதியாகிய சிவனுக்குரிய சாந்தமாகியும், சிற்பிரமநீ=சித்துமயமாக இருக்கின்றவன் நீ, சாம்பிரிவில்=நாடுகளைப்பிரியாத சென்னை தலைமையாகிய சென்னை என்று பொருளாகும்.

(க-ரை) நான் கடவுள், நம்மை கடவுளில்லையென்று சொல்கின்றவர்கள் செத்துப்போகின்றவர்கள். கயிற்றைப் பாம்பென்று சொல்கின்ற நிலையிலிருக்கின்றது, எங்கும் நிறைந்தவன் வியாபித்தவன் சித்து ரூபமாக இருக்கின்றவன். அறிவானது கண்டுகொள்ள நிற்பவன். சாந்தத்தின்கண்ணே இருக்கின்றவன்.

(வி-ரை) வள்ளலார் மேலே சொல்லிய செய்யுளில், ஏகான்மவாதம், மாயாவாதம், போலி வேதாந்தம், இவைகளை நன்றாகக் கண்டித்திருக்கின்றார். ஏகான்மவாதத்தை மாத்துவர் கொள்கையோடு கண்டிக்கின்றார் நான் கடவுள், கடவுள் என்று ஒன்று கிடையாது என்று சொல்கிறவர்கள், தாங்கள் கடவுளாவார்களா என்று சோதிக்கப் போகின்ற காலத்திலே, அவர்கள் அழுவார்கள், கூக்குரலிடுவார்கள். கடவுளானவனுக்கு இன்பமுந் துன்பமுங் கிடையாதென்பதைமறந்துவிடுவார்கள். இந்த நிலை வருகிற காலமானது எப்படி இருக்கிறதென்று பார்த்தால், கயிறு கிடக்கின்றது,

அதைப் பார்க்கின்றோம். உடனே பாம்பாகத்தெரிகின்றது. உடனே கயிற்றைப் பாம்பு என்று எண்ணிக்கொள்கின்றான். அதுபாம்பல்ல பாம்பின்உரு வெளித்தோற்றத்தைக் காண்பிக்கின்றது. உயிர் இருக்கின்றது. பார்க்கின்ற காலத்து இறையைப் போன்று தோன்றுகின்றது உண்மையிற் சடத்தில் நிலைத்திருக்காலத்து உயிரானது கடவுளில்லை. அறிந்தும், அறியாதும் உயிரறிவு தொழிற்படுகின்றது. கந்தபுராணத்துள் மாயவாதத்தைப் பற்றிச்சொல்கின்றார். "கருமஞ் செய்க தவறுளபாபமாங், கருமஞ் செய்யற்க என்பர் கருத்திலார், இருமை தன்னையும் யாவர் செய்தாலுமே. வருவதொன்றிலை மாயம் வித்தாருமே" என்று காண்கின்றோம். இந்தநிலையிலே பார்க்கின்ற காலத்திலே மாயாவாதத்தோடு புத்தமதத்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டியதாகிறது.

உலோகாயதம், பஞ்சராத்திரம், சாங்கியம், மீமாஞ்சை, போலி வேதாந்தம் (உண்மை வேதாந்தமன்று) பௌத்தம், சமணம், முதலிய பல சமயங்களை கண்டித்திருக்கின்றார். உண்மை வேதாந்தம் சுத்தாத்துவித சித்தாந்தம் முதலியவைகளை ஒத்துக்கொள்கின்றார்.

பார்கொண்ட நடையில் வன்பசி கொண்டு வந்திரப்பார்
முகம் பார்த்திரங்கும்
பண்புநின் திருவடிக் கன்புநிறை ஆயுளும்
பதியுநன்னிதி யுமுணர்வும்
சீர்கொண்ட நிறையுமுட் பொறையுமெய்ப் புகழுநோய்த்
தீமையொரு சற்று மணுகாத்
திறமுமெய்த் திடமுநல் லிடமுநின் னடியர்புகழ்
செப்புகின் றோரடைவர் காண்
கூர்கொண்ட நெட்டிலைக்கதிர் வேலுமயிலு மொரு
கோழியங் கொடியும் விண்ணோர்.
கோமான்றன் மகளுமொரு மாமன்றன் மகளுமால்
கொண்டநின் கோலமறவேன்
தார்கொண்ட சென்னையிற் கந்த கோட்டத்துள்
வளர்தலமோங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே (12)

(ப-ரை) பார்கொண்ட நடையில் வன்பசி கொண்டு வந்திரப் பார் முகம் பார்த்திரங்கும் பண்பும்=உலகத்திலே உள்ள நடைப் படி பசிகொண்டு பசிக்கு உணவு கேட்டு பிச்சை யெடுக்கின்றவர் களைப் பார்த்து இரங்கக்கூடிய தன்மையும், நின்றிருவடிக்கன்பு= உன் திருவடிக்குறிய பற்றும், நிறைபாயுளும், உடைய நிறைந் திருக்கின்ற ஆயுளும், பதியுநன்றிதியுமுணர்வும் = உணர்ச்சியும் பொருளும் அன்போடு பதியவும், சீர்கொண்ட நிறையுமுட் பொ றையு மெய்புகழும்=திருவினை அளிக்கின்ற (கல்வி) நிறைந்த தன் மையும் அளவு கடந்த (பொருமை) சாந்தமும், மெய்ப்புகழும்=மே லே சொல்லிய இரண்டினுலும் வருகின்ற உண்மையான புகழ்ச்சி யும், நோய்த்தீமைபொரு சற்றுமணுகாத்திறமும் மெய்த்திடமும்= நோயினுலடைகின்ற தீமையின்றி அது என்னை கொஞ்சமேனு நா டாதபலமும் அதன் மேல் என் சரீரத் திடமும். நல்லிடமும்=நல்ல வர்கள் கூடி வாழ்கின்றதாகிய இடமும், நின்னடியார்புகழ் செப்புகின் றோரடைவர்காண்=உன்னுடைய அடியவர்களுடையபெருமையைப் பேசிக் கொண்டிருப்பவர்கள் பெறுவார்கள், காண்=அசை, கூர் கொண்ட நெட்டிலைக்கதிர் வேலுமயிலுமொரு கோழியங்கொடியும் விண்மீனூர் கூர்மை பொருந்திய நீண்ட அலகுகளையுடைய பிரகாசிக் கின்ற வேலாயுதமும், மயிலும் மேன்மைபொருந்திய கோழிக்கொடி யும் மீதவர்கள் கோமான்றன் மகளும்=அரசனுகிய தேவேந்திரன் மகளும், ஒருமாமான்றன் மகளும்=தன்னேரில்லா பெரிய மானின் மகளும், மால்கொண்ட நின் கோலமறவேன்=அழகு பொருந்திய உன்னுடைய பேரழகை மறக்கேன், தார்கொண்ட சென்னை=பூமி தன்னிடமாக வைத்துக் கொண்டதாற் பெருமை பெற்றிருக்கின்ற சென்னை.

(க-ரை) உன்னுடைய அடியார்களுடைய பெயரைச் சொல்லி அவர்களையே புகழ்ந்து கொண்டு மேலான சீருஞ் சிறப்பும் பெற்று மேன்மையை அடைவார்கள்.

(வி-ரை) இச் செய்யுள் சிவஞான போதம் "செம்மலர் நோன் றாள் சேரலொட்டா, வம்மலங் கழீஇ, அன்பொடு மரீஇ, மாலற நேயம் மலிந்தவர் வேடமு, மாலயந் தானு மரனெனத் தொழுமே" என்றபன்னிரண்டாவது சூத்திரத்தை ஒத்திருக்கின்றது "தில்லை வாழந்தணர் தம்மடியார்க்கு மடியேன்" என்று புகன்றிருக்கின்ற சுந்தர மூர்த்தி சாமிகள் தேவாரத்தையும் போன்று அடியாரை மேலாகப் போற்றுகின்றது

வன்பெரு நெருப்பினைப் புன்புழு பற்றுமோ
 வானையொரு மான்றாவுமோ
வலியுள்ள புலியையோர் எலிசீறுமோ பெரிய
 மலையையோ ரீச்சிறகினால்
துன்புற வசைக்குமோ வச்சிரத் தூணொரு
 துரும்பினாற் றுண்டமாமோ
சூரியனை இருள்வந்து சூழுமோ காற்றின்மழை
 தோயுமோ வில்லையது போல்
அன்புடைய நின்னடியர் பொன்னடியை யுன்னுபவர்
 அடிமலர் முடிக்கணிந்தோர்க்
அவலமுறுமோ காம வெகுளியுறுமோ மனக்
 கற்பமும் விகற்பமுறுமோ
நன்புகழ்ச் செய் சென்னையிற் கந்தகோட்டத்துள்
 வளர் தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
 சண்முகத் தெய்வமணியே 13

(ப-ரை) வன்பெரு நெருப்பினை புன்புழு பற்றுமோ = வலிதாகிய பெரிய நெருப்பை புன்மையாகிய சிறிய புழுப்பற்றிக்கொள்ளுமோ, வானை யொரு மான்றாவுமோ = ஆகாயத்தை மானானது தாவிப்போகுமோ, வலியுள்ள புலியையோர் எலிசீறுமோ = பலம் பொருந்திய புலியைச் சிறிய எலியானது கோபித்துக் கொள்ளுமோ, பெரிய மலையையோர் ஈ சிறகினால் துன்புற அசைக்குமோ = பெரியதாகிய மலையை சிறியதான ஈ தனது சிறகுகளினால் இருப்பை விட்டு அசையும்படி செய்யுமோ, வச்சிர தூணொரு துரும்

பிறாற்றண்டமாமோ = வச்சிரத்தாலாகிய தூண் ஒரு துரும்பினல் துண்டாகப்போமோ, சூரியனை இருள்வந்தாகுழுமே = இருளானது சூரியனைப் பற்றிக்கொண்டு ஒளியை மறைக்குமோ, காற்றின் மழை தோயுமோ = மழையானது காற்றை நனைத்துவிடுமோ, இல்லை யதுபோல் = மேலே சொல்லியவைகளெல்லாம் இல்லை அதைப் போல, அன்புடைய = அன்பினையுடைய, நின்னடியர் பொன்னடியை யுன்னுமவர் = உன்னுடைய அடியார்களுடைய பொன்போன்ற திருவடியை ஓயாது துதித்துக்கொண்டிருப்பவர்கள், அடிமலர் தலைக்கணிந்தோர் = அவர்களுடைய திருவடியை தலையில் சூடிக் கொண்டவர்களுக்கு, அவலமுறுமோ = இழிந்தநிலைவருமோ, காம வெகுளியுறுமோ = காமத்தால் உண்டான செயல் வருமோ கோபம் உண்டாகுமோ, மனத்தற்பமும் விகற்பமுறுமோ = மனதின் கண் கொஞ்சங் பேதங்கள் தோன்றுமோ, தன்புகழ்செய்சென்னை = உன்னுடைய புகழை அது தன் புகழாகக் கந்த கோட்டமென்ற வடபழனியை வைத்துக்கொண்டிருக்கின்ற சென்னை.

(க-ரை) உன்னுடைய அடியார்களுடைய திருவடியை நினைத்துக் கொண்டிருக்கின்ற அடியார்களுக்கு, காமத்தோடு கூடுகின்ற சகலவிதமான பேதங்களு வந்தடைய மாட்டாது.

(வி-ரை) இறையானவன் சூரியனை அருட்பிழம்பாக இருக்கின்றான். உலகத்தில் மாயை, கன்மம், ஆணவம், திரோபவம், மாயேயம், என்றவைகளெல்லாம் அவனைப் போய்ச் சேருமா. இருள் சூரியன் ஒளியை மறைக்கமுடியாது. தண்ணீரைக் காற்று சலித்து உலரவைத்துவிடும், ஆனல் காற்றைத் தண்ணீர் நனைத்துவிட முடியாது. இந்த நிலையானது உயிரின்றன்மையில் ஏற்றிப்பார்க்க வேண்டிய நிலையிலிருக்கிறது.

கானலிடை நீருமொரு கட்டையிற் கள்வனுங்
காணுறு கயிற்றிலரவுங்
கடிதருகிளிஞசிலிடை வெள்ளியும் பொன்னைக்
கதித்த பித்தனையினிடையும்

மானலிற் கண்டுள மயங்கல்போற் கற்பனையை
மாயையிற் கண்டுவினை
மனையென்றுமகவென்று முறவென்று நிதியென்றும்
வாழ்வென்றும் மானமென்றும்
ஊனலினுடம்பென்று முயிரென்று முளமென்று
முள்ளென்று வெளி யென்றுவான்
உலகென்று மளவறுவிகாரமுற நின்றவெனை
உண்மை அறிவித்த குருவே
தானமிகு சென்னையிற் கந்தகோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே (14)

(ப-ரை) கானலிடைநீரு=வெயிலினுடைய வேனலைப் பார்த்து நீராகத்தோன்றும், ஒரு கட்டைகிற்கள்வனும்=இருட்டிற் கிடக்கின்ற கட்டை கள்வனைப்போன்றும், காணுறுகயிற்றிலரவும்=பார்க்கின்ற கயிறு பாம்பு போன்றும், கடிதரு கிளிஞ்சிலிடை வெள்ளியும்=அழகான முத்துச்சிப்பி வெள்ளி போன்றும், பொன்னைக் கதிக்க பித்தளையினிடமும்=பொன்னானது துலக்கிய பித்தளையிற் றோன்றுதலும், மானலிற் கண்டுள மயங்கல்போல்=மயங்கி கற்பனையிற் கண்டு உள்ளமானது மயங்குவதுபோல கற்பனையை மாயையிற் கண்டு வினை=ஒன்றிற்கும் உதவாத கற்பனையாகிய நிலை மாயையிலே வீணாகக் கற்பித்து, மனையென்றும், மகவென்றும், உறவென்றும், நிதியென்றும், வாழ்வென்றும், மானமென்றும், ஊனலில் உடம்பென்றும்=மனைவியென்று சொல்லியும், பிள்ளையென்றும், பந்துக்கள் என்றும், பணமென்றும், வாழ்க்கையென்றும், அபிமானமென்றும், ஊனாற்பொதியப்பட்டிருக்கின்றஇந்தஉடம்புதானென்று சொல்லியும், உயிரென்றும் உளமென்றும் உள்ளென்றும் வெளியென்றும் வான்உலகென்றும்=உயிர்தான் என்றும், உள்ளந்தான் என்றும், உள்ள உணர்வுதான் என்றும், வெளியுள்ள பொருளென்றும், தேவருலகமென்றும், அளவறுவிகாரமுற நின்றவெனை=பலவாறு சிந்தித்து பேதமில்லாத அளவிற்குட்படாத பரம்பொருளை

நினைத்துக்கொண்டிருக்கின்ற என்னை, உண்மை அறிவித்த குருவே= உண்மைப் பரம்பொருள் இதுதான் என்று கண்டுகொள்ளக்கூடிய நிலையில் அறிவித்து உபதேசித்த குருவே, தானமிகுசென்னை= எங்கனும் மில்லாத சிறப்பானதும் மேலானதுமாகிய பலவிதமான தானங்களை செய்கின்ற சென்னை.

(க-ரை) உண்மையல்லாத பொய்ப்பொருளை எல்லாம் உண்மைப் பொருள் என்று நினைத்துக்கொண்டும், கற்பனையாக என்னைச் சுற்றிக்கொண்டிருக்கின்றவைகளைச் சதமாக எண்ணிக்கொண்டு மிருந்த என்னை அவைகள் அழிவன என்றும், உனது உண்மைநிலை இதுவென்றுந் தெரிவித்தனை.

(வி-ரை) ஒரு பெரிய பாலைவனத்தில் ஒருவன் நடந்து செல்கிறான். அப்பொழுது தாகங்கொள்கிறான். தாகங்கொண்ட உடனே தண்ணீர் வேண்டுமென்ற ஆசை உண்டாகிறது, வெகு தூரத்திலே நோக்குகின்றான் அப்படி நோக்கிய உடனே கானலானது தண்ணீர் மாதிரி தெரிந்து கொண்டிருக்கின்றது, இவன் அதைநாடிச்செல்லச் செல்ல அதுவுஞ் சென்றுகொண்டிருக்கின்றது, தண்ணீரல்லாதகானல் தண்ணீர்மாதிரிதன்னை தெரியவொண்ணுதபடி ஏமாற்றிக்கொண்டே செல்கிறது, அது கானல்தான் என்று ஏமாற்றமடைந்த உயிர்கண்ட உடனே, தனது ஏமாற்றத்தையும் கானலது சாமர்த்தியத்தையும் பார்த்து, மிரண்டு பயந்து உண்மையாகத் தண்ணீர் உள்ள தானே தெரிந்துகொள்ளும். இதுகருதித்தான் வள்ளற்பெருமான் "மானலிற் கண்டுள்ளம் மபங்கல்" என்று சொல்லியிருக்கின்றார். ஒரு இரவிலே கட்டை கிடக்கிறது அல்லது நிற்கிறது, அதைப் பார்க்கிறபொழுது திருடனாகத் தெரிகின்றது. கயிற்றைப் பார்த்து பாம்புதான் என்று நடுக்கங்கொள்கிறது, முத்துச்சிப்பிகளானது அதனுள்ளே ஈத்தை இறந்து ஊன்கழிந்து சுத்தமாகக் கிடக்கின்ற காலத்திலே, சூரிய வெளிச்சம் முத்துச்சிப்பியின் மீது பட்ட உடனே அது வெள்ளி போன்று தெரியும். கடிதரு கிளிஞ்சல் என்பது உள்ளே நத்தை இறந்து சுத்தமாக மாமிசமின்றியிருப்பது என்று உரை கொண்டிருக்கின்றோம். விளக்கி வைக்கப்பட்ட பித்தளை பாத்திரத்தைப் பார்த்தால் அது பொன்னுகிய தங்க நிறத்தைக் கொடுக்கின்றது.

புதுப்பித்தளை பாத்திரம் அல்லது விளக்கப்பட்ட பித்தளை பாத்திரமே பொன்னினுடைய நிறத்தைக் கொடுக்கும் விளக்காத பாத்திரமும் பழைய பாத்திரமுமாக இருந்தால் அழுக்குப் பிடித்துத் தோன்றும். இது கருதியே வள்ளற்பெருமானார் "கதித்த பித்தளை யினிடையும் என்று சொல்லியிருக்கின்றார்கள்.

கற்றொளி கொளுணர்வினோர் வேண்டாத விப்பெருங்
கண்ம உடலிற் பருவநேர்
கண்டழியு மிளமைதான் பகல்வேட்டமே புரைக்
கடனீர் கொலோகப டமோ
உற்றொளியின் வெயிலிட்ட மஞ்சளே வானிட்ட
ஒருவிலோ நீர்க் குமிழியோ
உலையனற் பெறக்காற்று ளூதுங் துருத்தியோ
வொன்று மறியேனிதனை நான்
பற்றுதியாக் கொண்டு வனிதையர் கண்வலையினிற்
பட்டு மதிகெட் டுழன்றே
பாவமே பயில்கின்ற கல்லாது நின்னடிப்
பற்றுணவு முற்றறிகிலேன்
சற்றைபகல் சென்னையில் கந்தகோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே (15)

(ப-ரை) கற்றொளி கொளுணர் வினோர்=கற்றதாலறிவு பிரகாசிக்கும் உணர்ச்சியையுடையவர், வேண்டாத விப்பெருங்கண்ம உடலில்=வேண்டுதற்கு இல்லாத இந்தப்பெரிய வினையாலெடுத்த உடலிலே, பருவநேர் கண்டழியுமிளமைதான்=நேரிடக்கூடிய காலத்தாற் கண்ட இளமையானது அழிவதானது, பகல்வேட்டமே=சூரியனைச் சூழ்கின்ற பரி வட்டமோ, புரைக்கடனீர் கொலோ=நுரைக்கின்ற கடற்றண்ணீரோ, கபடமோ=அங்கே தோன்றுகின்ற ஏற்றத்தாழ்வுகள்தானோ. உற்றொளியின் வெயிலிட்ட மஞ்சளோ=தொடர்ந்து வெயிலிற் போட்ட மஞ்சளோ, வானிட்ட ஒருவிலோ=ஆகாயத்தில் தோன்றும் வானவில்லோ, நீர்க்குமிழியோ=நீரிற்

குமிழ்கின்ற குமிழியோ உலையனற் பெறக்காற்றுளதுந் துருத்தியோ=உலையானது காற்றைப் பெருவதற்காக வைத்திருக்கின்ற துருத்தியின் பெருத்தல், சிறுத்தலோ ஒன்றுமறியேனிதனை நான்= ஒன்றுமே அறியமுடியாமலிருக்கின்ற நான், பற்றுறுதியாக்கொண்டு வனிதையர் கண்வலையிற் பட்டுழன்றே=அப்படிக்கிருக்க இதையே முற்றிலும் பற்றுக்கோடாகக் கொண்டு பெண்கள் கண்வலையிலே சிக்கிக்கொண்டு என்னுடைய புத்திகெட்டுச் சீரழிந்துகொண்டு, பாவமே பயில்கின்றதல்லாது=மேன்மேலும் பாவங்களையே செய்து கொண்டிருக்கிறேன் அல்லாது, நின்னடி=நினது திருவடியின்மீது, பற்றனுவு முற்றறிகிலேன்=பற்றிக்கொள்ளும் தொழிலை முடித்துக் கொள்ளத் தெரியாமலிருக்கின்றேன், சற்றையகல் சென்னை= சத்துப் பொருளினைப் பெருக்கிக்கொண்டிருக்கின்ற சென்னை.

(க-ரை) இளமையானது இன்னதுதான் என்று தெரியவில்லை. ஆனல் நிலைக்காதது அப்படிக்கிருந்து மிளமையிற் பெண்களிடமாகச் சிக்கிக்கொண்டிருக்கின்றேன். உன்னுடைய திருவடியின் மீது எனக்கு அன்பு கொஞ்சங்கூட வரமாட்டேனென்கின்றது.

(வி-ரை) பகல் என்பது சூரியனுக்கு ஒரு பெயரானதால், பகல் வேடம் என்ற இடத்திலே சூரியனது பரிவட்டம் என்று உரைசெய்திருக்கின்றனம். வெயிலில் வர்ணங்களைப் போடுவோமானல், அந்த வர்ணங்களெல்லாம் சூரியவெளிச்சத்தில் மாறிமறைந்துவிடும். உலையிலே வைத்திருக்கின்ற துருத்தி காற்று உண்டுபண்ணுவதற்காக பெருக்குஞ் சிறுக்கும். ஆகவே துருத்தியின் பருமனையுஞ் சிறுமையுஞ் சொன்னேம்.

சடமாகி இன்பந்தராதாகி மிகுபெருஞ்
சஞ்சலா காரமாகிச்
சற்றுகி வெளிமயற் பற்றுகியோடுமித்
தன்மைபெறு செல்வமந்தோ
விடமாகி கபடநடமாகி யாற்றிடை
விரைந்துசெலும் வெள்ளமாகி
வேலைபலையாகி யாங்காரவலையாகி முதிர்

வேனிலுறு மேகமாகிக்
கடமாய சகடமுறு காலாகி நீடு
வாய்க்கா லோடுநீராகியே
கற்பிலாமகளிர் போற்பொற்பிலா துழலுமிது
கருதாத வகையருளுவாய்
தடமேவுசென்னையிற் கந்தகோட்டத் துள்வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. (16)

(ப-ரை) சடமாகி = இல்லாததாகி, இன்பந்தராதாகி = ஆனந்தங் கொடுக்கத் தகாததாகி, மிகுபெருஞ் சஞ்சலாகாரமாகி = பெருமித மான மிகுந்திருக்கின்ற சஞ்சலங்களுக்கு ஆதாரமாகி, சற்றாகி = வஸ்து வாகி, வெளிமயற் பற்றாகி = வெளியிலே ஆசைப் பற்றுதலாகி, யோடுமித்தன்மை பெறு செல்வமந்தோ = இந்த விதமான தன்மை களைச் செய்து தன்னைவிட்டு ஓடிப்போகின்ற பொருளானது ஐயோ, விடமாகி = நஞ்சாகி, ஒரு கபடநடமாகி = ஒரு வெறுக்கக்கூடிய வஞ்சக நாடகமாகி, யாற்றிடை விரைந்துசெலும் வெள்ளமாகி = ஆற்றின்கண்ணே விரைவாகப் போகின்ற வெள்ள நீராகி, வேலை யலையாகி = சமுத்திரத்திலுள்ள அலையாகி, ஆங்காரவலையாகி = தன் முனைப்பு என்று சொல்லக்கூடிய வலையாகி, முதிர்வேனிலுறு மேக மாகி = முதிர் வேனிற் காலத்திலே ஆகாயத்திலே தோன்றுகின்ற மேகங்களாகி, கடமாய சகடமுறு காலாகி = வட்டமாக இருக்கின்ற சக்கரத்தினுடைய உருளலோடு அதோடு வழியுமாகி, நீடு வாய்க்கா லோடு நீராகியே = பெரியதான வாய்க்காலிலே போகின்ற நீராகி, கற்பிலா மகளிர்போற் பொற்பிலாதுழலுமிது = பணமிட்டவன் கூட இராவைக்களிக்கின்ற மானத்தையிழந்த வேசியர்களுடைய நிலைத்த தில்லாது உழன்று மாறி மாறிக்கொண்டிருக்கின்ற இந்தச் செல்வ மானது, கருதாத வகையருளுவாய் = என்னுடைய உள்ளமானது கருதாதிருக்க வேண்டியதற்காக நீ அருளைச் செய்யவேண்டும், தட மேவு சென்னை = தண்மையைச் செய்கின்ற தண்ணீரைத் தன்னக மாக வைத்துக்கொண்டிருக்கின்ற தண்ணீருள்ள தடாகங்களிருக் கின்ற சென்னை.

(க-ரை) செல்வம் நிலையற்றது. அழிந்து போய்விடும். கெட்ட தொழில்களைச் செய்ய ஆளாக்கிவிடும். இதை நான் விரும்பாதபடி செய்யவேண்டும்.

(வி-ரை) முதிர்வேனிற் காலத்திலே மேகமானது ஓயாது ஓடிக் கொண்டிருக்கும் மேகங்கண்ட இடத்தில் மழை பெய்யாது. இடி ஒரு பக்கம் விழும் மழை ஒருபக்கம் பெய்யும். வண்டிச்சக்கரமானது மாறி மாறிச் சுழன்று கொண்டிருக்கும் அது நிலையாக ஒரு இடத்திலே இருக்காது. நீர் மலையிலிருந்து ஆற்றிலோடி, அதிலிருந்து வாய்க்காலுக்கு வரும், வாய்க்காலிலிருந்து குளத்துக்கு வரும். குளத்திலிருந்து வாய்க்கால் வழியே நஞ்சை சேர்ந்து இல்லாததாகும்.

எந்தைநினை வாழ்த்தாத பேயர் வாய்க்கூழுக்கும்
ஏக்கற்றிருக்கும் வெறுவாய்
எங்கள் பெருமானுனை வணங்காத மூடர்தலை
இகழ்விற கெடுக்குந்தலை
கந்தமிகு நின்மேனி காணாத கயவர் கண்கல
நீர்சொரிந்த அழுகண்
கடவுணின் புகழ்தனைக் கேளாத வீணர் செவி
கைத்திழவு கேட்குஞ்செவி
பந்தமற நினையெணாப் பாவிகட நெஞ்சம் பகீரென
நடுங்கு நெஞ்சம்
பரமநின் திருமுன்னர்க்குவியாத வஞ்சர்கை
பலியேற்க நீள் கொடுங்கை
சந்தமிகு சென்னையிற் கந்தகோட்டத்துள்
வளர்தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே (17)

(ப-ரை) எந்தைநினை வாழ்த்தாத பேயர் வாய்க்கூழுக்கு மேக்கற்றிருக்கும் வெறுவாய்=என்னப்பனே உன்னை வாழ்த்தாத பேயர்களுடைய வாயானது ஒருவனுண்கின்ற பொழுது அவன்

வாயிருந்தொழுகுகின்ற கூழுக்கும் ஏக்கத்துடன் சப்பைகொட்டிக்கொண்டிருக்கின்ற வாயாகும், எங்கள் பெருமானுனை வணங்காத மூடர்தலை இகழ்விறகெடுக்குந்தலை = எங்களுடைய பெருமானே உன்னை வணங்காத மூடர் தலையானது இழிந்த காரியங்களுக்கு எரிப்பதற்காக விறகு சுமந்துகொண்டு போகிற தலையாகும், கந்த மிகு நின்மேனி காணாத கயவர் கண்கல நீர்சொரிந்த அழுகண் = சேர்க்கை மிகுந்திருக்கின்ற உன்னுடைய மேனியைக் காணாத கயவர்களுடைய கண்கள் கலநீரை இரைத்துக்கொண்டிருக்கின்ற துக்கக் கண்களாம், கடவுணின் புகழ்தனைக் கேளாத வீணர் செவி கைத்திழவு கேக்குஞ் செவி = கடவுளாகிய உன்னுடைய புகழ்ச்சியைக் கேட்காத வீணர்களுடைய செவிகள் துர்மரணத்தைக் கேட்கின்ற காதுகளாகும், பந்தமற நினையெணாப் பாவிகடநெஞ்சம் பகீரென நடுங்கு நெஞ்சம் = உலகப்பற்றில் உன்னையெண்ணாத பாவிகளுடைய நெஞ்சமானது திடீரென்று நடுங்கு நெஞ்சமாகும், பரம நின்றிரு முன்னர்க் குவியாத வஞ்சர்கை பலியேற்க நீள் கொடுங்கை = பரம்பொருளாகிய உன்னுடைய சன்னிதானத்திலே கும்பிடுவதற்காக குவிக்காத வஞ்சகர்களுடைய கைகளானது பிச்சையெடுப்பதற்காக கொடிய நீண்ட கைகள், சந்தமிகு சென்னை = சங்கீதத்திற்கேதுவான சந்தம் மலிந்த சென்னை.

(க-ரை) மனிதன் அவயவங்கள் ஒவ்வொன்றும் இறைவனுடைய திருப்பணி செய்வதற்காகவே பெற்றிருக்கின்றோம். வாய் படைத்தது இறைவனை வாழ்த்துவதற்கும், தலை பெற்றது இறையை வணங்குவதற்கும், கண் பெற்றது இறைவன்றிருமேனியைப் பார்ப்பதற்கும், உன்னுடையபுகழ் கேட்பதற்காக காதுகள் படைத்தேம், உன்னை எண்ணவேண்டியதற்கு நெஞ்சைப் பெற்றோம். கைகள் இறையை வணங்கவேண்டியதற்காம் என்று கொள்கின்றோம்.

(வி-ரை) மேலே சொல்லிய வள்ளலாரது திருச்செய்யுள், திருநாவுக்கரசர் தேவாரம் "தலையே நீ வணங்காய்" என்ற பதிகத்தை ஒத்திருக்கின்றது. வள்ளலார் உருவ வழிபாட்டையும் இறை பணி புரிய வேண்டிய அவசியத்தையும் இந்தச்செய்யுளிலே வலியுறுத்தி

வற்புறுத்தி உலகிலுள்ள சன்மார்க்க சங்க அடியார்களுக்கு கூறுகின்றார்.

உப்புற்ற பாண்டமென ஒன்பது துவாரத்துள்
உற்ற சும்பொழுகுமுடலை
உயர்கின்ற வானிடை எறிந்த கல்லென்று மலை
உற்றிழியு மருவியென்றும்
வெப்புற்ற காற்றிடை விளக்கென்று மேகமுறு மின்
னென்று வீசு காற்றின்
மேற்பட்ட பஞ்சென்று மஞ்சென்றும் வினைதந்த
வெறு மாய வேடமென்றும்
கப்புற்ற பறவைக் குடம்பையென்றும் பொய்த்த
கனவென்று நீர்மேலெழுதுங்
கையெழுத்தென்று முட்கண்டு கொண்டதிலாசை
கைவிடேனென் செய்குவேன்
தப்பற்ற சென்னையிற் கந்தகோட்டத்துள்
வளர்தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணி (18)

(ப-ரை) உப்புற்ற பாண்டமென ஒன்பது துவாரத்துளுற்ற சும்பொழுகு முடலை = உப்பை வைத்திருக்கின்ற பாண்டத்தை யொத்த உள்ளிருந்து நீரொழுகுகின்ற உடலை, உயர்கின்ற வானிடை எறிந்த கல்லென்றும் = உயர்வாகிய வானத்திலே எறியப்பட்ட கல் போன்றதென்றும், மலையிலிருந்து கீழேவீழ்கின்றநீரருவியென்றும் வெப்புற்ற காற்றிடை விளக்கென்றும் = வெப்பம் பொருந்திய காற்றிற்பட்ட விளக்கென்றும், மேகமுறுமின்னென்றும் = மேகத்தினிடமாகத் தோன்றுகின்ற மின்னலென்றும், வீசு காற்றின் மேற்பட்ட பஞ்சென்றும் = அடித்துக்கொண்டிருக்கின்ற காற்றிலகப்பட்ட பஞ்சென்றும், மஞ்சென்றும் = காற்றிலகப்பட்டுச் சஞ்சரித்துக்கொண்டிருக்கின்ற மேகமென்றும், வினைதந்த வெறுமாயவேடமென்றும் = வினையாலீட்டப்பட்ட வெறுமையான மாய வேடத்தையுடையதென்றும், கப்புற்ற பறவைக் குடம்பையென்றும் = பொரிக்காத

பறவையின் மூட்டையென்றும், பொய்த்த கனவென்று = பொய்மையான தூக்கத்திற் கண்ட கனவென்றும், நீரிலெழுதுங் கையெழுத்தென்றும் = நீரிலே எழுதுகின்ற கையெழுத்தென்றும், உட்கண்டு கொண்டதிலாசை கைவிட்டேனென் செய்குவேன் = என்னுள்ளே மேலே சொல்லியவைகளைப் போன்ற நிலைத்தலையுடையதென்று கண்டும் அவைகளது நிலையாமையைக் கருத்திலிருத்தாது அவைகள் மீது வைத்த ஆசையைக் கைவிடேன் மாட்டேனென்று சொல்கின்றது என்ன செய்வேன்

(க-ரை) அழிவையும் நிலையாமையும் உடைய உடலை அதனிலையைச் சுத்தமாக அறிந்தும் என் மனது அவைகளில் வைத்த ஆசையை மறக்கமாட்டேன் என்று சொல்கிறது. என்ன செய்வது.

(வி-ரை) வள்ளலாரது இந்தச் செய்யுள் பட்டிணத்துப் பிள்ளையாரது "ஒரு மடமாது எனத் தொடங்கி ஓர் பிடி நீருமிலாத உடம்பை நம்பும்படி யேனையினி ஆளுமே" என்ற உடற்கூற்று வண்ணத்திற் புகன்றிருக்கின்றதை ஞாபகமூட்டுகின்றது கண்ணிற் படுகின்ற காட்சிப் பொருள்கள் யாவும் அழியும். ஆனால் காட்சிப் பொருள்களாகிய உயிர்கள் பாடுபடுமேயானால் சந்தான குரவர்கள் சமய குரவர்கள் இராமலிங்க சுவாமிகள் மாதிரி உடப்பு பதிகாணமாகத் திருவருளிற் பதிந்து விதேக முத்தியடைவார்கள்.

ஐயநின் சீர்பேசு செல்வர்வாய் நல்ல தெள்ளமு
 தூண்டு வந்த திருவாய்
அய்யநின் திருவடி வணங்கினோர் தலைமுடி
 அணிந்தோங்கி வாழுந்தலை
மெய்யநின் திருமேனி கண்ட புண்ணியர் கண்கள்
 மிக்க வொளிமேவு கண்கள்
வேலநின் புகழ் கேட்ட வித்தகர் திருச்செவி விழாச்
 சுபங்கேட்குஞ் செவி
துய்யநின் பதமென்னு மேலோர் கணைஞ்ச மெய்ச்
 சுக ரூபமான நெஞ்சம்
தோன்றலுன் திரு முன் குவித்த பெரியோர் கைகள் (19)

அடியார்களுடைய தலைமுடியான திருந்த அணிகளைப் போட்டு ஓங்கி வாழ்கின்ற தலை, மெய்யநின் திருவடிகண்ட புண்ணியர் கண்கள் மிக்க வொளிமேவுகண்கள் = உண்மையான உன்னுடைய திருமேனியைக் கண்டவர்களுடைய கண்கள் மிகுந்த பிரகாசம் மேவியிருக்கின்ற கண்கள், வேலநின் புகழ்கேட்ட வித்தகர் திருச்செவி விழாச்சுபங் கேட்டுஞ்செவி = வேலைக் கையிற்பிடித்திருக்கின்ற உன்னுடைய புகழைக் கேட்டவர்களுடைய அழகிய செவியானது அழியாத சுபங்கேட்கின்ற செவி, தூய்யநின் பதமொன்னும் மேலோர் கனிந்த மெய்ச்சுக ரூபமான நெஞ்சம் = தூய்யவனாகிய உன்னுடைய திருவடியை எண்ணிக்கொண்டிருக்கின்ற மேலானவர்களினுடைய நெஞ்சம் உண்மையான சுகத்தைக் கொண்டிருக்கின்ற ரூபத்தையுடைத்தாகிய நெஞ்சம், தோன்றல் உன்திருமுன் குவித்த பெரியோர்கைகள் சுவர்னமிடுகின்ற கைகள் = தோற்றியவனாகிய உன்னுடைய சன்னிதானத்தின் முன்னாலே குவித்து வணங்குகின்ற கைகள் சுவர்னத்தைப் பிச்சைக்காரர்களுக்குக் கொடுக்கின்ற கைகள், சைவமுயர் சென்னை = விபூதியிடுவதிலும் புலாலுண்ணுதிருப்பதிலுயர்வையடைந்த சென்னை.

(க-ரை) இறையை வணங்கிடப் பலன் உண்டு. முந்திய நிலையை இதனால் நிரூபிக்கின்றார்.

(வி-ரை) முன்செய்யுளில் வெறுவாய் என்றார் இச்செய்யுளில் திருவாய் என்றார். இகழ் விறகெடுக்குந் தலைக்குமாறாக அணிந்தோங்கிவருந் தலை, அழுகண் என்பதற்குப்பதிலாக ஒளிமேவு கண்கள். இழவுகேட்டுஞ்செவி என்பதற்கெதிரே விழாச்சுபங் கேட்டுஞ்செவி, நடுங்கு நெஞ்சம் என்பதற்கெதிரே சுகரூபமான நெஞ்சம், பலியேற்க நீள்கொடுங்கை என்பதற்கேற்ப சுவர்னமிடுகின்ற கைகள் என்று சொல்லி தாம் எடுத்துக்கொண்ட நிலையை வற்புறுத்திப் புகன்றிருக்கின்றார் வடலூர் இராமலிங்க அடிகள்.

உழலுற்ற உழவுமுதலுறு தொழிலியற்றி
மலமொத்த பொருளீட்டிவீண்
உறுவயிறுநிறைய வெண்சோறடைத் திவ்வுடலை

ஒதிபோல் வளர்த்துநாளும்
விழலுற்ற வாழ்க்கையை விரும்பினேனே யிவ்
வெய்யவுடல் பொய்யென்கிலேன்
வெளிமயக்கோ விடமயக்கோ வெனது
விதிமயக்கோ வறிகிலேன்
கழலுற்றநின் றுணைக்கான் மலர்வணங்கிநின்
கருணையை விழைந்து கொண்டெங்
களைகணேயீ ராறு கண்கொண்ட வென்றனிரு
கண்ணேயெனப் புகழ்கிலேன்
தழைவுற்ற சென்னையிற் கந்தகோட்டத் துள்வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. (20)

(ப-ரை) உழலுற்ற உழவுமுதலுறு தொழிலியற்றி = உழன்றுகொண்டிருக்கின்ற விவசாய முதலாகவிருக்கின்ற பல தொழில்களையும் செய்து, மலமொத்த பொருளீட்டி = மலங்களைப் போன்று நிறைந்த பணத்தைத் தேடி, வீண் உறுவயிறு = வீணாக இருக்கின்ற வயிறு, வெண்சோறடைத்து இவ்வுடலை ஒதிபோல் வளர்த்து = வெண்மையாகிய சோற்றை வயிற்றிற்குள் செலுத்தி இந்த உடலை, ஒன்றுக்கும் உதவாத ஒதியமரத்தினைப் போன்று, நாளும் வளர்த்து = ஒவ்வொருநாளும் வளர்த்துக்கொண்டிருப்பது, விழலுற்ற வாழ்க்கையை விரும்பினேன் = அழிந்துபோகின்ற வாழ்க்கையை விரும்பினேன், வெளிமயக்கோ = புறம்பான மயக்கமோ, மாயவிடமயக்கோ = விடமான மாயையினுடைய மயக்கமோ, எனது விதிமயக்கோ = என்னுடைய விதியினுடைய மயக்கமோ, அறிகிலேன் = தெரியாதவனாக இருக்கின்றேன், கழலுற்ற நின்றுணைக் கான்மலர் = உன்னுடைய காலிலிருக்கின்ற என்னுடைய துணையை, வணங்கிநின் கருணையை விழைந்துகொண்டு = வணங்கி உன்னுடைய (என்மீது) இரக்கத்தைப் பெற்றுக்கொண்டு, எங்களைகணே = எங்கள் களையைக் களைகின்ற கண்போன்றவனே, யீராறு கண்கொண்ட வென்றனிருகண்ணே = பன்னிரண்டு கண்களை உன்

முகத்தினிடம் வைத்துக்கொண்டிருக்கின்ற என்னுடைய இரண்டு கண்ணே, எனப்புகல்கிலேன் = என்று சொல்ல மாட்டேனென்கின்றேன், தழைவுற்ற சென்னை = மற்றெல்லா நகர்களையுந் தன்னுட் பிணைத்துக் கொண்டிருக்கின்ற சென்னை.

(க-ரை) பலதொழிலைச்செய்து இந்தப் பயனில்லாத உடம்பை வளர்த்துக்கொண்டிருக்கின்றேன். விதி, மாயை இவைகளின்மயக்கத்தால் நான் இப்படிச் செய்கிறேனோ என்னமோ? உன்னுடைய திருவடியைச் சேர்ந்து உனக்குப் புகழ் மாலை சொல்லத் தெரியாமலிருக்கின்றேன்.

(வி-ரை) ஈராறு கண்கொண்ட என்றனிரு கண்ணே என்று வள்ளலார் திருவாக்கிற் காண்கின்றோம். "தந்ததுன்றன்னைக் கொண்டதென்றன்னை" என்று திருவாசகத்திலே மாணிக்கவாசகர் புகன்றிருக்கின்ற பதிகாண நிலையை அடையவேண்டுமென்று இந்த ஐந்தாவது திருமுறைத் தெய்வமணிமாலைப் பிரபந்தத்திற் றெரியக் கிடக்கின்றது. முதலைந்து திருமுறைகளில் உருவவழிபாடு செய்ய வேண்டிய நியதியைப்புகன்று ஆறாவது திருமுறையில் இராமலிங்க அடிகள் அருவ வழிபாட்டைப் புகன்றிருக்கின்றார்கள்.

வானமெங்கே யமுதபானமெங்கே யமரர்
வாழ்க்கை யபிமானமெங்கே
மாட்சியெங்கே யவர்கள் சூழ்ச்சியெங்கே
தேவமன்ன னரசாட்சியெங்கே
ஞானமெங்கே முனிவர்மோன மெங்கேயந்த
நான்முகன் செய்கையெங்கே
நாரணன்காத்தலை நடத்தலெங்கே மறை
நவின்றிடு மொழுக்கமெங்கே
ஈனமங்கே செய்தாருகனை யாயிரம்
இலக்கமுறு சிங்கமுகனை
எண்ணரிய திறல்பெற்றசூரனை மறக்கருணை
ஈந்துபணி கொண்டிலையெனில்
தானமிங்கோர் சென்னை கந்தகோட்டத் துள்வளர்

தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச்சைவமணி
சண்முகத் தெய்வமணியே. (21)

(ப-ரை) வானமெங்கே = தேவருலகமெங்கே, அமுதபான மெங்கே = சாகாதிருப்பதற்காகத் தேவர்கள் சாப்பிடுகின்ற அமுதங் குடித்தலெங்கே, அபிமானமெங்கே = தாங்கள் உலகிலுள்ள எல்லா உயிர்களையும்விடச் சிறந்தவர்களென்ற அபிமானமெங்கே, மாட்சி யெங்கே = மேன்மையெங்கே, அவர்கள் சூழ்ச்சியெங்கே = அவர்களுஞ் செய்கின்ற வஞ்சகமான செய்கைகள் எங்கே, தேவ மன்னனரசாட்சி யெங்கே = சுதர்மாசனத்தோன் என்று சொல்லப் படுகின்ற தேவேந்திரனுடைய நாடாளும் ஆட்சியெலெங்கே, ஞான மெங்கே = நான்காவது படியிலுள்ளதாகிய ஞானமெங்கே, முனிவர் மோனமெங்கே = இருடிகள் மௌனமா இருக்கின்றஇருக்கையெங்கே, அந்த நான்முகன் செய்கையெங்கே = அந்தணனாகிய பிரமனாகி உலகத்தைப் படைக்கின்ற படைப்புத் தொழிலெங்கே, நாரணன் காத்தலை நடத்தலெங்கே = திருமாலானவன் காக்குந் தொழிலைத் தொடர்ந்து செய்துகொண்டிருப்பது எங்கே, மறை நவின்றிடு மொழுக்கமெங்கே = வேதங்கள் சொல்கின்ற ஒழுக்கங்களெல்லாம் எங்கே, ஈனமங்கே செய்ததாருகனை ஆயிர இலக்கமுறு சிங்கமுகனை = கேவலமாகிய கெட்ட தொழிலையுங் கேட்டையுஞ் செய்துகொண் டிருக்கின்ற யானைத் தலையையுடைய தாருகாசுரனையும் ஆயிரஞ் சிங்க முகங்களை வைத்திருந்த சிங்கமுகாசுரனையும், எண்ணரியதிறல் பெற்ற சூரனை = எண்ணுதற்கும் எட்டாத பலத்தினைக் கொண்ட சூரனையும், மறக்கருணை ஈந்து பணி கொண்டிலையெனில் = இந்த மூன்று பேர்களையும் மறக்கருணையினாற் சங்கரித்து ஏவலாக வைத்துக்கொள்ளாது போவாயேயானால், தானமிங்கேர் சென்னை = இங்கே தானம் பெற்றுக்கொள்வதற்குத் தாயகமாக விருக்கின்ற சென்னை.

(க-ரை) உலகத்தையே இம்சிக்கின்ற தாருகாசூரன் சிங்கமுகா சுரன், சூரன் இவர்களைக் கொன்று தேவர்களைக் காத்தாய்.

(வி-ரை) கச்சியப்பசிவாச்சாரியார் கந்தபுராணத்திலே, தேவர்

களெல்லாம் மாயையின் பிள்ளைகளுடைய துன்பத்திற் சிக்கே டைந்து கொண்டிருந்தார்கள். அவர்களைத் தேவர்களுக்காகக் கொன்று தேவசேனாபதி என்ற பெயரைச் சுப்பிரமணியக்கடவுள் பெற்றுக்கொண்டார் மயிலுங் கோழிக் கொடியுஞ் சூரனே.

மனமான வொரு சிறுவன் மதியான குருவையு
மதித்திடா னின்னடிச்சீர்
மகிழ் கல்வி கற்றிடான் சும்மாவிரான் காம
மடுவினிடை வீழ்ந்து சுழல்வான்
சினமான வெஞ்சுரத் துழலுவ னுலோபமாஞ் சிறு
குகையினூடு புகுவான்
செறுமோக விருளிடைச் செல்குவான் மதமெனுஞ்
செய்குன்றி லேறி விழுவான்
இனமான மாச்சர்ய வெங்குழியி னுள்ளேயிறங்குவான்
சிறிது மங்கோ
என்சொல் கேளானெனது கைப்படான் மற்றிதற்
கேழையே னென்செய்குவேன்
ஏனநீடு சென்னையிற் கந்த கோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே (22)

(ப-ரை) மனமான ஒரு சிறுவன் மதியான ஒரு குருவையும் மதித்திடான் = மனமென்று சொல்கின்ற ஒரு சின்னப்பயல் அறிவாகிய குருவினை மதிக்கமாட்டான், நின்னடிச்சீர் மகிழ் கல்வி கற்றிடான் = உன்னுடைய திருவடியின் மேன்மையை மகிழ்வோடு சொல்கின்ற கல்வியைக் கற்கமாட்டான், சும்மாவிரான் காமமடுவினிடை வீழ்ந்து சுழல்வான் = சும்மா இருக்க மாட்டான் காமமாகிய தடாகத்தினிலே வீழ்ந்து எழுந்திருக்காது சுழன்று கொண்டிருப்பான், சினமான வெஞ்சுரத்துழலுவன் = சினமென்று பேசப்படுகின்ற கொடிய காய்ச்சலில் கிடந்து உழன்று கொண்டிருப்பான் உலோபமாஞ் சிறு குகையினூடு புகுவான் = ஈயாமையைச் செய்கின்ற உதாரகுணமில்லாத உலோபமென்று சொல்கின்ற நுழையப்

போதுமான இடமில்லாத குகையினூடு போய்க்கொண்டிருப்பான், செறுமோகவிருளிடைச் செல்குவான் = எதிர்த்தழிக்கின்ற இருட்டினிடையிற் சென்றுகொண்டிருப்பான், மதமெனுஞ் செய்குன்றிலேறி விழுவான் = மதமென்று சொல்கின்ற இறையாலாக்கப்படாதுதன்னுலாகிய குன்றின்மீது ஏறி விழுந்து கொண்டிருப்பன், இனமான ஆச்சர்ய வெங்குழியினுள்ளே இறங்குவான் = தகைகளினத்தோடு சேர்கின்ற ஆச்சர்யம் என்னப்பட்ட கொடியகுழியினுள்ளே இறங்கிக்கொண்டிருப்பான், சிறுதுமந்தோ என் சொல்கேளான் = ஒரு சிறிதுங்கூட என் சொல்லை ஐயோ கேட்கமாட்டான், எனது கைப்படான் = என்னுடை கைக்குள் அகப்படமாட்டான், மற்றிதற் கேழையேன் என்செய்குவேன் = ஏழையாகிய நான் மற்றென் றென்ன செய்குவேன், தனநீடு சென்னை = பணம் பெருகிக்கொண்டிருக்கின்ற சென்னை.

(க-ரை) மனமென்று சொல்லக்கூடியவன் முன் செய்யுட்களிற் புகன்றிருக்கின்ற ஏழு விதயான பகைகளையனுபவித்துக்கொண்டிருப்பான், அவைகளிலனுபவம் வேண்டாமென்றால் கைவிடமாட்டேன், என்று சொல்கிறன்.

(வி-ரை) இந்தச் செய்யுள் மனமானது கடிமனத்தின் பாற்பட்டுத் தொழிற்படுகிறதை எடுத்துச் சொல்கின்றது. கடிமனம் என்றால் பேரின்ப வழிகளைக் கழித்து சிற்றின்பவகைகளில் மனதை நடத்தி கொண்டிருக்கும், மன்மனம், மனமனம் இரண்டு மனங்களையும் வந்தவிடங்களில் விளக்குவோம்.

வாய்கொண் டுரைத்த லரிதென் செய்கேனென்
செய்கேன் வள்ளலுன் சேவடிக்கண்
மன்னுது பொன்னுசை மண்ணுசை பெண்ணுசை
வாய்ந்துழலு மெனது மனது
பேய்கொண்டு கள்ளுண்டு கோலினன் மொத்துண்டு
பித்துண் டவன் குரங்கோ
பேசுறு குலாலனுற் சுழல்கின்றதிகிரியோ
பேதை விளையாடு பந்தோ

காய்கொண்டு பாய்கின்ற வெவ் விலங்கோ
பெருங் காற்றினுல் சுழல்கரங்கோ
காலவடி வோவிந்த்ர ஜாலவடிவோ வெனது
கர்மவடிவோ வறிகிலேன்
தாய்கொண்ட சென்னையிற் கந்தகோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச்சைவமணி
சண்முகத் தெய்வமணியே. (23)

(ப-ரை) வள்ளலுன் சேவடிக்கண் மன்னுது=வள்ளலே உன்னுடைய அழகிய திருவடியை எண்ணுது, பொன்னுசை, மண்ணுசை, பெண்ணுசை வாய்ந்துழலு= பொருளாசை, பூமியாசை, பெண்ணுசை என்ற மூன்று ஆசைகளேயுங் கொண்டு உழன்று கொண்டிருக்கும், வாய்கொண்டுரைத்த லரிதென் செய்கேன் என் செய்கேன்=வாயினுல் சொல்ல முடியவில்லை, என்ன செய்வேன், பின் என் செய்கேன் தொடர் மொழி எனது மனது பேய் கொண்டு கள்ளுண்டு கோலினுன் மொத்துண்ட பித்துண்டவன் குரங்கோ= எனது மனமானது கள் குடித்துப் பேய் பிடித்து ஒருவனுற்றுரத் தப்பட்டு அடிக்கப்பட்ட கொடிய குரங்கோ, பேசுறு குலாலனுற் சுழல்கின்றதிகிரியோ=பேசப்படுகின்ற குயவனுல் சுற்றிவிடப்படுகின்ற சக்கரமோ, பேதை விளையாடு பந்தோ=ஒன்றுமறியாத பேதைப் பெண்கள் விளையாடுகின்ற காலத்திலகப்பட்டுக் கொண்டிருக்கின்ற பந்தோ, காய் கொண்டு பாய்கின்ற வெவ்விலங்கோ= மிகுந்த பசியினுல் இரையில்லாது திரிகின்றது இரையைக் கண்டதும் பாயக்கூடிய கொடிய விலங்கோ, பெருங் காற்றினுற் சுழல் கரங்கோ=பெரிய காற்றில் விடப்பட்டு சுழன்று பறந்துகொண்டிருக்கின்ற காற்ருடியோ, கால வடிவோ=உயிரைப் பிடித்துப்போகின்றகால உருவோ, இந்த்ர ஜால வடிவோ=இந்த ஜாலவித்தைகளாகிய உருவமோ, எனது கர்ம வடிவோ அறிகிலேன்=எனதுமுந்திய பல ஜென்மங்களீட்டிய வினைப்பயனைத் துய்ப்பிக்க எடுத்த உருவமோ என்ன செய்வேன், தாய் கொண்ட சென்னை=உலகங்களிலுள்ள நகரங்களுக்கெல்லாம் தாயைப்போன்றிருக்கின்ற சென்னை.

(க-ரை) உன்னுடைய சேவடியை வணங்காது அழியும் பொருளை நம்பிக்கொண்டிருக்கின்றது. அவைகளை நம்பக்கூடாது என்றால் கேட்கமாட்டேன் என்று சொல்கிறது.

(வி-ரை) குரங்கு இயல்பாகவே குறும்புத்தனம் பண்ணும். அப்படிக்கிருக்க அதற்குப் பேய்பிடிக்கிறது கள் சாப்பிடுகிறது மற்றொருவரால் அடிக்கப்படுகிறது இதற்கு மேலாகப் பயித்தியமும் பிடித்திருக்கின்றது. இப்படிக்கிருந்தால் அது என்னதான் செய்யும் அதைப் போன்றிருக்கின்றது மனம். தமிழ் நாட்டிலுள்ள நகரங்கட்கெல்லாம் தாய்த்தன்மை யிலிருக்கின்றது. ஏனென்றால் சென்னைமாகாணத்துக்கே தலைமைநகராக இருக்கிறது. இதுவே உரை.

கற்றமேலவரொடுங் கூடிநில்லேன் கல்வி கற்குநெறி
தேர்ந்து கல்லேன்
கனிவுகொண்டுனது திருவடியை யொருகனவிலுங்
கருதிலேனல்ல னல்லேன்
குற்றமேசெய்வ தென்குணமாகு மப் பெருங்
குற்றமெல்லாங் குணமெனக்
கொள்ளுவதுநின் னருட்குணமாகு மென்னிலென்
குறைதவிர்த் தருள்புரிகுவாய்
பெற்றமேல்வரு பெருந்தகையினருளுப் பெற்றெழுந்
தோங்கு சுடரே
பிரணவாகார சின்மயவிமல சொரூபமே
பேதமில் பரப்பிரமமே
தற்றகைய சென்னையிற் கந்த கோட்டத்துள்வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச்சைவமணி
சண்முகத் தெய்வமணியே (24)

(ப-ரை) கற்ற மேலவரொடுங் கூடிநில்லேன் = கற்றுக்கொண்டிருக்கின்ற பெரியவர்களோடு சேர்ந்திருக்க மாட்டேன்; கல்விகற்குநெறிதேர்ந்து கல்லேன் = கல்வியைப் படிக்கின்ற முறையாகப்படித்து

தேர்ச்சி பெற்றிருக்கமாட்டேன், கனிவுகொண்டுனது திருவடியை யொருகனவிலுங் கருதிலேன் = இனிமையாக உனது திருவடியை வருகின்ற கனவுகளிலே கூடக் கருதாமலிருக்கின்றேன், நல்லனவலேன் = நல்லவர்களோடு சேர்ந்தவனுகமாட்டேன், குற்றமே செய்வதென் குணமாகும் = குற்றங்களையே செய்வது எனக்கு இயல்பாக வாய்த்திருக்கும் குணம், அப்பெருங் குற்றமெல்லாங் குணமெனக் கொள்ளுவது நின்னருட்குண மாகும் = அவ்வாறு செய்யப்படுகிற குற்றங்களை யெல்லாங் குணமாகக் கொள்ளவேண்டியது உன்னருட்குணத்திற்கு ஏற்பட்டிருக்கின்ற இயல்பான குணமாகும், என்னில் = என்றிருக்கின்றபடியினுல்; என் குறை தவிர்த்தருள்புரிகுவாய் = என்னுடைய குறைகளையெல்லாம் நீக்கி அருளைச்செய்ய வேண்டும், பெற்றமேல் = திருமாலாகிய நந்தியின்மீது, வருமொரு பெருந்தகையி னருளுருப் பெற்றெழுந்தோங்கு சுடரே = வருகின்ற இருவருமொருவனுகி (சக்தி—சிவம்) இருக்கின்றவனுடைய அருளுருவத்தைப்பெற்று விண்ணவர்க்கெல்லாந் தலைவனுகியிருக்கின்ற அருட்பிளம்பே. பிரணவாகார சின்மயவிமல சொரூபமே = ஓம் என்று சொல்கின்ற பிரணவத்தினிடமாக அகர நிலையிலிருக்கின்ற ஞானமயமாகிய திருவுருவமே, பேதமில் பரப்பிரமமே = பேதாபேதங்களைக் கடந்து நிற்கின்ற பரம்பொருளே, தற்றகைய சென்னை = உவமிக்கின்ற காலத்தில் உன்னைத் தன்னிடமாகப்பெற்ற சென்னை.

(க-ரை) கற்றவர்களோடு சேரவும் மாட்டேன். கற்கவேண்டிய முறைப்படியும் கல்வி கற்றுக்கொள்ள மாட்டேன். கனவிலேகூட உன்னை நினைத்தது என்னுடைய பழக்கமில்லை, குற்றஞ் செய்வது என்னுடைய இயல்பான குணம், சிவனும் நீயும் ஒன்று.

(வி-ரை) வள்ளலாரது செய்யுளானது கந்த புராணத்தையே தன்னுள்ளடக்கிக் காட்டுகின்றது. ஸ்ரீவைகுண்டத்திலவதரித்த குமாரகுருபர சுவாமிகள் "ஐந்து முகத்தோட தோமுகமுஞ்சேர்ந்து திருமுகங்களாருகிச்செந்தழற்கணுறும், ஒருமுகமாய்த்தீப்பொறியாறுய்ப்ப" என்று சொன்னுர் அதற்குமேலாகக் கந்தபுராணமானது சுப்பிரமணியமே சிவபெருமான் சிவபெருமானே சுப்பிரமணியம்

என்று சொல்கின்றது. வள்ளியம்மை, தெய்வயானை ஆகிய இருவர்களும், இச்சா, கிரியா, சக்திகள் என்கின்றார் மேற்கொண்டு கச்சியப்பசிவாச்சாரியார் வேலாயுதமானது ஞான சக்தி என்று சொல்கின்றார். சிவனுக்கு சக்தியோ ஜாதம், வாமதேவம், தற்புருடம், ஈசானம், என்றதினோடு ஒன்று சேர ஐந்து திரு முகங்கள் உண்டு. சக்தி திருமுகம் ஒன்றுஆகக் கூட்டி ஆறு திருமுகங்களாம். இன்னுஞ் சங்காருஷிய பரிபாடல், திருமுருகாற்றுப்படை முதலியவைகளில், இறைவனுடைய, மனோன்மணி சர்வ பூத தமனி, பலப்பிரத மணி, பலவிகரணி, கலவிகரணி, வாமை, ரௌத்திரி, சேட்டை, சங்கரி என்று ஒன்பதுசத்திகள் உண்டும் என்ற சித்தாந்த சாத்திரத் தெளிவை விளக்கியிருக்கின்றது. முருகனுக்கு பன்னிரண்டு கைகள் இருக்கின்றன. அவைகளில் வள்ளியம்மை, தெய்வயானை, வேலாயுதம் இவைகளைப் பிடித்த கைகள் மேலே சொல்லிய மூன்று சக்திகள் என்றும் பின்னர் மிச்சமாக இருக்கின்ற ஒன்பது திருக்கரங்களும் இறைவனுக்கேற்பட்ட, மேலே புகலப்பட்டிருக்கின்ற ஒன்பது சத்திகளென்றுஞ் சொல்வதற்குரிய நிலையினுரையினைத் தந்து நிற்கின்றது.

சிவனுக்கு நந்திவாகனம், முருகனுக்கு மயில் வாகனம்.

ஓங்காரம் என்ற பிரணவ மந்திரத்தைப்பற்றி அடியேனலெழுதப் பட்டிருக்கின்ற "எழின் தத்துவார்த்த விளக்கம், ஒன்பதின் தத்துவார்த்த விளக்கம்" என்ற இரண்டு நூல்களிலும் விளக்கமாகக் கூறியிருக்கின்றனம் இன்னும்இவண் ஒரு சிறிது விளக்குகின்றோம். ஓங்காரமானது உலகத்திலுள்ள பல பொருள்களாலேயும் பல உயிர்களாலேயும் சொல்லிக்கொண்டிருக்கின்ற திருமந்திரம். உதாரணமாக ஓங்கார மந்திரத்தை உயிர்கள் ஒலிக்கவில்லை ஆனாலிறந்துபடும் பொருள்கள் ஒலிக்கவில்லையானாற் கெடும்.

இதன்கண் அகர, உகர, மகரம், தெரிகிறது. அதுதான் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்று தொழில்களையும் மூன்று மூர்த்திகளையும் உற்பத்தி செய்கின்றது. "அகர முதல வெழுத்தெல்லாம் ஆதிபகவன், முதற்றேயுலகு" என்று திருவள்ளுவர் புகன்றார் இதைப் பார்க்கிலும் வெள்ளிடைமலையாக உமாபதி

சிவாச்சாரியார் "அகர உயிர்போலறிவாகி யெங்கும் நிகரில்லிறை நிற்கும் நிறைந்து" என்றார். அகரத்திற்குஞ் சிவத்திற்குஞ் சம்பந்த முண்டு. இந்தச் சம்பந்தா சம்பந்தத்தை எழின் தத்துவார்த்த விளக்கம் என்ற நூலில் விரிவாகப் பேசியிருப்பதாற்கண்டு கொள்ளலாம்.

பாய்ப்பட்டபுலியன்ன நாய்ப்பட்ட கயவர்தம்
பாழ்பட்ட மனையினெடுநாட்
பண்பட்டகழுநீரும் விண்பட்ட வின்னமுது
பட்டபா டாகுமன்றிப்
புண்பட்டவுமியுநீர் பொன்பட்ட பாடவர்கள்
போகமொரு போகமாமோ
ஆய்ப்பட்டமறைமுடிச் சேய்ப்பட்ட நின்னடிக்
காட்பட்ட பெருவாழ்விலே
அருள்பட்டநெறியு மெய்ப்பொருள்பட்ட நிலையுமுறவமர்
போகமே போகமாம்
தாய்ப்பட்டசென்னையிற் கந்தகோட்டத் துள்வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே (25)

(ப·ரை) பாய்ப்பட்ட புலியன்ன=பாயப்பட்ட புலிவாயிலகப் பட்ட. நாய்ப்பட்ட கயவர்தம் பாழ்ப்பட்ட மனையினெடுநாள்= நாயைப்போன்றிருக்கின்ற கயவர்களுடைய பாழாகப்போன வீட் டில் பலநாட்கள், பண்பட்ட கழுநீரும் விண்பட்ட வின்னமுது பட்டபாடாகுமன்றி=பக்குவமாக அரிசிகளைந்த கழுநீரானது தேவ ருலகத்திலிருக்கின்ற தேவாமிர்தம் பட்ட பாட்டை யடையுமே யல்லாது போய்ப்பட்ட புல்லுமணி=உலர்ந்தெடுக்கின்ற கோரை (சிலந்தி) அரிசி, பூப்பட்டபாடு = பூக்கள் படுகின்ற பாட்டினைச் சேரும், நற்பூண்பட்ட பாடு தவிடும்=நல்ல பூண்பட்ட பாட்டினைத் தவிடடையும், புண்பட்டவுமியுநீர் = புண்ணிலிருந்து வெளிவரு கின்ற நீர், பொன்பட்ட பாடவர்கள்=தங்கமடைகின்ற பாட்டினைச் சேரும்; போகமொரு போகமாமோ=அவனனுபவிக்கின்ற இன்ப

மொரு இன்பமாகுமோ. ஆய்ப்பட்ட மறைமுடிச் சேய்ப்பட்ட நின்னடி = ஆராய்ந்து புகன்றிருக்கின்ற வேதங்களுக்கு அப்பாற்பட்ட உன்னுடைய திருவடி, ஆட்பட்ட பெருவாழ்விலே = ஆளாக்கி வைக்கப்பட்ட பெரிய வாழ்க்கையிலே, அருள்பட்ட நெறியு மெய்ப் பொருள்பட்ட நிலையும் = அருள் லபித்துப் பெற்றுக்கொண்டு முறைமையாகிய வழிகளும் நியதியும் சேர்கின்ற நிலையிலே, உறவமர் போகமே போகமாம் = வந்துசேர்ந்தபின் அடைந்திருக்கின்ற இன்பமே இன்பமாகும், தாய்ப்பட்ட சென்னை = தமிழ்நாட்டில் உள்ள எல்லா நகரங்களுக்குந் தலைமைத்தான நகரஞ் சென்னை ஆனபடியினால் இராமலிங்க அடிகள் தாய்போன்ற சென்னையென்று சொல்கின்றார்.

(க-ரை) இவண் நாம் முருகன் அருளில்லாது அனுபவிக்கின்ற செல்வம் செல்வமாகாது உன்னுடைய அருள்வாய்ப்பட்டனுபவிக்கின்ற இன்பமே இன்பமாகும்.

(வி-ரை) வேதங்களுக்கும், ஆகமங்களுக்கும், அப்பாற்பட்டவன். ஆனது பற்றி ஆய்ப்பட்ட மறைமுடிச் சேய்ப்பட்டவன் "ஆகமமாகி நின்றண்ணிப்பான், புறத்தார்க்குச் சேயோன்" என்று சொல்கின்றார். இந்தச் செய்யுளிலிருந்து இராமலிங்க சுவாமிகளது திடவைராக்கிய சித்தமானது எந்நிலையிலிருக்கின்றதென்று அடியார்களறிந்து ஒழுகக்கிடக்கின்றது.

சேவலங்கொடி கொண்ட நினையன்றி வேறு சிறு
தேவரைச் சிந்தை செய்வோர்
செங்கனியை விட்டு வேப்பங்கனியை யுண்ணுமொரு
சிறு கருங்காக்கை நிகர்வார்
நாவலங்காரமற வேறு புகழ் பேசி நின்னற்
புகழ் வழுத்தாதபேர்
நாய்ப்பால் விரும்பி யான்றாய்ப்பாலை நயவாத
நவையுடைப் பேயராவார்
நீவலந்தர நினது குற்றேவல் புரியாது நின்று
மற்றேவல் புரிவோர்

நெல்லுக்கிறைக்காது புல்லுக்கிறைக்கின்ற நெடிய
வெறு வீணராவார்
தாவலஞ் சென்னையிற் கந்த கோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே (26)

(ப-ரை) சேவலங்கொடி கொண்ட நினையன்றி வேறு சிறு தேவரைச் சிந்தை செய்வோர்=சேவற் கொடியைப் பிடித்துக் கொண்டிருக்கின்ற உன்னையல்லாமல் மற்றையச் சிறு தெய்வ வழிபாடு செய்கின்றவர்கள், செங்கனியை விட்டு வேப்பங்கனியை யுண்ணுமொரு சிறு கருங்காக்கை நிகர்வார்=சிவப்பாக இருக்கின்ற கொவ்வைக்கனி உதவாது என்று கருதி புத்தியில்லாத அண்டங்காக்கை வேப்பங்கனி சாப்பிடுவது போன்ற வழிபாடுடையவர்கள், நாவலங்காரமற வேறு புகழ் பேசி நின்னற் புகழ் வழுத்தாத பேர்=நாவினுக்கலங்காரமில்லாமல் நினது புகழைத் தவிர வேறு மேன்மைகளைப் பேசுகின்றவர்கள், நாய்ப்பாலை விரும்பி=நாயினுடைய முலைப்பாலை வேண்டி, ஆன் றாய்ப்பாலை நயவாத நவையுடைப் பேயராவார்=பசுவினுடைய குற்றமற்ற பாலை விரும்பிக்கொள்ளாத, சிறித்தற் கேதுவையுடையவர்களாகிய பேயின்றன்மை பெற்றவர்கள், நீவலந்தர=நீவலத்திலிருந்து கொண்டு, நினது குற்றேவல் புரியாது=உன்னுடைய சிறிய ஏவுதற் பணியைச் செய்ய மாட்டாது, மற்றேவல் புரிவோர்=பின் மற்றவர்களுடைய ஏவுதற்றொழிலைச்செய்கின்றவர்கள், நெல்லுக்கிறைக்காத=நெற்பயிருக்குத் தண்ணீரிறைக்காமல், புல்லுக்கிறைக்கின்ற=புல்பயிருக்கிறைக்கின்ற, நெடிய=வளர்ந்திருக்கின்ற, வெறும்=ஒருவருக்கும் பயன்படாத வீணராவார்=வீணர்கள் ஆவார்கள், தாவலஞ் சென்னை=சீதேவிபலத்தை மேன்மேலும் பெற்றுக்கொண்டிருக்கின்றசென்னை.

(க-ரை) சிறு தெய்வ வழிபாடு கூடாது உன்னையன்றி வேறு தெய்வத்தை யான் வணங்கக்கூடாது. உன்னையே எப்பொழுதும் நான் பேசிக்கொண்டிருக்க வேண்டும், உன்னுடைய திருப்பணி தானென்றைக்கு நான் செய்து கொண்டிருக்க வேண்டும்.

(வி-ரை) ஆடு, கோழி, பன்றி, எருமை, முதலியவைகளைக் கொன்று, அநாகரீகமாக வழிபாடு செய்வதற்காக இருக்கின்ற, பல தெய்வங்களையுஞ் சிறு தெய்வம் என்று வள்ளற்பெருமானார் கூறுகின்றார். "அவி சொரிந்தாயிரம் வேட்டலின் ஒன்றின் உயிர் செகுத்துண்ணாமை நன்று" என்று மாதானுபங்கியென்று சொல்லப்படுகின்ற திருவள்ளுவரும் புகன்றிருக்கின்றார். தாவலம் என்ற இடத்தில் வருவித்துப் பொருளுரைத்தனம்

பிரமனினி என்னைப் பிறப்பிக்க வல்லனோ பெய்
சிறையிலின்னு மொரு காற்
பின்பட்டு நிற்குமோ முன்பட்ட குட்டிற் பெருந்
துயர் மறந்து விடுமோ
இரவு நிறமுடையிமனினி யெனைக் கனவிலு பிறப்
பிக்க வெண்ணமுறுமோ
எண்ணூறுனதையுண்டு சிதையுண்ட தன்னுடல்
இருந்த வடுவெண்ணூறுமோ
கரவு பெறு வினை வந்து நலியுமோ வதனையொரு
காசுக்கு மதியேனெலாங்
கற்றவர்கள் பற்றுநின் றிருவருளை யானுங் கலந்திடப்
பெற்று நின்றேன்
தரமருவு சென்னையிற் கந்தகோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச்சைவமணி
சண்முகத் தெய்வமணியே. (27)

(ப-ரை) பிரமனினியென்னைப் பிறப்பிக்க வல்லனோ = வேதனாகிய சதுர்முகன் என்னை இனிமேலும் படைத்துக் கொண்டிருக்க வல்லவனோ, பெய் சிறையிலின்னுமொரு காற்பின்பட்டு நிற்குமோ = அவனால் தள்ளப்படுகின்ற சிறையிலென்னுடைய ஒரு கால் பின்னுக்குப் பட்டு ஏற்குமோ, முன்பட்ட குட்டிற் பெருந் துயர் மறந்துவிடுமோ = முன்னால் நான் அடைபட்டிருந்த குட்டில் இருக்கமுடியாமலுங் கிடக்கமுடியாமலுமனுபவித்துக்கொண்டிருந்த பெரியதாகிய துயரம் மறந்து போகுமோ, இரவு நிறமுடையிய

மனினியெனைக் கனவிலுமிறப்பிக்க வெண்ணமுறுமோ = இரவினிற மாகிய இருட்டைப் போன்றிருக்கின்ற இயமன் இன்னும் என்னை யிறக்கச் செய்விக்கவேண்டி எண்ணிக்கொண்டிருப்பானோ, என்றுரு றுனுதையுண்டு சிதையுண்ட தன்னுடலிருந்தவடு எண்ணுறுமோ = எண்ணவேமாட்டேன். உதைக்கப்பட்டதாற் சின்னபின்னப்பட்ட தன்னுடலிலே இருக்கின்ற காயங்களைப்பார்த்து எண்ணமாட்டானு, காவுபெறு வினைவநது நலியுமோ வதனையொரு காசுக்கு மதியே னெலாம் = பிறப்பு இறப்பு என்ற இரண்டு தொழில்களையுஞ் செய் விக்கின்ற காவுடைய வினை (பலன்) வந்து என்னை வாட்டிக் கொண்டிருக்குமோ, அப்படியானல் அந்த வினையை ஒரு காசுக்குக் கூட நான் மதிக்கவேமாட்டேன். கற்றவர்கள் பறறுநின்றிருவருளை யானுங் கலந்திடப்பெற்று நின்றேன் = கற்றுக்கொண்டதிருவுன் னடியைப் பற்றிக்கொண்டு உன்னுடைய திருவருளோடு நானுங் கலந்துவிட்டேன் தாமருவு சென்னை = பலம மேவிப் பொருந்தி யிருக்கின்ற சென்னை.

(க-ரை) பிரமனினிமேல் என்னைப் படைக்கமாட்டான். இயமன் இனிமேல் என்னை இறச்கச்செய்யமாட்டான். கற்றவர்களானவர்கள் பெற்றுக்கொண்ட திருவருளில் யான் கலந்துகொண்டேன்.

(வி-ரை) என்னைப் பிறக்கச் செய்ய பிரமனல் முடியாது. அவனற் படைக்கப்படுகின்ற சிறையில் என் கால் தங்கி நிற்குமோ உயிரானது திருவருளை நினைந்து வழிபாடியற்றிக் கொண்டிருக் கின்றது. இது உயிரினது முற்போக்கு கருப்பையில் அடைவதற் கேதுவான வழிகளைப் பின்பற்றிலைது பிற்போக்கு அது எங்கே கிடைக்குமென்று பார்த்தால் பெண்களது வயிற்றுச்சிறையில் வைக்கின்ற கால்பின் கால் இதுகருதியே வள்ளற் பெருமானர் "பெய் சிறையில் இன்னுமொரு கால் பிறட்டு நிற்குமோ" என்று சொல்கின்றர். இயமன் என்னை இறப்பிக்கமாட்டான். ஏனைன்றல் முன்னல் மிருகண்டு மகாமுனிவர் மகனகிய மார்க்கண்டேயர் சிவ பூசை செய்து கொண்டிருந்தார் அந்தக் காலத்தில் மார்க்கண்டே யருக்கு முடிவு நெருங்கிய உடனே, இயமனனவன் அவர் முன்றோ ன்றி அவரைத் தன்கூட வரச் சொன்னன். அப்பொழுது மார்க்

கண்டேயர் அவ்வாறு செய்யாது இயமனுக்குப் பயந்து சிவலிங் கத்தை மார்போடு இறுகச் சேர்த்து அணைத்துக்கொண்டார்.

அதைப் பார்த்தயமன் மார்க்கண்டேயர் மீது பாசத்தை வீசினன். அந்தப் பாசக்கயிறானது மார்க்கண்டேயரையும் அவரால் சேரப்பிடிக்கப்பட்டிருக்கிற சிவலிங்கத்தையுஞ் சுற்றியது. உடனே இயமன் இருவரையும் பாசக்கயிற்றால் இழுத்தான். அப்படியிழுத்த உடனே அடியார்களுக்குற்ற துயரை நீக்குவான் வேண்டி சிவலிங் கத்தினிடமாகத் தோன்றி முன்றலெருமையின் மீது ஆரோகணித் திருக்கின்ற இயமனைக் காலாலுதைத்துத் தள்ளினார்.

இயமன் சிவனுதைக்கப்பட்டு உருக்குலைந்து நரகடைந் துரைந்தாருகிறான். அழித்தற் றொழிலை செய்விப்பான் இயமன் குற்றம் சிவனால் மன்னிக்கப்பட்டது என்று புராணங்கள் சொல் கின்றது, இராமலிங்க சுவாமிகள் இந்த மார்க்கண்டேயருக்காக சிவ னுலுதைக்கப்பட்ட சரித்திரத்தை முருகனால் நிகழ்ந்தது என்று சொல்கின்றார்

இது கந்தபுராணத்திற்கு மாறுபாடாக இருக்கின்றதே என்று பலர் ஆலோசிக்கலாம். கடவுளானவன் பேதங்களற்றவன். உயி ரும் பேதமற்றது. சிவனானவன் சிங்கமுகாசுரன், சூரபன்பன்மன் தாருகாசுரன் என்ற மூன்று அரக்கர்களையும் அழிப்பதற்காக முருகனாக மாறினான், என்ற நிலையிலேதான் மாணிக்கவாசக சுவாமி கள் திருவாசகம் திருக்கோவையார் என்ற எட்டாவது திருமுறை யானது இராமலிங்க சுவாமிகள் ஆறு திருமுறைகளும் தம்மு ளொத்து இருக்கின்றது. இராமலிங்க சுவாமிகள் சன்மார்க்க உல கிற்குக் காண்பித்து சங்கத்தை நிருவினார். மாணிக்கவாசக சுவா மிகள் சன்மார்க்கத்தில் இறையை வழிபட்டார், சன்மார்க்கமென் பது இறையை மணாளனாகக் கருதி வழிபடுதல் சைவசித்தாந்தம் மேலே சொல்லிய உண்மையைக் கண்டு, இராமலிங்க சுவாமிகளை மாணிக்கவாசக சுவாமிகளுக்கு நிகராகச் சொல்லிவிட்டேன், என் மீது வருந்தலாம்.

அது பற்றிய கவலை என்னிடத்தில் எள்ளத்தனை கிடையாது.

யதார்த்தவாதி வெகுஜன விரோதி என்று உலகத்திலே ஒரு பழமொழியுமிருக்கின்றது. உண்மைக்கு உயர்வுண்டுமேயன்றித் தாழ்வில்லை.

நீருண்டு பொழிகின்ற காருண்டு விளைகின்ற
நிலனுண்டு பலனு முண்டு
நிதியுண்டு துதியுண்டு மதியுண்டு கதிகொண்ட
நெறியுண்டு நிலையு முண்டு
ஊருண்டு பேருண்டு மணியுண்டு பணியுண்டு
உடையுண்டு கொடையு முண்டு
உண்டுண்டு மகிழவே உணவுண்டு சாந்தமுறு
முளமுண்டு வளமு முண்டு
தேருண்டு கரியுண்டு பரியுண்டு மற்றுள்ள
செல்வங்கள் யாவுமுண்டு
தேனுண்டு வண்டுறு கடம்பணியு நின்பதத்
தியான முண்டாகி லரசே
தாருண்ட சென்னையிற் கந்த கோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே (28)

(ப-ரை) தேனுண்டு வண்டுறு கடம்பணியு நின்பதத்தியான முண்டாகிலரசே=தேனை தன்னிடத்திலுள்ளதால் வண்டுகளிருக்கின்ற கடப்பம் பூமாலையை அணிந்து கொண்டிருக்கின்ற உன்னுடைய திருவடிக்குற்ற தியானம் உண்டுமானல் அரசனே, நீருண்டு பொழிகின்ற காருண்டு=சமுத்திரத்தை நிறைபவுண்டு பெய்கின்ற மழையுண்டு, விளைகின்ற நிலனுண்டு=விளைச்சலைக் கொடுக்கின்ற நிலமுண்டு, பலனுமுண்டு=வெள்ளாமையுமுண்டு, நிதியுண்டு=பணமுண்டு, துதியுண்டு=உலகினர் துதித்தலை செய்கின்றதுண்டு மதியுண்டு=புத்தியுண்டு, கதிகொண்ட நெறியுண்டு=கதியினைச் செய்கின்ற நியதிகளுமுண்டு, நிலையுமுண்டு=சாஸ்வதமான நிலவரமுமுண்டு, ஊருண்டு=சொந்தமான ஊருண்டு, பேருண்டு=கீர்த்தியுண்டு, மணியுண்டு=ஆபரணங்கள் உண்டு, பணியுண்டு=வேலை

களுமுண்டு. உடையுண்டு=வஸ்திரங்களுண்டு, கொடையுமுண்டு= கொடுக்குஞ் செய்கையெனப் பெயர் பெற்ற ஈகையுண்டு, உண்டுண்டு மகிழவே உணவுண்டு=சாப்பிட்டுச் சாப்பிட்டு சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்க உண்டியுண்டு, சாந்தமுறு முளமுமுண்டு வளமுமுண்டு=நெஞ்சே யமாகவும் சாந்தத்தைப் பெற்றுக் கொண்டிருக்கின்ற மனமுண்டு. தேருண்டு=இரதமுண்டு, கரியுண்டு=யானையுண்டு, பரியுண்டு=குதிரைகள் உண்டு, மற்றுள்ள செல்வங்கள் யாவுமுண்டு=மற்றும் வேறுள்ளதாகிய பணங்களும் பொருளுமுண்டு.

(க-ரை) கடப்ப மலர் மாலையை அணிந்திருக்கின்ற இறைவனாகிய சுப்பிரமணியக் கடவுளை வணங்கினுக்கால், மோக்ஷமாகிய வீடு உண்டு, வேண்டிய மற்றயப் பொருளுமுண்டு.

(வி-ரை) மேலே சொல்லிய செய்யுட்குப் பொருள் அடி மறியாப்புக் கொண்டு கூட்டுப் பொருள் கண்டிருக்கின்றனம். பலனுமுண்டு, நிலையுமுண்டு, கொடையுமுண்டு என்ற இடங்களிலே இராமலிங்க அடிகள் முன்னர் புகன்றபின்னர் உம் என்றுசேர்த்துச் சொல்கின்ற நிலைகளில் இன்னவைகளுக்காகவே முன்னவைகள் உலகிலிருக்கின்றன என்று கண்டு கொள்ளவிருக்கின்றது. உம அசை என்று சொல்லிப் பொருள் கூறாது விட்டிருக்கின்றனர் பொருள் கூறவுஞ் செய்யலாம். பொருள் கூறினல் உரையின் நடை பிழைபடுகின்றதே என்று அசையென்று கழித்தனம்.

உளமெனது வசநின்றதில்லை யென்றொல்லை வினை
ஒல்லை விட்டிடவுமில்லை
உன்பதத்தன்பில்லை யென்றனுக் குற்றதுணை
உனையன்றி வேறுமில்லை
இளையனவனுக்கருள வேண்டுமென்றுன்
பாலிசைக்கின்ற பேருமில்லை
ஏழையவனுக்கருள்வதே னென்றுனெதிர்
நின்றியம்புகின்றோரு மில்லை
வளமருவு முனது திருவருள் குறைவதில்லை

மேன்மற்றொரு வழக்குமில்லை
வந்திரப்போர்களுக்கிலை யென்பதிலை நீவன்
மனத்தவனுமல்லை
தளர்விலாச் சென்னையிற் கந்தகோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உன்முகச்சைவமணி
சண்முகத் தெய்வமணியே (29)

(ப-ரை) உளமெனது வசநின்றதில்லை = உள்ளம் என்று சொல்கின்ற மனம் என் வசத்தில் நின்றதில்லை, யென்றொல்லை = என்னுடைய பழய தீய வினை, ஒல்லை விட்டிடவுமில்லை = அதனைவிட்டு மேலேறிப் போகவும் விடவில்லை, உன்பதத்தன்பில்லை = உன்னுடைய திருவடியின் மீதன்பில்லை, என்றனுக்குற்ற துணை = எனக்கு ஆபத்தில் உதவக்கூடிய வேண்டிய துணை, உனையன்றி வேறுமில்லை = உன்னையல்லாதபடி வேறு துணையுமில்லை, இளையனவனுக்கருளவேண்டுமென்றுன் பாலிசைக்கின்ற பேருமில்லை = எனக்காகவேண்டி என்னை பலமில்லாதவன் சின்னவன் அவனுக்கு நீ அருளவேண்டுமென்று சொல்லி உன்னிடத்திற் சிபார்சு செய்கின்றவர்களுமில்லை ஏழையவனுக்கருள்வதேனென்று னெதிர் நின்றியம்புகின்றோருமில்லை = ஏலாதவன், இல்லாதவன், அவனுக்கு நீ ஏன் அருட்செய்ய வேண்டுமென்று உன் முன்னால் வந்து எனக்கு மாறுகக் கோட்சொல்லி என்னைக் கெடுப்பதற்காக உன்னிடத்தில் எதிர்ப்புச் சொல்கின்றவர்களுங் கிடையாதுவளமருவு முனது திருவருள் குறைவதில்லை = செழிப்பு மிகுந்திருக்கின்ற உனது திருவடித் திருவருளானது குறைந்து போய்விடப் போகிறதுமில்லை, மேன்மற்றொரு வழக்குமில்லை = எனக்கு மேலாகவும் மாறுகவும் உன்னிடத்தில் வேறு விதமானவழக்குகளுமில்லை, வந்திரப்போர்களுக்கிலையென்பதில்லை = உன்னிடத்தில் வந்து பிச்சை கேட்கின்றவர்களுக்கு இல்லையென்று நீ சொல்கிறதே கிடையாது. வன்மனத்தவனுமல்லை = கொடிய ஈரமில்லாதமனத்தையுடையவனுமில்லை நீ.நீயென்பது இரண்டுஇரண்டு இடங்களிற் கொண்டு உரை கொள்ளப்பட்டது. தளர்விலாச் சென்னை = தளர்ச்சியென்பது தன்னிடத்திலில்லாத சென்னை,

(க-ரை) மனம் என் வசப்படுகிறதில்லை உன் திருவடியின் மீது என்னிடத்தன்பில்லை எனக்கு உன்னைத்தவிர வேறு துணையுங் கிடையாது. எனக்கருளவேண்டுமென்று உன்னிடத்திற் சிபார்சு செய்வாருமில்லை என்னைக் கெடுக்க வேண்டுமென்று கோட் புகல் வாருமில்லை.

(வி-ரை) "நடையிற் சிறந்தவன் மாருதி மைந்தன் நவில் தரு பொன், உடையிற்சிறந்தவன் மாதவனாகும் உறுகணைவிற், படையிற் சிறந்தவன், சவ்வியசாசி. பசுந்தமிழ்க்குக், கொடையிற் சிறந்தவன் சுப்பரமண்யக் குருபரனே" என்று முருகன் புகழப்பட்டிருக்கின்றான். நீ உயிர்கள் வருந்தத்தை நீக்குவான் வேண்டி இறைவன் திருவருளை எல்லா உயிர்களுக்கும் பாலிக்கின்னாய். அது வினையேற்று திரோ தாயியாக மாறிவரும்.

எத்திக்கு மென்னுளந் தித்திக்கு மின்பமே
என்னுயிர்க் குயிராகு மோர்
ஏகமே யானந்த போகமே யோகமே
என் பெருஞ் செல்வமேநன்
முத்திக்கு முதலான முதல்வனே மெய்ஞ்ஞான
மூர்த்தியே முடிவிலாத
முருகனே நெடியமால் மருகனே சிவபிரான்
முத்தாடு மருமை மகனே
பத்திக்கு வந்தருள் பரிந்தருளு நின்னடிப்
பற்றறுளி யென்னை யிந்தப்
படியிலே யுழல்கின்ற குடியிலே யொருவனாய்
பண்ணுமை லாண்டருளுவாய்
சத்திக்கு நீர்சென்னை கந்தகோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உன்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே (30)

(ப-ரை) எத்திக்குமென்னுளந்தித்திக்கு மின்னபமே = என்னுளத்தின்கண் எல்லாதிசைகளிலுந் தித்திப்பைச் செய்கிறஇன்பமே,

என்னுயிர்க்குயிராகுமோர் ஏகமே=என்னுயிரோடு சேர்ந்து இரண்டற்ற பேதமல்லாத ஒரு பொருளே, ஆனந்த போகமே=சந்தோஷமயமாக அனுபவிக்கின்ற போகப் பொருளே, யோகமே=இரேசக பூரக கும்பகங்களாற் சித்திக்கின்ற யோகப் பொருளே, என் பெருஞ் செல்வமே=என்னுடைய பெரிய ஐசுவரியமே, நன் முத்திக்கு முதலான முதல்வனே=இறை, உயிர் என்ற பேதமில்லாது கலந்திருக்கின்ற மேலான நல்ல வீட்டின்பத்தைத் தருகின்ற முதற் பொருளே, மெய்ஞ்ஞான மூர்த்தியே=உண்மையான அறிவால் அறியப்படும் மூர்த்தியே, முடிவிலாத முருகனே=முடிதல் என்பது இல்லாததும் ஆதியந்தம், நடு என்ற மூன்று விதமான தன்மைகளினும்முடிந்து கொள்ளாததும்அப்பாலுமேவிச்செல்கின்றமுருகனே நெடியமான் மருகனே=நெடியவனான நாராயணன் மக்களை மணந்து கொண்டதினாலும் உமைக்கு உடன் பிறந்தவனென்ற முறையினாலும் அவனுக்கு மருமகனாக வாய்த்தவனே, சிவபிரான் முத்தாடு மருமை மகனே=சிவபெருமான் முத்தந்தா முத்தந்தா என்று அருமையாக விளையாடிக்கொண்டிருப்பதற் கேதுவாகப் பிள்ளையானவனே பத்திக்குவந்தருள்பரிந்தருளு நின்னடி=பத்தி செய்கின்ற அடியார்களினுடைய வந்தனைக்காக மகிழ்ந்து அருளை இரங்கிக் கொடுக்கின்ற நினது திருவடி, பற்றருளி=அதையே பிடித்துக் கொண்டிருக்கிற ஆசையைத் தந்து, என்னை இந்தப்படியிலே யுழல்கின்ற குடியிலே யொருவனாய்ப் பண்ணாமல் ஆண்டருளுவாய்= உன்னை வணங்குதலல்லாது உலகப்பற்றைப் பிடித்துசிரமுறுகின்றதில் நானுமொருவனாகவிருக்காமல் ஆட்கொண்டருள் செய்ய வேண்டும் சத்திக்கு நீர்ச்சென்னை=அமாவாசை பூரணையில் பொங்குகின்ற கடலைக்கொண்ட சென்னை.

(க-ரை) உன்னடியைப் பற்ற வேண்டும். உலகாசையைப் பற்றக் கூடாது.

(வி-ரை) அருணகிரிநாத சாமிகள் சிவயோகம், சிவபோகம் என்று பலதிருப்புகல்களிற் புகழ்கிறதை இராமலிங்க அடிகள் மேற்கொண்டனர் "அவனவளது வெனுமவை மூ. வினைமையிற் றோன்றி மலத்துளதாம் அந்தமாதி என்மனார் புலவர்" என்ற செய்

கண்ட தேவநாயனார் சிவஞான போதம் முதலாவது சூத்திரத்துள் புகன்றிருக்கின்றதை இராமலிங்க அடிகளுஞ் சொன்னார்கள்.

நான் கொண்ட விரத நின்னடியலாற் பிறர்தமை
நாடாமை யாகுமிந்த
நல்விரத மாங்கனியை இன்மையெனு மொருதுட்ட
நாய் வந்து கவ்வியந்தோ
தான்கொண்டு போவதினியென் செய்வேன் என் செய்
வேன் தளராமை யென்னு மொருகைத்
தடிகொண்டடிக்கவோ வலியிலேன் சிறியனேன்
தண்முகம் பார்த்தருளுவாய்
வான்கொண்ட தெள்ளமுத வாரியே மிருகருணை
மழையே மழைக் கொண்டலே
வள்ளலே என்னிரு கண்மணியே யெனின்பமே
மயிலேறு மாணிக்கமே
தான்கொண்ட சென்னையிற் கந்த கோட்டத்துள்வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச்சைவமணி
சண்முகத் தெய்வமணியே (31)

(ப-ரை) நான் கொண்ட விரத நின்னடியலாற் பிறர்தமை நாடாமை யாகுமிந்த = நான் கொண்டிருக்கின்ற விரதமானது உன்னடியைத் தவிர மற்றயத் தெய்வங்களினது அடியை விரும்பாமையாகும். இந்த நல்விரத மாங்கனியை = இந்த நல்லவிரதமான மாம்பழத்தை, இன்மையெனுமொருதுட்டநாய்வந்து கவ்வி = இல்லாமையென்று சொல்லுகின்ற ஒரு துஷ்ட நாய் வந்து கவ்வி, அந்தோ = ஐயையோ, தான்கொண்டு போவதினி = அது தனக்கென்று கொண்டு செல்கின்றதே, இனிமேல் என் செய்கேன் என் செய்கேன் = என்ன செய்வேன் என்ன செய்வேன், தளராமை யென்னு = தளர்தலில்லாமை என்று சொல்கின்ற ஒரு கை = ஒருகையிலுள்ள தடி கொண்டடிக்கவோ = கையிலுள்ள தடியினால் அடிக்கவோ, வலியிலேன் = பலமில்லாதவனாக இருக்கின்றேன், சிறியனேன் = செயலாற் சின்னவனாகிய, த=

முகம் பார்த்தருளுவாய் = எந்தனுடைய முகத்தைப் பார்த்து அருள் புரிவாய், வான்கொண்ட தெள்ளமுத வாரியே = வானவர்களருந்திக்கொண்டிருக்கின்ற அமிர்தத்தைக் கொடுத்த கடலே மிகு கருணை மழையே மேலாகவும் மிகுதியாகவுமிருக்கின்ற கருணையைப் பெய்கின்ற மழையே, மழைக் கொண்டலே = மழை பெய்த பின்னர் மழை பெய்த கிழக்கு திக்கிலிருந்தடிக்கின்ற காற்றே, வள்ளலே = கொடையாளியே, என்னிரு கண்மணியே = என்னுடைய இரண்டு கண்ணிலுமுள்ள கருவிழியே, என்னின்பமே = நானனுபவிக்கின்ற இன்பமே, மயிலேறு மாணிக்கமே = மயிலின் மீது ஏறிவருகின்ற மாணிக்கமே, தான்கொண்ட சென்னை = நீ கொண்டிருக்கின்ற கோவிலைத்தான் கொண்டிருக்கின்ற சென்னை.

(க-ரை) உன்னைத்தவிர வேறு தெய்வத்தை வணங்கக்கூடாதென்ற விரதத் தோடிருக்கின்ற சென்னை.

(வி-ரை) ஒரு தொழிலைச் செய்யவேண்டுமென்ற உறுதி தளர்ந்துவிடுமேயானால் அங்கோ வைராக்கியம் இலலை. வைராக்கியமில்லாது போமேயானால் ஒரு தொழில் முற்றுப்பெறுவதற்கு வழி கிடையாது. வான் கொண்ட தெள்ளமுதவாரி என்ற இடத்தில் கங்கா நதியைச் சொல்லலாமே என்று நினைத்து அப்புறமாக சமுத்திரந்தான் சாலப் பொருந்தும் என்று கண்டு கொண்டு சொல்கின்றனம்.

அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை.

முற்றிற்று.

அமிர்தா பிரஸ், தூத்துக்குடி. 50.

## இந்நூலாசிரியர் பதிப்பித்த நூல்கள்

1. இராமலிங்க சுவாமிகள் தெய்வமணிமாலை விருத்தியுரை.
2. ஏழின் தத்துவார்த்த விளக்கம்.
3. ஒன்பதின் தத்துவார்த்த விளக்கம்.

## இந்நூலாசிரியர் பதிப்பிக்கவேண்டிய நூல்கள்

1. ஐந்தின் தத்துவார்த்த விளக்கம்.
2. மாணிக்கவாசகரும்-திருவாசகமும்.



திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமபுர ஆதீன
௨௪-வது மகா சந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்.

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர
ஆதீனத்தைச் சேர்ந்த
**ஸ்ரீமத் குமரகுருபர சுவாமிகள்**
அருளிச்செய்த

# திருவாரூர் நான்மணிமாலை

(மூலமும்)

சென்னை
**திருவாளர். ரா. சண்முகசுந்தரஞ் செட்டியார் அவர்கள்**
(எழுதிய வசனமும்)

இஃது
இவ்வாதீன 24-வது
அருட்குரவராக எழுந்தருளியிருக்கும்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த**
**பரமாசாரிய சுவாமிகளின்**
திருவுளப்பாங்கின்படி,

இவ்வாதீனத்துக்குச் சொந்தமான
திருவாரூர்
(ஸ்ரீ தியகாராஜ சுவாமி தேவஸ்தானம்)
இராஜாங்கக்கட்டளை கட்டளை விசாரணை
**ஸ்ரீ முத்துகுமாரஸ்வாமி நம்பிரான் அவர்களால்**

**வெளியிடப்பெற்றது.**

**1913**

[விலை ரூ. 0—2—0

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# திருவாரூர் நான்மணிமாலை



## முன்னுரை

ஆயிரந் தாமரை போலும் ஆயிரஞ் சேவடி யானும்
ஆயிரம் பொன்வரை போலும் ஆயிரந் தோளுடை யானும்
ஆயிர ஞாயிறு போலும் ஆயிர நீண்முடி யானும்
ஆயிரம் பேருகந் தானு மாரூ ரமர்ந்தவம் மானே.

—திருநாவுக்கரசர்.

வீட்டின்பத்தையே நாடும் விழுமியோர்கள் பாட்டுக்கள் வாயிலாக இறைவனை யேத்துவர் எனும் திருஞானசம்பந்த சுவாமிகள் அருளுரைக்கிணங்க, திருமுறை யாசிரியர்களுக்குப் பின்னர் அவ்வக்காலத்துத் தோன்றிய அருந்தவச் சீலர்கள், பலராலும் புகழப்படும் அருட்பிரபந்தங்கள் பலவற்றை யருளினர். அவருள் தலையாயவர் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளாவார். இம் முனிவரது திருவாக்கு செந்தமிழுலகம் போற்றுந்தகையது. மகாவித்துவான் யாழ்ப்பாணம் வடகோவை சபாபதி நாவலரவர்கள் தாம் இயற்றிய திராவிடப் பிரகாசிகையில் பிரபந்தங்களைப்பற்றிய அரிய பகுதியில் "இவற்றுள் குமரகுருபர முனிவர் பிரபந்தங்களும், சிவஞானயோகிகள் பிரபந்தங்களும் வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்த நுண்பொருள் விளங்குங் கொழிதமிழ்க் கவிகளுடையன" எனப் பாராட்டியுள்ளனர். பண்டைய சங்கநூற்கள் சொற்றொகுதியும், இடைக்காலத்தே விளங்கிய உரையாசிரியர் விளக்கங்களும், தமிழ் வளர்ச்சிக் குரிய முறைகளும் இவர்நூல்களில் நன்கு புலனாகும்.

முனிவரருளிய பதினைந்து பிரபந்தங்களுள் திருவாரூர் நான்மணிமாலை எனும் நூல் ஒன்றாகும். இஃது அந்தாதித் தொடையால் வெண்பா, கலித்துறை, விருத்தம், ஆசிரியப்பா எனும் நால்வகைப் பாக்களால் ஆக்கப்பட்டது. பொருட் சுவையும், சொற்சுவையும் நிறைந்துள்ளது. சிவபெருமான்

சடைமுடி தினைப்புனமாகவும் (26), கிழக்கொல்லன்தொழில் நிலையமாகவும் (38) உருவகமாக்கியது கற்போர் மனத்திற்கு மகிழ்ச்சிதரும். வேதத்திற்கு மறை என்று பெயர் அமைந்த பொருத்தமும் (20), இறைவன் எச்சமயத்தார்க்கும் பொது என்று காட்டிய பொருத்தமும் (22) அறிவுடையோர் அதிசயிக்கத்தக்கன. இறைவன் பேரருளாளன் என்றுணர்த்தும் முறைமையும் (36), பாசக்கட்டால் பிறவித்துன்பம் அனுபவிக்கும் உயிர்களது துயரநிலையை பாசம் பதியினையணுகாப் பான்மையால், இறைவன் அறியமாட்டார் என்று முடிக்கும் முறைமையும் (16) யாவரும் போற்றத்தக்கதேயாம். நகைச் சுவைபட சிவபெருமான் தன்னருகில் மயில்போன்ற உமை யம்மை யிருக்கும் துணிவால் புற்றிலிடங்கொண்டா ரென்றும், சர்ப்பாபரண மணிந்தா ரென்றும், கொடியவிட முண்டா ரென்றும் (34) கூறியது கற்றோரை யின்புறச்செய்யும். இவை யன்றி இயற்கை வனப்புக்கள் சோலைகளிலும், மகளிராடல் களிலும் முனிவர் சிறப்புற வமைத்துள்ளனர்.

இவ்வரும் மேன்மைகளையுடைய நூல் செய்யுள் வடிவத்தி லுளதாதலினால் தமிழ்ப் புலமையுடையோரே யன்றி யேனை யோர் அரும் பொருள்களை யறியமாட்டாராகலான் உரைநடை யாவர்க்கும் பயன்படும் என்று திருக்கயிலாயபரம்பரைத் தருமபுரவாதீனத்து 24-வது பட்டத்தமர்ந்து அருட் செங்கோல் செலுத்துகின்ற ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளவர்கள் திருவுளம்பற்றினார்கள். அவர்கள் வேதநெறி, சைவநெறியாகிய இரண்டும் சீர்பெற நின்று விளங்கச் செய்யும் பணிகள்பல. திருக்கோயிற்றிருப்பணி களாலும், திருவிழாச் சிறப்புக்களாலும், வேதசிவாகமதேவார பாடசாலைகளில் மாணவர்களைப் பயிற்றுவிப்பதோடு சிவபுரா ணங்கள் சைவ சித்தாந்த நூல்கள் ஆகிய இவைகளின் நுண் பொருள்களை விரிவுரைகளால் யாண்டும் விளக்குவித்தலாலும், உலகியல் நூல்களும் சமயசாத்திர நூல்களும் ஆக்குவித்துப் பரப்புவதாலும் அவர்கள் பெருமை சைவவுலகம் நன்கு அறிந் ததே. அம்மாண்புடையார் அடியேனையும் பொருளாகக் கொண்டு இவ்வுரைநடையினை எழுதித்தருக என ஆணைதந்த னர். அவ்வருளாணையே இந்நூலை ஆக்குவதற்குக் காரணமாக நின்றது. இதனை ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் சிவஞான வொளியையாண்டும் அச்சுப்பிரதிநூல்கள் வாயிலாகப் பரவச்

செய்யக்கருதி யமைத்த, தங்களது ஞானசம்பந்த வச்சகத்தில் மிக வழகாக அச்சிட்டுச் சைவவுலகத்திற்கு வழங்கியுள்ளனர். என்னை யீர்த்தாட்கொண்டு இப்பணியைச் செய்யுமாறு அருளிய இவ்வருந்தவப் பெருந்தகையாருக்குப் பன்முறையும் வணக்கம் செய்து நன்றி செலுத்தும் கடமைப் பாட்டினை யுடையேன். சைவவுலகம் இந்நூலின் அரும்பொருள்களைக்கண்டு மகிழ்க. நிரந்தரமான அன்பு இறைவன்பால் பெருகுக.

திருவொற்றியூர்,
12—5—43.

**ரா. சண்முகசுந்தரன்.**

## ஸ்ரீ குமரகுருபரமுனிவர் அருளிய நூல்கள் :—

1. கந்தர்கலிவெண்பா.
2, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்.
3. மீனாட்சியம்மை குறம்.
4. மீனாட்சியம்மை யிரட்டைமணிமாலை.
5. மதுரைக்கலம்பகம்.
6. நீதிநெறி விளக்கம்.
7. திருவாரூர் நான்மணிமாலை.
8. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்.
9. சிதம்பரம் மும்மணிக்கோவை.
10. சிதம்பரச் செய்யுட்கோவை.
11. சிவகாமியம்மை யிரட்டைமணிமாலை.
12. பண்டார மும்மணிக்கோவை.
13. காசிக்கலம்பகம்.
14. சகலகலாவல்லிமாலை.
15. கைலைக்கலம்பகம்.



உ
சிவமயம்

# செந்தமிழ்ப்புரவலர் கோவைகிழார்

எழுதிய

# மதிப்புரை

திருவாரூர் நான்மணிமாலை எனும் சிறந்த பிரபந்தத்தை உரைநடையாக எழுதி வெளியிடவேண்டும் என்று தருமபுர ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசன்னிதானம் அவர்கள் கருதியது மிகவும் போற்றத்தக்கதே. இந்த நான்மணிமாலை சிறந்த கருத்துக்களைக் கொண்ட ஒரு அரியநூல். படிப்பில் அதிகமாகத் தேராதார் அதன் ஆழ்ந்த கருத்துக்களை அறிவதரிது. உரை நடையாக இருக்குமாகில் அதன் அரிய பெரிய கருத்துக்களை எளிதில் அறிந்து கொள்ளலாம். ஆகவே அதனை உரைநடையில் எழுதச் செய்து அச்சில்வெளியிட ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசன்னிதானம் எண்ணியது நமது மக்கள் செய்த பெரும் பாக்கியமாகும்.

இவ்வுரைநடைநூல் எழுதியவர் தமிழன்னையின் சிறந்த மகவுரும், சைவசித்தாந்த நூல்களைத் தெளிவாகக்கற்று, ஐயமற வுணர்ந்தவரும், எவரும் அறியும்வண்ணம் அவைகளை எடுத்துரைக்க வல்லுநருமான திரு. ரா. சண்முகசுந்தரஞ் செட்டியார் ஆவர். அவர்கள் இந்த உரைநடையில் ஆண்டிருக்கும் முறை சிறந்ததாகும். ஒவ்வொரு செய்யுளுக்கும் தெளிவான பொழிப்புரை தந்திருக்கிறார்கள். பாட்டிலுள்ள வருணனைகளை விவரமாக எடுத்துக்காட்டியுள்ளார்கள். அணிவகைகளை யாவர் உள்ளத்திலும் ஊன்றிநிற்கும்வண்ணம் அழகாக எடுத்து உரைத்திருக்கிறார்கள். முக்கியமான இடங்களில் துறைகளும் விளக்கப்பட்டுள்ளன. ஆகவே இம்முறை மிகச் சிறந்ததேயாகும்.

இந்நூலால் பாடசாலை மாணவர்கள் பெரிதும் பயன்பெறக் கூடும். அவர்கள் பொழிப்புரை எழுதுவதற்கு இவ்வுரை நடையை ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக வைத்துக்கொள்ளலாம். அணிகளை விரித்து எழுதுவதற்கு இந்நடை பயன்படலாம். வருணனைகளை வைத்துக் கொண்டு இது என்ன அணி என்று வினுக்களை எழுப்பி அவர்களே விடைகளை உணர்ந்து சொல்

லவும் இந்நூல் பயன்படும். இயற்கையாகச் சொல்லக் கூடிய வரலாறுகளில் அணிகளைப் புகுத்திச் சொல்ல வேண்டுமாயின் எவ்வாறு சொல்வது என்பதற்கு இவ் வுரைநடையை ஒரு பாட புத்தகமாகக் கொள்ளலாம்.

இந்நூலாசிரியர் சிறந்த நுணுக்கமான அணிவகைகளை இந்நூலில் ஆண்டிருப்பதனால் இஃதொரு அலங்கார காவியம் எனவும் சொல்லக்கூடும். மேருமலையை ஈசன் வளைக்கவில்லை, வெட்கத்தினால் அது தானே வளைந்த தென்பது எத்துணைச் சிறந்தது (2); குரங்கு பலாப்பழத்தை நகங்களால் கீறி சுளைகள் எடுத்ததை, நரசிங்கம் இரணியனது வயிற்றைக்கீறிக் குடலை எடுத்தற்கு உவமையாக்கினது எத்துணைச்சிறந்தது (4); திருக்கோயில் கமலாலயம் என்ற பேர் பெற்ற காரணத்தைக் கற்பனை செய்து கூறுவது எத்துணைச் சிறந்தது (7); ஈதலும் ஏற்றலும் ஒரு பொருளிடத்துண்டு எனும் அற்புதத்தை இறைவன் திருவுருவத்தி லமைத்துக் கூறுவது எத்துணைச் சிறந்தது (8); இயமனுடைய கொடுந்தொழிலை மீன் வலைஞன் மீன் பிடித்தலுக்கு உவமை கூறி அதிலிருந்து தப்புவிக்க ஈசனுக்கு வணக்கம் கூறுதல் எத்துணைச் சிறந்தது (12); பரம்பொருளின் இலக்கணம் தில்லையம்பலத்தில் அறியும் வண்ணம் திருவாரூரிலும் அப்பெயராலே அறியக் கூடும் என்ற கருத்து எத்துணைப்பொருள் செறிந்தது (22); அகப்பொருளின் மேன்மையை அறியவேண்டுமாயின் சோலையின் கண்ணே இரண்டு மாம்பிஞ்சுகளையும், இளநீர்களையும் காணவில்லை என்று தலைமகன்கூறினதாக வுள்ள பொருட்சுவை யொன்றே அறிதல் போதும் (27); அதனை உரைநடையாசிரியர் தெளிவாக விளக்கிப் புறங்காட்டல், (நாணிக்) கண்புதைக்க வருந்தல் என்ற இரு துறைகளிலும் கொள்ளலாம் எனக் கூறியுள்ளனர். இவ்வாறு அணிவகைகளைச் சிறப்புப்பெறக் கூறும் இந்நூல் தமிழின் அருமையை அறிவதற்குச் சிறந்ததன்றோ! ஆகவே அதனை உரைநடையில் எழுதுவித்து வெளியிட்டதற்காகத் தமிழுலகம் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசன்னிதானத்திற்கு மிகவும் கடமைப் பாடுடையதாகுமல்லவா!

கோவை நிலையம்,
தியாகராயநகர்,
சென்னை
12—4—43.

**கோவைகிழார்.**

உ

சிவமயம்

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் வரலாறு



பதினேழாம் நூற்றாண்டினிடைக்காலத்தே பாண்டி வள நாட்டில் திருநெல்வேலி ஜில்லாவில் ஸ்ரீ வைகுண்டமெனும் கயிலாசபுரத்தில் சைவவேளாளர் குலத்தில் சண்முகசிகாமணிக் கவிராயரும் அவரது நன்மனைவியார் சிவகாமசுந்தரியம்மையாரும் இல்லறம் இனிது நடாத்தி யொழுகிவந்தனர். அவர்கட்கு மகப்பேறு பன்னா ளில்லாதிருக்கவே திருச்செந்திலாண்டவன்பால் அன்பு பூண்டு கசிந்துருகி வழிபாடுசெய்துவர, அவனது திருவருளால் குமரகுருபர சுவாமிகள் திருவவதாரஞ் செய்தனர். இவருக்குப் பின்னர் குமாரகவிகள் என்பாரும் பிறந்தனர்.

குமரகுருபரர் ஐந்தாண்டுவரையிலும் அழுவதும் பேசுவதுமின்றியிருக்க, அவரைப்பெற்றோர் அரிய நோன்புகள் அநுட்டித்தனர். திருச்செந்தில் முருகக்கடவுளின் பெருங்கருணையால் அவர்தம் திருக்கோயில் வழிபாடு செய்யச் சென்றிருந்த காலத்து யாவரும் அதிசயிக்க வாய்திறந்து 'கந்தர்கலிவெண்பா' எனும் அருட்பிரபந்தத்தை யருளினர். பின்னர்த் திருச்செந்தூரில் பல நாள் தங்கியிருந்து முருகனைக் காலந்தோறும் தரிசித்து வருவாராயினார். திருவருள் வேட்கை முதிரவே தமக்கு ஒரு ஞானாசிரியரை உதவவேண்டும் என்று முருகப் பெருமானை வேண்ட ஆண்டவன் 'நீ வடதிசை நோக்கிச் செல்வாயாக. செல்லுகையில் எவரிடம் உன்வாக்குத் தடைப்படுகின்றதோ, அவரையே ஞானாசிரியராகக் கொள்க.' என அசரீரியாக அருளினர். சுவாமிகள் அதனைக் கேட்டதும் மகிழ்ச்சியுற்றுத் தாய் தந்தையரையகன்று வடதிசையாகப்போய்த் திருப்பரங்குன்றம் சேர்ந்தார்.

அங்கிருந்து மதுரையில் திருக்கோயில்கொண்டுள்ள அங்கயற்கண்ணியாகிய மீனாட்சியம்மையார்மீது "மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்" பாடியருளினார். அதன் பெருமையை உலகத்தாருக்கு அறிவிக்க ஓர் அற்புத நிகழ்ச்சியை நிகழ்த்த திருவுளங் கொண்ட இறைவி அக்காலத்தில் மதுரையை ஆண்ட

திருமலை நாயகரது கனவில் ஓர் இளம் பெண்ணுக எழுந்தருளி 'குமரகுருபரன் நம்மீது இயற்றிய பிள்ளைத்தமிழினை அரங்கேற்றுவிப்பாய்' எனப் பணித்தனர். நாயகரும் உடனே விழித்து மகிழ்ச்சியுற்று, அங்கயற்கண்ணம்மையைப் போற்றிப் பணிந்து, தக்க பரிவாரங்களுடன் திருப்பரங்குன்றத்திற்குச் சென்றார். குமரகுருபரமுனிவரைக்கண்டு வணங்கி, அவரையும், அவரது அரிய நூலாகிய மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழினையும், யானையின்மேலேற்றிவந்து நகர் வலஞ்செய்வித்து மீனுட்சியம்மையார் திருக்கோயிற் சன்னிதியில் அந்நூலை அரங்கேற்றுவித்தார். இந்நூலில் "தொடுக்குங்கடவுட் பழம்பாடல்" எனும் அரும்பாடலைக்கேட்டு மீனுட்சியம்மையார் ஒரு சிறு பெண்வடிவந் தாங்கிப்போந்து, தாம் அணிந்திருந்த முத்துமாலையை முனிவர் கழுத்தில் அணிந்து மறைந்தருளினர். நாயகரும் மிக மகிழ்ச்சியடைந்து பல நிதிகளோடு யானை, குதிரை, சிவிகை, குடை, கொடி முதலிய விருதுகளையுந் தந்தனர். அவர் வேண்டுகோளின்படி மீனுட்சியம்மைகுறம், மீனுட்சியம்மையிரட்டைமணிமாலை, மதுரைக்கலம்பகம், நீதிநெறிவிளக்கம் என்னும் நூல்களை மதுரையிலிருந்தே யியற்றினர்.

சிலநாள் வைகிப் பின்னர்த் திருமலை நாயகரிடத்தில் விடைபெற்று மதுரையினின்றும் நீங்கிப் பல தலங்களை தரிசித்துத் திருவாரூரை யடைந்தார். திருவாரூர்ப் பூங்கோயிலில் தியாகேசரை வணங்கி அவர்மீது திருவாரூர் நான்மணிமாலை எனும் பிரபந்தத்தைப் பாடியருளித் திருவாரூரினின்றும் நீங்கித் தருமபுர மடாலய மடைந்தார். அங்கு அருட்குரவராக எழுந்தருளியிருந்த 4-வது மகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ மாசிலாமணி தேசிகரது திருமுன்புசென்று அவர் கேட்குங் கேள்விகளுக்கு விடை கூறிவருங்கால் திருத்தொண்டர் புராணமாகிய பெரிய புராணத்திலுள்ள "ஐந்துபேரறிவுங் கண்களே கொள்ள" எனவரும் திருவிருத்தத்திற்கு அனுபவப்பொருள் வினவ குமரகுருபரருக்கு வாக்குத் தடைப்பட்டது. முருகன் அருளிய திருவாக்கு நினைவுக்குவர இவரே ஞானசிரியரென் றுணர்ந்து அவரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் தமக்கு ஞானசிரியராக வேண்டுமென்று விண்ணப்பித்தார். தேசிகரும் சின்னுள் சிதம்பரவாசமேனும் செய்துவரும்படி ஆணைதர, குருபரர் சிதம்பரத்திற்குச் செல்லலானார்.

செல்பவர் திருப்புள்ளிருக்குவேளூரெனும் வைத்தீசுவரன் கோயிலில் எழுந்தருளியிருக்கும் முத்துக்குமாரசுவாமியை வழிபட்டு அவர்மீது "முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்" பாடி பின்னர்ச் சிதம்பரம் சேர்ந்தார். சிதம்பரத்தில் பொன்னம்பலத்தில் இறைவனது ஆநந்தக்கூத்தினைக் கண்டு கும்பிட்டு அங்குறையும் நாளில் சிதம்பர மும்மணிக்கோவை, சிதம்பரச் செய்யுட்கோவை, சிவகாமியம்மை யிரட்டைமணிமாலை என்னும் பிரபந்தங்களை யியற்றினார். அங்குச் சிலநாள் தங்கி மீண்டும் தருமபுரமடைந்து மாசிலாமணிதேசிகரது திருவடிகளை வணங்க அவரும் முனிவருக்கு ஞானோபதேசஞ் செய்தருளினர். முனிவர் தமது ஞானாசிரியராகிய மாசிலாமணி தேசிகர் மீது பண்டார மும்மணிக்கோவை என்னும் பிரபந்தத்தைப் பாடிச் சமர்பித்தனர். தாம் இதுகாறும் பரிசாகப்பெற்ற யாவையும் காணிக்கையாகவைத்து 'இதனை ஏற்றருள்க' என்று அவ்வாசிரியரைவேண்ட, அவர் 'இப்பொருள்களைக்கொண்டு காசிசென்று தருமஞ்செய்க' எனப் பணித்தனர்.

குமரகுருபரமுனிவர் அவ்வாணையைப்போற்றி, காசியை யடைந்தார். கங்கையில் நீராடி விசாலாட்சிதன்னொடு மமர்ந்த விசுவநாதரைத் தரிசித்துக் 'காசிக்கலம்பகம்' பாடியருளினர். அப்பொழுது காசியையாண்டுவந்த பாதுஷாவைக் கண்டு அவ்வரசனிடம் பேசுதற்காக "சகலகலாவல்லிமாலை" எனும் பிரபந்தத்தைப் பாடி இந்துஸ்தான்பாஷையை ஓதாதுணரப் பெற்றார். பின்னர் பாதுஷாவைக்கண்டு திருவருள் விளக்கங்களாய அற்புதங்களை நிகழ்த்தி அவ்வரசர் தம்பால் அன்புபூண்டொழுகி நிற்க, காசியில் தருமமியற்றுதற்கு வேண்டிய நிலங்களை அவன்பாற்பெற்று அங்கு ஓர் மடம் நிறுவி சைவசமய ஸ்தாபனஞ் செய்திருந்து சிவனடிநீழலை யடைந்தார்.

---

சிவமயம்

# திருவாரூர் நான்மணிமாலை



## காப்பு

நாடுங் கமலேசர் நான்மணிமா லைக்குமிகப்
பாடுங் கவிதைநலம் பாலிக்கும்—வீடொன்ற
முப்போ தகத்தின் முயல்வோர்க்கு முன்னிற்கும்
கைப்போ தகத்தின் கழல்.

## நூல்

நீரூர்ந்த முந்நீர் நிலவலய நீள்கொடிஞ்சித்
தேரூர்ந்த செல்வத் தியாகனே—ஆரூர
வீதிவிடங் காவடங்கா வேலைவிடம் போலுமதிப்
பாதிவிடங் காகடைக்கண் பார்த்து. 1

பார்பெற்ற வல்லிக்கும் பாகீ ரதிக்குமெய்ப் பாதியுமத்
தார்பெற்ற வேணியுந் தந்தார் தியாகர் தடம்புயத்தின்
சீர்பெற்றி லேமென்று நாணுல் வணங்கிச் சிலையெனவும்
பேர்பெற்ற தாற்பொன் மலைகுனித் தாரெம் பிரானென்பரே. 2

என்பாக நகுதலையோ டெழிலாக வணிந்தகம
லேச மற்றுன்
றன்பாக மிடப்பாகத் தலைவிகரு விழிதோய்ந்தும்
தலைவி பாகத்
தன்பாக நின்றிருநோக் கவைதோய்ந்துந் திருநிறம்வே
றுகை யாலப்
பொன்பாக மிதுவெனவு நின்பாக மிதுவெனவும்
புகலொ ணுதே. 3

ஒண்கதிர் பரப்புஞ் செங்கதிர்க் கடவுள்
வெயில்கண் டறியா வீங்கிருட் பிழம்பிற்

புயல்கண் படுக்கும் பூந்தண் பொதும்பிற்
காவலர்ப் பயந்து பாதபத் தொதுங்கிய
இருவே றுருவிற் கருவிரன் மந்தி
பொன்னிறம் பழுத்த பூஞ்சுளை வருக்கை
முன்னுறக் காண்டலு முளையெயி றிலங்க
மடித்தலத் திருத்தி வகிர்ந்துவள் ளுகிரால்
தொடுத்தபொற் சுளைபல வெடுத்துவாய் மடுப்பது
மானிட மடங்க றாணிடைத் தோன்றி
ஆடகப் பெயரி னவுணன்மார் பிடந்து
நீடுபைங் குடரி னிணங்கவர்ந் துண்டென
இறும்பூது பயக்கு நறும்பணை மருதத்
தந்த ணாரூ ரெந்தையெம் பெரும
சிங்கஞ் சுமந்த செழுமணித் தவிசிற்
கங்குலும் பகலுங் கலந்தினி திருந்தாங்
கிடம்வலம் பொலிந்த விறைவியு நீயும்
நடுவண் வைகு நாகிளங் குழவியை
ஒருவிரி னொருவி ருள்ளநெக் குருக
இருவிருந் தனித்தனி யேந்தினிர் தழீஇ
முச்சுடர் குளிர்ப்ப முறைமுறை நோக்கி
உச்சி மோந்துமப் பச்சிளங் குழவி
நாறுசெங் குமுதத் தேறலோ டொழுகும்
எழுதாக் கிளவியி னேழிசை பழுத்த
இழுமென் குரல மழலைத் தீஞ்சொற்
சுவையமு துண்ணுஞ் செவிகளுக் கையவென்
பொருளில் புன்மொழி போக்கி
அருள்பெற வமைந்ததோ ரற்புத முடைத்தே. 4

தேங்குபுக ழாரூர்த் தியாகர்க்கெண் டிக்குமொளி
வீங்கு பகற்போது வெண்படமாம்—தூங்கிருள்சூழ்
கங்குற் பொழுது கரும்படமாஞ் செம்படமாம்
பொங்குற்ற புன்மாலைப் போது. 5

போதொன் றியதண் பொழிற்கமலேசர்பொன் மார்பிலெந்தாய்
சூதொன்று கொங்கைச் சுவடென்பு ராற்றோல் களிற்றுரிவை
மீதொன் றுவகண்டு வெங்கோப மாமுகன் வெண்மருப்பால்
ஈதொன் றடுகளி றென்றெதிர் பாய்ந்த வினைச்சுவடே. 6

இணங்குகம லாலயமா விதயத்திற் பொலிந்ததியா
கேச ரம்பொற்
கணங்குழைமண் மகளிதய கமலத்தும் பொலிதலினக்
கமல மான
மணங்கமழ்பங் கயத்தடஞ்சூழ் கமலைகம லாலயப்பேர்
வாய்த்த தான்மற்
றணங்கனையா ரிதயமுந்தம் மருட்கொழுந ரிதயமுமொன்
றுகுந் தானே. 7

தானமால் களிறு மாநிதிக் குவையும்
ஏனைய பிறவு மீகுந ரீக
நலம்பா டின்றி நாண்டுறந் தொரீஇ
இலம்பா டலைப்ப வேற்குந ரேற்க
புரவலர் புரத்தலு மிரவல ரிரத்தலும்
இருவே றியற்கையு மிவ்வுல குடைத்தே
அதா அன்று
ஒருகா லத்தி லுருவமற் றொன்றே
இடப்பான் முப்பத் திரண்டறம் வளர்ப்ப
வலப்பா லிரத்தன் மாநிலத் தின்றே
விண்டொட நிவந்த வியன்றுகிற் கொடிகள்
மண்டலம் போழ்ந்து மதியக டுடைப்ப
வாணிலா வமுதம் வழங்கியக் கொடிகள்
வேனிலிற் பயின்ற வெப்பம தாற்றுபு
கொடியா ரெத்துணைக் கொடுமை செய்யினும்
மதியார் செய்திடு முதவியை யுணர்த்தும்
பன்மணி மாடப் பொன்மதிற் கமலைக்
கடிநகர் வைப்பினிற் கண்டேம்
வடிவ மற்றிது வாழிய பெரிதே. 8

பெருமான் றமிழ்க்கமலைப் பெம்மான்கைம் மானும்
கருமா னுரியதளுங் கச்சும்—ஒருமானும்
சங்கத் தடங்காதுந் தார்மார்புங் கண்டக்கால்
அங்கத் தடங்கா தவா. 9

வாவியம் போருகஞ் சூழ்கம லேசர்புள் வாய்கிழித்த
தூவியம் போருகந் தோறுநின் றோர்துணைத் தாளடைந்த
ஆவியம் போருகந் தாயிரங் கூற்றுடன் றூலுமஞ்சேல்
நாவியம் போருக நன்னெஞ்ச மேயவர் நாமங்களே. 10

நாம வேற்படைக் கடவுளைப் பயந்தருள்
நங்கைதென் கமலேசர்
வாம பாகத்தைக் கொளவலப் பாகநீர்
மங்கைகொண் டனள்போலாம்
தாம நீற்றொளி தன்னிறங் காட்டவெண்
டலைநிரை நுரைகாட்டக்
காமர் பூங்கொடி மடந்தையர் மதர்விழிக்
கயலுலா வரலாலே. 11

வருமுலை சுமந்து வாங்கிய நுசுப்பிற்
புரிகுழன் மடந்தையர் பொன்னெடு மாடத்
தொண்கதிர் வயிரமுந் தண்கதிர் நீலமும்
சேயொளி பரப்புஞ் செம்மணிக் குழாமும்
மாயிரு டுரந்து மழகதி ரெறிப்பச்
சுரநதி முதல வரநதி மூன்றும்
திருவநீண் மறுகிற் செல்வது கடுப்ப
ஒள்ளொளி ததும்பு மொண்டமிழ்க் கமலைத்
தெள்ளமு துறைக்குந் திங்களங் கண்ணித்
தீநிறக் கடவுளின் கான்முறை வணங்குதும்
கூற்றெனப் பெயரிய கொடுந்தொழி லுளையன்
ஊற்றமில் யாக்கை யுவர்நீர்க் கேணிப்
புலத்தலை யுயிர்மீ னலைத்தனன் பிடிப்ப
ஐவளி பித்தென வமைத்துவைத் திருந்த
முத்தலைத் தூண்டி றாண்டி யத்தலை
வாழ்நாண் மிதப்பு நோக்கித் தாழா
தயிறலைத் தொடங்கி யெயிறலைத் திருத்தலிற்
றள்ளா முயற்சி தவறுபட் டொழிந்தன
வெள்குறீஇ மற்றவன் விம்மித னுக
அருட்பெருங் கடலினவ் வாருயிர் மீனம்
கருக்குழி கழியப் பாய்ந்து தெரிப்பரும்
பரமா னந்தத் திரையொடு முலாவி
எய்தரும் பெருமித மெய்த
ஐயநின் கடைக்க ணருளுதி யெனவே. 12

என்பணிந்த தென்கமலை யீசனூர் பூங்கோயில்
முன்பணிந்த தெய்வ முனிவோர்கள்—அன்பென்னும்

புண்சுமந்தோ நந்தி புடைத்தென்னார் புண்ணியனார்
மண்சுமந்தா ரென்றுருகு வர். 13

வரந்தந் தருள வரதம்வைத் தாலென் வரதமிடக்
கரந்தந்த தாலிவர் கையதன் றேபலி காதலித்துச்
சிரந்தந்த செங்கைக் கமலேசர் நாமந் தியாகரென்ப
தரந்தந்த வாள்விழி யாடந்த தாங்கொ லறம்வளர்த்தே. 14

வள்ளமுலைக் கலைமடந்தை மகிழ்நர்தலை மாலைசிர
மாலை யாகக்
கொள்ளுவது மலர்மடந்தை கொழுநர்தலை கிண்கிணியாக்
கோத்துச் சாத்த
உள்ளுவது மொழிவதுமற் றொழியாயே லடிமுடிகள்
உணர்ந்தே மென்றே
கள்ளமொழி யான்புகிற்றென் கமலேச வவர்க்கவையே
கரியு மாமே. 15

கருந்தாது கடுத்த பெரும்பணை தாங்கும்
படர்மருப் பெருமைபைங் குவளை குதட்டி
மடிமடை திறந்து வழிந்தபா லருவி
கரைபொரு தலைப்பப் பெருகுபூந் தடத்து
வெண்டோ டவிழ்த்த முண்டகத் தவிசிற்
பானீர் பிரித்துண் டுவெள் ளெகினம்
நூற்பெருங் கடலு ளுண்பொரு டெரித்து
நாற்பயன் கொள்ளு நாமகட் பொருவும்
மென்பான் மருதத் தண்புனற் கமலைத்
தென்பான் மேருவிற் றிகழ்பூங் கோயில்
மூவ ரகண்ட மூர்த்தியென் றேத்தும்
தேவ ரகண்ட தெய்வ நாயக
நின்னடித் தொழும்பி னிலைமையின் றேனுநின்
றன்னடித் தொழும்பர் சார்புபெற் றுய்தலிற்
சிறியவென் விழுமந் தீர்ப்பது கடனென
அறியா யல்லை யறிந்துவைத் திருந்தும்
தீரா வஞ்சத் தீப்பிறப் பலைப்பச்
சோரா நின்றவென் றுயரொழித் தருள்கிலை
புறக்கணித் திருந்ததை யன்றே குறித்திடிற்
கோள்வாய் முனிவர் சாபநீர்ப் பிறந்த

தீவாய் வல்வினைத் தீப்பயன் கொண்மார்
உடல்சுமந் துழலுமக் கடவுளர்க் கல்லதை
பிறவியின் றுயர்நினக் கறிவரி தாகலின்
அருளா தொழிந்தனை போலும்
கருணையிற் பொலிந்த கண்ணுத லோயே. 16

கண்ணனார் பொய்ச்சூள் கடைப்பிடித்தோ தென்புலத்தார்
அண்ணலா ரஞ்சுவரென் றஞ்சியோ—விண்ணோர்
விருந்தாடு மாரூரா மென்மலர்த்தா ரூக்கா
திருந்தாடு இன்றவா வென். 17

என்னுயிர்க் கொக்கு மிளஞ்சேயொ
டேழுல கீன்றவனை
மன்னுயிர்க் கொக்குங் கமலைப்
பிரான்மணி கண்டங்கண்டு
மின்னுயிர்க் கும்புய லென்றுமென்
கொன்றைபைந் தாதுயிர்க்கப்
பொன்னுயிர்க் கொண்கன் பொலன்றுகி
லாமெந்தை பூந்துகிலே. 18

பூமாதி னிதயகம லத்து வைகும்
பொலிவானு மரியணைமேற் புணரி யீன்ற
மாமாது வழிபடவீற் றிருத்த லானும்
மறைமுதலு நடுமுதலு முடிவி னின்ற
தாமாத றெளிவிப்பார் போலு நீலத்
தரங்கநெடுங் கடன்ஞால மொருங்கு வாய்த்த
கோமாது மனங்குழையக் குழைந்த வாரூர்க்
குழகனார் கிண்கிணிக்கா லழக னாரே. 19

அழலவிர் சோதி முழுவெயி லெறிப்ப
இளநில வெறிக்குங் குளிர்மதிக் குழவியும்
வெஞ்சினம் பொதிந்த நஞ்சுமிழ் பகுவாய்
வெள்ளைமுள் ளெயிற்றுப் பிள்ளைவா ளரவும்
தெண்டிரை கொழிக்குந் தீம்புனற் கங்கைத்
தண்டுறை மருங்கிற் றனிவிளை யாட
உடன்வைத் தாற்றிய படர்சடைக் கடவுள்
எறுழ்வலித் தறுகட் டெறுசினக் கேழல்

முளையெயி றிலங்க முருகுகோப் புளித்துத்
தளையவி ழிதழித் தண்டார் மார்ப
திருவிழி யிரண்டினு மிருசுடர் வழங்கலின்
இரவுநன் பகலு மொருபுடை கிடந்தெனக்
கடங்கலுழ் கரடத் தடங்களிற் றுரிவையும்
மடங்கலி னுரியு முடன்கிடந் தலமர
விண்பட நிவந்த திண்புயா சல
நெட்டிலைக் கமுகி னெடுங்கயி றூர்த்துக்
கட்டுபொன் னூசல் கன்னிய ராடவப்
பைங்குலைக் கமுகு பழுக்காய் சிந்த
வெண்கதிர் நித்திலம் வெடித்துகு தோற்றம்
கந்தரத் தழுகு கவர்ந்தன விவையென
அந்தி லாங்கவ ரார்த்தன ரலைப்ப
ஒண்மிட றுடைந்தாங் குதிரஞ் சிந்தக்
கண்முத் துகுத்துக் கலுழ்வது கடுக்கும்
தண்டலை யுடுத்த வொண்டமிழ்க் கமலைப்
பொற்பதி புரக்கு மற்புதக் கூத்தநின்
சேவடிக் கொன்றிது செப்புவன் கேண்மதி
விலங்கினுண் மிக்கது விண்ணவர் தருவென
ஒருங்குவைத் தெண்ணுவ தோர்வழக் கன்மையின்
ஒத்த சாதியி னுயர்புமற் றிழிபும்
வைத்தன ரல்லதை வகுத்தனர் யாரே
ஆருயிர்க் கமைத்த வோரெழு பிறப்பினுள்
முற்படு தேவருண் முதல்வனென் றெடுத்துக்
கற்பனை கடந்த கடவுணிற் பழிச்சும்
தொன்மறைக் குலங்கள் முன்னிய தியாதெனப்
பன்முறை தெரிப்பினும் பயன்கொள வரிதால்
தேவரி னொருவனென் றியாவரு மருளுற
நீயே நின்னிலை நிகழாது மறைத்துக்
கூறிய தாரு மாகலிற்
றேறினர் மறையெனச் செப்பினர் நன்கே. 20

நல்லார் தொழுங்கமலை நாதனே நாதனெனக்
கல்லாதார் சொல்லுங் கடாவிற்கு—வெல்லும்
விடையே விடையாக மெய்யுணரா ரையுற்
றிடையே மயங்குமிது வென். 21

இதுவே பொருளென் றெவரெவர் கூறினு மேற்பதெது
அதுவே பொருளென் றறிந்துகொண் டேனப் பொருளெவர்க்கும்
பொதுவேயென் றாலும் பொருந்துமெல் லோர்க்கும் பொதுவினிற்கும்
மதுவேய் மலர்ப்பொழி லாரூரி னும்வைகும் வைகலுமே. 22

வைய முழுது முழுதுண்ண
வல்லாற் களித்து நவநிதியும்
கையி லொருவற் களித்தெமக்கே
கதிவீ டளித்தோர் கன்னிகைக்கு
மெய்யி லொருகூ றளித்தனரால்
விமலர் கமலைத் தியாகரென்ப
தைய ரிவர்க்கே தகுமுகம
னன்று புகழு மன்றுமே. 23

ஆமையோ டணிந்து தலையோ டேந்திக்
காமரு மடந்தையர் கடைதொறுங் கடைதொறும்
பலிதேர்ந் துண்ணினு முண்ணு மொலிகழற்
பைந்துழாய் முகிலும் பழமறை விரிஞ்சனும்
இந்திரா தியரு மிறைஞ்சினர் நிற்ப
மற்றவர் பதங்கள் மாற்றியும் வழங்கியும்
பற்றலர்ச் செகுத்து முற்றவர்த் தாங்கியும்
பரசுநர் பரசப் பணிகுநர் பணிய
அரசுவீற் றிருப்பினு மிருக்கு முறைசெயும்
யோக சாதனம் போகிகட் கின்மையிற்
செஞ்சடை விரித்து வெண்பொடி பூசி
எருக்கங் கண்ணியுஞ் சூடி விருப்புடை
இடப்பான் மடந்தை நொடிப்போழ்து தணப்பினும்•
மடலூர் குறிப்புத் தோன்ற விடலரும்
காமமீ தூர வேமுற் றிரந்தவள்
தாமரைச் சீறடி தைவந் தம்ம
புலவியிற் புலந்துங் கலவியிற் களித்தும்
போகமார்ந் திருப்பினு மிருக்கும் யோகிகட்
கெய்தா வொண்பொருள் கைவந்து கிடைப்ப
ஞான முத்திரை சாத்தி மோனமோ
டியோகுசெய் திருப்பினு மிருக்கு மீகெழு
தமனிய மாடத் தரமிய முற்றத்
தைங்கணைக் கிழவ னரசிய னடாத்தக்

கொங்கைமால் களிறுங் கொலைக்கண் வாட் படையும்
சில்கா ழல்குல் வெல்கொடித் தேரும்
பல்வகை யுறுப்பும் படையுறுப் பாகப்
பவக்குறும் பெறியும் தவக்குறும் பெறிந்து
நுணங்கிய நுசுப்பி னணங்கனார் குழுமிக்
கைவகுத் திருந்து கழங்கெறிந் தாட
மையுண் கண்கண் மறிந்தெழுந் தலமரல்
செம்முகத் தாமரைச் சிறையளிக் குலங்கள்
அம்மென் காந்தளி னளிக்குல மார்த்தெழக்
கலந்துடன் றழீஇக் காமுற னிகர்க்கும்
பொலன்செய் வீதிப் பொன்மதிற் கமலை
அண்ணன் மாநகர்க் கண்ணுதற் கடவுள்
கற்பனை கழன்று நிற்றலின்
நிற்பதிந் நிலையெனு நியமமோ வின்றே. 24

இன்னீ ருலகத்துக் கின்னுயிர்யா மென்றுணர்த்தும்
நன்னீர் வயற்கமலை நாதனார்—பொன்னார்ந்த
சேவடிக்கா ளானார் சிலரன்றே தென்புலத்தார்
கோவடிக்கா ளாகார் குலைந்து. 25

குலைவைத்த செவ்விள நீர்குளிர் பூம்பொழிற் கொம்புக்கின்ப
முலைவைத்த தொக்குங் கமலேசர் வேணி முகிழ்நகைவெண்
டலைவைத்த வேனற் புனமொக்குங் கங்கையத் தண் புனத்தில்
நிலைவைத்த மாதரை யொக்குங் கவணைக்கு நீள்பிறையே. 26

பிறையொழுக வொழுகுபுனற் கங்கை யாற்றின்
பேரணையிற் றொடுத்துவிட்ட பெரும்பாம் பென்னக்
கறையொழுகும் படவரவம் படரும் வேணிக்
கண்ணுதலார் கமலையிற்பைங் கமலை போல்வீர்
நறையொழுகு மலர்ப்பொழில்குத் தகையாத் தந்தீர்
நானிரண்டு மாவடுவு நாடிக் காணேன்,
நிறையொழுகு மிளநீரு நிற்கக் காணேன்
நீர்செய்த காரியமென் னிகழ்த்து வேனே. 27

வேனிலா னுறுப்பின் மென்றசை யிறைச்சி
தீநாக் கறியத் திருக்கண் டிறந்தோய்
நான்மறை முனிவன் கான்முளை நிற்ப
விடற்கரும் பாசமோ டுடற்பொறை நீங்க

உயிருண் கூற்றுக்குத் திருவடி வைத்தோய்
கருங்கடல் வண்ணன் வெள்விடை யாகி
அடிக டாங்கிய வுதவிக் காங்கவன்
முழுவென்பு சுமந்த கழுமுட் படையோய்
தேவா சிரயன் றிருக்கா வணத்து
மேவா நின்ற விண்ணவர் குழாங்கள்
உருத்திர கணங்களென் றோடினர் வணங்கி
அருக்கிய முதல வகனமர்ந் தளிப்ப
இத்தலத் துற்றவ ரினித்தலத் துறுரெனக்
கைத்தலத் தேந்திய கனன்மழு வுறழும்
மழுவுடைக் கைய ராகி விழுமிதின்
மாந்தர் யாவருங் காந்தியிற் பொலியும்
வரமிகு கமலைத் திருநகர்ப் பொலிந்தோய்
எழுதாக் கிளவிநின் மொழியெனப் படுதலின்
நின்பெருந் தன்மை நீயே நவிற்றுதல்
மன்பெரும் புலமைத் தன்றே யும்பரின்
நின்னோ ரன்னோ ரின்மையி னின்னிலை
கூறாய் நீயெனிற் றேறுந ரிலரால்
தன்னுடை யாற்றன் முன்னோர் முன்னர்த்
தற்புகழ் கிளவியுந் தகுமென் றம்ம
நிற்புகழ்ந் திசைத்தனை நீயே யாக
இருடீர் காட்சிப் பொருடுணிந் துணர்த்தா
தியங்கா மரபி னிதுவிது பொருளென
மயங்கக் கூறுதல் மாண்புடைத் தன்றே
அளவில் காட்சியை யையமின் றுணர்த்தலிற்
றளரா நிலைமைத் தென்ப வென்றலிற்
றன்னுடை மயக்கந் திசைமேல் வைத்துச்
சென்னெறி பிழைத்தோன் றிசைமயங் கிற்றென
மொழிகுவ தேய்ப்ப முதுக்குறை வின்மையிற்
பழமறை மயங்கிற் றென்னு முழுவதும்
எய்யா திசைக்குதும் போலும்
ஐயநின் றன்மை யளப்பரி தெமக்கே. 28

அள்ளற் கருஞ்சேற் றகன்பணைசூ ழாரூரர்
வெள்ளப் புனற்சடைமேல் வெண்டிங்கள்—புள்ளுருவாய்
நண்ணிலா தாரை நகைக்குநகை யையன்றோ
தண்ணிலா வென்னுஞ் சகம். 39

தண்மல ரும்பொழிற் றென்கம லேசர்க்குச் சாத்துகின்ற
ஒண்மலர் சொன்மலர்க் கொவ்வாது போலுமற் றோர்புலவன்
பண்மலர் சாத்திப் பணிகொண்ட வாபச்சை மால்சிவந்த
கண்மலர் சாத்தியுங் காண்பரி தான கழன்மலரே. 30

மல்லல்வளங் கனிந்தபுகழ்க் கமலேசர் திருவுருவும்
வாம பாகத்
தல்லமர் பைங் குழலுமையா டிருவுருவு மிருவருக்கும்
அமுத மான
கொல்லயில்வேற் பசுங்குழவி திருவுருவு மருவுருவாம்
குணங்கண் மூன்றின்
நல்லுருவா தலினன்றே விவரகில காரணராய்
நவில்கின் றாரே. 31

நவமணி குயின்ற நாஞ்சில்சூழ் கிடக்கும்
உவளகங் கண்டுற் றுவாக்கட லிஃதெனப்
பருகுவா னமைந்த கருவிமா மழையும்
செங்கண்மால் களிறுஞ் சென்றன படிய
வெங்கண்வா ளுழவர் வேற்றுமை தெரியார்
வல்விலங் கிடுதலின் வல்விலங் கிதுவெனச்
செல்விலங் கிடவெதிர் சென்றனர் பற்றுக்
காக பந்தரிற் கைந்நிமிர்த் தெழுந்து
பாகொடு முலாவிப் படர்தரு தோற்றம்
நெடுவேல் வழுதி நிகளம் பூட்டிக்
கொடுபோ தந்த கொண்டலை நிகர்க்கும்
சீர்கெழு கமலைத் திருநகர் புரக்கும்
கார்திரண் டன்ன கறைமிடற் றண்ணல்
மூவரென் றெண்ணநின் முதற்றொழில் பூண்டும்
ஏவலிற் செய்துமென் றெண்ணா ராகி
அடங்கா வகந்தைக் கறிவெலாம் வழங்கி
உடம்பு வேறா யுயிர்ப்பொறை சுமந்து
நாளு நாளு நேடினர் திரிந்தும்
காணா தொழிந்ததை நிற்க நாணா
தியாவரு மிறைஞ்ச விறுமாப் பெய்துபு
தேவரென் றிருக்குஞ் சிலர்பிறர் தவத்தினும்
மிகப்பெருந் தொண்டரொ டிகலிமற் றுன்னொடும்

பகைத்திறம் பூண்ட பதகனே யெனினும்
நின்றிருப் பாத நேர்வரக் கண்டு
பொன்றின னேனும் புகழ்பெற் றிருத்தலின்
இமையா முக்கணெந் தாய்க்கு
நமனார் செய்த நற்றவம் பெரிதே. 32

நற்கரும்பு முக்கட் கரும்பென்னு நங்கைமீர்
விற்கரும்பன் கைக்கரும்போ வேம்பென்னும்—சொற்கரும்பின்
வாமக் கரும்பு மனைக்கரும்பா மாரூரர்
காமக் கரும்புங் கரும்பு. 33

கரும்புற்ற செந்நெல் வயற்கம லேசர்கண் டார்க்குமச்சம்
தரும்புற்றி னிற்குடி கொண்டிருந் தாரது தானுமன்றி
விரும்புற்று மாசுணப் பூணணிந் தார்வெவ் விடமுமுண்டார்
சுரும்புற்ற கார்வரைத் தோகைபங் கான துணிவுகொண் டே. 34

கொண்டலை யலைத்தபல தண்டலை யுடுத்தழகு
கொண்டக மலைப்ப தியுளார்க்
கண்டபி னெனக்கிதழி தந்தன ரெனப்பசலை
கண்டுயிர் தளிர்த்த மடவாள்
அண்டரமு தொத்தவமு தந்தனையி ருட்கடுவி
தன்பர ருண்மிச்சில் கொலெனு
உண்டிடு முளத்திலவ ருண்குவரென் மிச்சிலென
உண்டதை மறுத்து மிழுமே. 35

உமிழ்தேன் பிலிற்று மொள்ளிணர்க் கூந்தல்
அமிழ்துகு மழலை யம்மென் றீஞ்சொற்
சில்லரித் தடங்கண் மெல்லிய லொருத்தி
வரிசிலைத் தடக்கைக் குரிசின்மற் றொருவன்
பொன்னெடு மார்பிற் பொலன்கல னிமைப்பத்
தன்னுருத் தோற்றந் தரிக்கலள் வெருண்டு
மாலா யினனென வணங்கின னிரத்தலிற்
றேலா மொழியை வாழியை பெரிதெனப்
புலந்தன ளெழுதலுங் கலங்கினன் வெரீஇக்
கண்மலர் சிவப்ப மெய்பசப் பெய்தலிற்
றானு மாலாந் தன்மையள் கொல்லெனத்
தேறினன் றாழ்ந்து சிலம்படி திருத்திப்

பஞ்சியிற் பொலிந்த குஞ்சிய னிரப்பக்
கூடின ளல்லள் கூடா ளல்லள்
கைம்மிகு சீற்றமுங் காதலு மலைப்ப
வெள்ளப் புணர்ச்சியின் வேட்கையுள் ளடக்கி
உள்ளப் புணர்ச்சிய ளூடின ணிற்பது
தாதவிழ் தெரியற் சாக்கியர் பெருமான்
காதலுட் கிடப்பக் கல்லெறிந் தற்றே
இத்திற மகளி ரிளைஞரோ டாடும்
நித்தில மாட நீண்மறு குடுத்த
மைம்மா முகிறவழ் மணிமதிற் கமலைப்
பெம்மா னருமைப் பெருமா ளாயினும்
ஊனுண் வாழ்க்கைக் கானவர் குருசில்
செஞ்சிலை சுமந்த கருமுகி லேய்ப்ப
உண்டுமிழ் தீநீ ருவந்தன ராடியும்
விருப்படிக் கொண்ட மிச்சிலூன் மிசைந்தும்
செருப்படிக் கடிகள் செம்மாந் திருந்தும்
தொல்புகழ் விசயன் வில்லடி பொறுத்தும்
அருந்தமிழ் வழுதி பிரம்படிக் குவந்தும்
நள்ளிருள் யாமத்து நாவலர் பெருமான்
தள்ளாக் காத றணித்தற் கம்ம
பரவை வாய்தலிற் பதமலர் சேப்ப
ஒருகா லல்ல விருகா னடந்தும்
எளியரி னெளிய ராயினர்
அளியர் போலு மன்பர்க டமக்கே. 36

தம்மேனி வெண்பொடியாற் றண்ணளியா லாரூரர்
செம்மேனி கங்கைத் திருநதியே—அம்மேனி
மானே யமுனையந்த வாணிநதி யுங்குமரன்
தானே குடைவேந் தனித்து. 37

தன்னெக்குஞ் செல்வக் கமலைப் பிரான்செஞ் சடாடவிமற்
றென்னெக்கு மென்னி னெரியொக்குங் கொன்றை யெரியிலிட்ட
பொன்னெக்கும் வண்டு கரியொக்குங் கங்கையப் பொன்செய்விக்கும்
மின்னெக்கும் பொன்செய் கிழக்கொல்ல னெக்குமவ் வெண்பிறையே.

வெண்ணிலவு கொழித்தெறிக்குஞ் செஞ்சடைமோ லியர்வீதி
விடங்க ராரூர்க்

கண்ணுதல்பொற் புயவரைசேர் தனவரைக ளிரண்டவற்றுட்
கனக மேரு
அண்ணல்புய வரைக்குடைந்து குழைந்துதலை வணங்கிடுநம்
அன்னை பார
வண்ணமுலைத் தடவரையவ் வரைகுழையப் பொருவதல்லால்
வணங்கி டாதே. 39

வண்டுகூட் டுண்ண நுண்டுளி பிலிற்றித்
தண்டே னுறைக்குந் தடமலர்ப் பொதும்பரின்
விழுக்குலை தெறிப்ப விட்புலத் தவர்க்குப்
பழுக்காய் தூக்கும் பச்சிளங் கமுகிற்
செடிபடு முல்லைக் கொடிபடர்ந் தேறித்
தலைவிரித் தன்ன கிளைதொறும் பணைத்து
மறிந்துகீழ் விழுந்தந் நறுந்துணர்க் கொடிகள்
நாற்றிசைப் புறத்து நான்றன மடிந்து
தாற்றிளங் கதலித் தண்டினிற் படரவப்
பைங்குலைக் கமுகிற் படர்சிறை விரித்தொரு
கண்செய் கூந்தற் களிமயி லடிப்ப
நெடுந்தாண் மந்திகள் குடங்கையிற் றூக்கி
முட்புறக் கனிக டாக்கக் கொட்புறும்
வானர மொன்று வருக்கைத் தீங்கனி
தானெடுத் தேந்துபு தலைமேற் கொண்டு
மந்திக டொடர மருண்டுமற் றந்தப்
பைந்துணர்க் கொடியிற் படர்தரு தோற்றம்
வடஞ்சூழ்ந்து கிடந்த நெடும்பெருங் கம்பத்
தணங்கனு ளொருத்தி யாடின ணிற்பப்
பெரும்பணை தாங்கி மருங்கினர் கொட்டக்
குடந்தலைக் கொண்டொரு கூன்கழைக் கூத்தன்
வடந்தனி னடக்கும் வண்ணம தேய்க்கும்
பூம்பணை மருதத் தீம்புனற் கமலைத்
திருநகர் புரக்குங் கருணையங் கடவுள்
அன்பெனு மந்தரத் தாசைநாண் பிணித்து
வண்டுழாய் முகுந்தன் மதித்தனன் வருத்த
அருட்பெருங் கடலிற் றோன்றி விருப்பொடும்
இந்திரன் வேண்ட வும்பர்நாட் டெய்தி
அந்தமி றிருவொடு மரசவற் குதவி
ஒருகோ லோச்சி யிருநிலம் புரப்பான்

திசைதிசை யுருட்டுந் திகிரியன் சென்ற
முசுகுந்த னுக்கு முன்னின் றாங்குப்
பொன்னுல கிழிந்து புடவியிற் றோன்றி
மன்னுயிர்க் கின்னருள் வழங்குதும் யாமென
மேவர வழங்குமான் மன்ற
யாவரு நமர்கா ளிறைஞ்சுமின் னீரே.

---

சிவமயம்

# திருவாரூர் நான்மணிமாலை

## (வசனம்)

### காப்பு

வீட்டின்பம் அடைய நாடோறும் காலை, நண்பகல், மாலை என்னும் மூன்று காலங்களிலும் சிந்திப்போர்க்கு எதிர்ப்படுபவராகிய விநாயகப்பெருமானது திருவடிகள், யாவராலும் விரும்பப்படும் திருவாரூரின்கண் திருக்கோயில் கொண்டருளிய தியாகேசப் பெருமான் மீது பாடப்படுகின்ற நான்மணிமாலை எனும் பிரபந்தந்திற்குப் போற்றப்படும் கவிதைநலங்கள் மிகுதியும் தந்தருளும்.

### நூல்

1. முத்து முதலிய மணிகள்படும் வளமைகுன்றாத கடலாற் சூழப்பட்ட பூமியாகிய நீண்ட தாமரைமுகை போலும் ஒருறுப்பினைக்கொண்ட தேரினைச் செலுத்திய அருட்செல்வத்தையுடைய தியாகேசரே! திருவாரூர்ப் பெம்மானே! வீதி விடங்கன் எனும் திருநாமத்தையுடையானே! அரைச் சந்திரன் தடுத்தற்கரிய திருப் பாற்கடலில் எழுந்த ஆலகால விடம்போலக் கொல்லுகின்ற நிலவாகிய விடத்தைக் காலாநின்றது. நினது திருக்கண்ணோக்கஞ்சாத்தி என்னைக் காத்தருள்வீராக.

2. உலகத்தையீன்ற உமாதேவியாருக்குத் தமது திருமேனியில் ஒருபாதியையும், கங்கைக்குக் கொன்றைமாலையணிந்துள்ள சடையையும் கொடுத்தருளிய தியாகேசரது அகன்ற புயத்தின் சிறப்பைப் பெற்றிலேமென்று மேருமலை, நாணி(கயிற்றி)னால் வளைந்து, சிலை (வில்) எனவும் பெயர் பெற்றது.

இல்லைதறியாதார் பொன்மலையாகிய மேருமலையை எமது தலைவராகிய சிவபெருமான் வில்லாக வளைத்தார் என்று கூறுவர்.

3. திருமேனியில் எலும்பாபரணத்தை தருவெண் டலையுடனே அழகாக அணிந்துள்ள தியாகேசப் பெருமானே! நினது பாகமாகிய வலப்பாகத்தில் இடப்பாகத்தையுடைய உமாதேவியாரின் கரியகண் நோக்குவதாலும், உமாதேவியார் பாகத்தில் அன்பாக நினது திருக்கண்பார்வை படிவதாலும் இயல்பாகவுள்ள நின்திருமேனியின் நிறமாகிய செம்மையும் கருமையும் வேறுபடுகின்றமையின், உமாதேவியார்பாகம் ஈதென் றும் நினதுபாகம் ஈதென்றும் சொல்லுவதற்கு அரிதா கின்றது.

4. ஒளிபொருந்திய கிரணங்களைப் பரப்புகின்ற சிவந்த சூரியனது வெயிலைப் பார்த்தறியாத மிகுந்த விருளுடைய மேகங்கள் தூங்குகின்ற பூக்களையுடைய குளிர்ச்சி பொருந்திய சோலையின்கண்ணே, காவ லாளர்க்குப் பயந்து மரங்களில் ஒதுங்கிநின்ற மனித வுருவமும், விலங்கின் உருவமுமாகிய இரண்டு வேறு வகைப்பட்ட வடிவத்தைக்கொண்ட கரியவிரல்களை யுடைய குரங்கு பொன்னிறம் போலும் பழுத்த அழகிய சுளைகளையுடைய பலாப் பழத்தைத் தன் முன்னே பார்த்தலும், அதனைத் தன் மடியின் மீதிருத்தித் தனது முளைபோன்ற பற்கள் விளங்க, கூரிய நகத்தாற் பிளந்து வரிசையாகவுள்ள அழகிய சுளைகளைப் பல வெடுத்து உண்ணும் காட்சி, நரசிங்கமூர்த்தி தூணி னின்றும் வெளிப்பட்டு இரணியனெனும் அசுரனைத் தம்மடித்தலத் திருத்தி மார்பினைப் பிளந்து நீண்டபசிய குடரின் நிணத்தை வலித்து எடுத்து உண்பது போன்ற வியப்பைத் தரும் சிறப்பினதாய நறுமணம் வீசும் வயல்கள் சூழ்ந்த மருதநிலத்தின்கண் விளங்கும் அழகிய குளிர்ச்சியுடைய திருவாரூரில் திருக்கோயில்

கொண்டருளிய எனது தந்தையே! எனது தலைவனே! சிங்கம் சுமந்து கொண்டிருக்கின்ற ஒளிமிக்க மணியால் அலங்கரிக்கப்பட்ட சிங்காதனத்தில் இரவும் பகலும் கலந்திருந்தனபோல இடவலமாக உமாதேவியாரும் தேவரீரும் வீற்றிருந்தபோது உங்கட்கு நடுவே இருந்த மிக்க இளமையுடைய முருகனை ஒருவரைக் காட்டிலும் மற்றவர்க்கு உள்ளம் மிகநெகிழ்ந்து உருகுதலினால் நீங்கள் இருவீரும் தனித் தனியாகக் கைகளில் ஏந்தித் தழுவி மூன்று கண்களும் குளிர்ச்சியடைய பலமுறை நோக்கியும், உச்சி மோந்தும் அச்சிறுகுழவியாகிய முருகனது வாசனை வீசுகின்ற சிவந்த குமுதமலரை யொத்த வாயிதழின்கண் வாயூறலுடன் வடிகின்ற வேதம்போலும் ஏழிசைகள் பொருந்திய இனிய குரலை யுடைய மழலையாகிய இன்பந்தரும் மொழிகளைச் சுவைத் துண்ணும் செவிகளுக்கு, எம் தலைவனே! எனது பொருளில்லாத புல்லிய சொற்களைச் செலுத்தி உனது திருவருளைப்பெற நின்ற நிலைமை மிகவும் ஓர் அற்புத மாகும்.

5. நிலைத்த புகழையுடைய திருவாரூரில் விளங்கு கின்ற தியாகேசருக்கு எண்திக்குகளிலும் ஒளிநிறைந்த பகற்போது வெள்ளிய ஆடையாகும்; இருள்நிறைந்த இராப்போது கரிய ஆடையாகும்; நிறைந்த, சிவந்த மாலைப்போது செந்நிற ஆடையாகும்.

6. தியாகேசர் திருமேனியின்மீது பழைய யானைத் தோல் போர்வையாக விளங்குவதனை யானைமுகக் கடவுள் பார்த்து இஃதொரு கொல்லுங்களிறு என்று எண்ணி மிகுந்த கோபாவேசத்துடன் வெள்ளிய கொம்புகளால் எதிர்த்துத் தாக்கியதால் உண்டான இரண்டு சுவட்டினை, பூக்கள் பொருந்திய குளிர்ந்த சோலைகள் நிறைந்த திருவாரூரில் திருக்கோயில் கொண் டுள்ள தியாகேசரது அழகியமார்பில் எமது தாயாகிய உமாதேவியாரின் சூதாடுங் கருவியையொத்த கொங்கை களால் ஏற்பட்ட சுவடு என்பர்.

7. இலக்குமியாகிய **கமலா** விரும்பி ஒடுங்கும் திருமாலிதயத்தில் வீற்றிருந்தருளும் தியாகேசர் அழகிய பொற்கட்டிகளாலாகிய குண்டலங்களையணிந்த நிலமகளின் இதயகமலத்தில் எழுந்தருளியிருத்தலால், அத்திருமால் இதயகமலம் கமலாவின் இருப்பிடமானது (கமலை + ஆலயம்)போலவே நறுமணம்வீசும் தாமரைத் தடாகத்தால் சூழ்ந்த திருவாரூரும் **கமலாலயம்** எனும் பேர்பெற்றது. ஆதலினால் தெய்வ மங்கைகளாகிய பூமகள், நிலமகள் இதயங்களும் அவர்களது அருட்கணவராகிய திருமால் இதயமும் தியாகேசரைப் பேணுங்கருத்தால் ஒன்றுந்தன்மையன.

8. மதம் பொருந்திய பெரிய யானையையும், பெரிய நிதிக்குவியல்களையும், பிறபொருள்களையும் அறச்சிந்தையுடையோர் கொடுப்பாராக. நன்மையும் பெருமையும் இல்லாதாராய், வெட்கமும் அழிந்து, வறுமை வருத்த ஏற்கத்தகுதியுடையோர் ஏற்பாராக. ஆகவே இவ்வுலகம், ஈகைத் தன்மையுடையோர் தம்மிடம் வந்து இரந்தார்குக் கொடுத்துப் பாதுகாத்தலும், யாசிப்போர் இரத்தலுமாகிய இருவேறு இயல்பினையுடையதாகும். அஃதல்லாமல் ஒரே காலத்தில் ஓர் உருவம் தனது இடப் பக்கத்தால் முப்பத்திரண்டு தருமங்களைச் செய்து வளர்த்தலும், வலப்பக்கத்தால் மனைகள்தோறும் சென்று பலியேற்றலும் இப்பெரிய நிலவுலகத்தில் இல்லையாகும். அத்தகைய ஈரியல்போடுகூடிய திருவுருவத்தைத் திருவாரூரினில் தரிசித்தோம். அது நீண்ட காலம் வாழ்வதாக. இவ்வுருவங் காண்பதற்கு இடமாயுள்ள திருவாரூரின் சிறப்பு விரிப்பின், ஆகாயத்தைத் தொடும்படி உயர்ந்த பெரிய துகிற்கொடிகள் மேகமண்டலத்தைப் பிளந்து, சந்திரனது வயிற்றைக் கிழிக்க, தமக்குத் துன்பஞ் செய்தன அக்கொடிகள் என்றுங் கருதாது, ஒளிபொருந்திய நிலவாகிய அமுதத்தைச் சொரிந்து, வெயிலால் நேர்ந்த அவைகளது வெப்பத்தைப் போக்குதல் **கொடியவர் எத்துணைக் கொடுமைகள் செய்**

திடினும் பொருட்படுத்தாது அறிவுடையோர் செய்யும் உதவியை அறிவிக்கின்றதும், பலமணிகளால் அலங் கரிக்கப்பட்டதுமான மாடங்களையுடைய அழகிய மதிலாற் சூழப்பட்ட காவல் பொருந்திய நகரம் திருவாரூர் என்பதாம்.

9. எனது தலைவனும், அழியா வின்பம் அளிக்க வல்ல திருவாரூரில் திருக்கோயில் கொண்டருளிய பெருமானுமாகிய தியாகேசரது திருக்கையில் மானையும், யானையினின்றும் உரிக்கப்பட்ட தோலையும், அரையிற் கட்டிய கச்சையும், இடப்பாகம் பெற்றருளிய உமா தேவியாரையும், சங்கக்குழையணிந்த நீண்ட காதையும், மாலையணிந்த திருமார்பையும் பார்த்தபோது என் உள்ளத்து அடங்காத ஆசை மேலெழா நிற்கும்.

10. தாமரைத் தடாகங்களினால் சூழ்ந்த திருவாரூர்த் தலைவரும், அசுரனாகிய கொக்கினது வாயைப் பிளந்த திருமாலாகிய இறகு பிணித்த அம்புடையவரும், ஊழி தோறும் அழியாது விளங்குபவருமாகிய தியாகேசப் பெருமானுடைய திருவடிகள் இரண்டினையும் சரண டைந்த நல்ல நெஞ்சமே, ஆவியைக் கவரும்பொருட்டு போரினை விரும்பி ஆயிரம் இயமன் வந்து வருத்தினாலும் அஞ்சேல். அவர் நாமங்களின் உட்பொருள்களை ஆராய்ந்து உணர்வாயாக. நாவே, அவ்விறைவரது நாமங்களையே ஓதுவாயாக.

11. பெருமைவாய்ந்த திருவெண்ணீற்றின் வெள்ளிய வொளியானது தியாகேசரது வலப்பாகத்தே கங்கையின் இயல்பாயமைந்த வெண்ணிறத்தைக் காட்டுதலாலும், இறைவர் அணிந்துள்ள வெள்ளிய தலை மாலைகள் மேற்செல்லும் நுரைகளின் தோற்றத்தைக் காட்டுதலாலும், அழகிய பூங்கொடிகளையொத்த உமா தேவியார், கங்காதேவியாராகிய இருவரின் மதர்த்த கண்களாகிய கயல்மீன்கள் உலாவுதலாலும், அசுரர்க்கு

அச்சத்தை விளையாநின்ற வேலாயுதத்தையுடைய முருகப்பெருமானைப் பெற்றருளிய உமாதேவியார் அழகிய திருவாரூரின்கண் எழுந்தருளிய தியாகேசரது இடப்பாகத்தைப் பெற, வலப்பாகத்தை நீர் மங்கையாகிய கங்காதேவி தன்னுரிமையாகப் பெற்றனள் போலாம்.

12. எழுகின்ற பெரிய முலைகளைச் சுமந்து துவளும் இடையினையும், பின்னு தலைச்செய்து அலங்கரிக்கப்பட்ட கூந்தலையுமுடைய பெண்கள் விளங்கும் அழகிய நீண்ட மாடங்களில் ஒள்ளிய கிரணங்களை வீசும் வயிரமணிக் கூட்டமும், குளிர்ச்சிபொருந்திய கிரணங்களையுடைய நீலமணிக் கூட்டமும், சிவந்தவொளியைப் பரப்பும் மாணிக்கத்தின் கூட்டமும், பெரிய புறவிருளைக் கெடும்படி இளவெயிலை வீசுதல், கங்கை, யமுனை, சோணை என்று பேசப்படுகின்ற மேம்பட்ட மூன்று நதிகளும் அழகிய நீண்ட வீதிகளிற் செல்வதுபோன்று விளங்கும். அங்ஙனம் சிறந்த புகழ் நிறைந்ததும், மேலான அழியாவின்பம் அளிக்க வல்லதுமான திருவாரூரில் எழுந்தருளியுள்ள தெள்ளிய அமுதத்தைச் சொரியாநின்ற பிறைச் சந்திரனைத் திருமுடியில் அணியும் மாலையாகக் கொண்ட தீப்போலுஞ் செந்நிறமுடைய பெருமானே! எமது தலைவரே! இயமன் என்னும் பெயருடைய கொடிய தொழிலைச் செய்யும் வலைஞன் நிலவாத உடம்பாகிய உவர்நீரையுடைய கிணற்றில் உயிர்களாகிய மீன்களை வருத்திப்பிடிப்பதற்குச் சிலேத்துமம், வாதம், பித்தம் என அமைக்கப்பட்ட மூன்று தலையுள்ள தூண்டிலை உடலாகிய கிணற்றில் வீசி, வாழ்நாளாகிய சடைக்கருவியைப் பார்த்து, தாமதியாது உண்ணத்தொடங்கி, பற்களை நறநற வென்று மென்று கொண்டிருத்தலினால் தவறாத முயற்சி பிழைபட்டதென வெட்கமுற்று வியப்படைந்து நிற்கவும், அவ்வரிய உயிர்களாகிய மீன்கள் நினது அருளாகிய பெரிய கடலில் பிறவிக் குழியினின்றும் நீங்கத் தாவிப்பாய்ந்து, அறிதற்

கரிய பேரின்பமாகிய அலைகளில் உலாவி அடைதற் கருமையாகிய பெருமிதமடையவும் நினது திருக்கடைக் கண் நோக்கம் பாலிப்பீராக' என முறையீடு செய்து யாம் நினது திருவடிகளில் வணங்குவோம்.

13. அழகிய திருவாரூரில் குடிகொண்ட, எலும்பு மாலையணிந்த ஈசனாராகிய தியாகேசரது திருக்கோயிலான பூங்கோயிலின்முன்னர்ப் பணிந்தவர்களாகிய தெய்வத்தன்மை பொருந்திய முனிவோர்கள் நந்தியம் பெருமான் பிரம்புகொண்டு அடித்தலால் 'யாம் புண்ணைச் சுமந்தோம்' என்று வருந்தாது, புண்ணியனாகிய இறைவன் மண்சுமந்து கூலிகொண்டு கோலினலடிபட்ட திருவிளையாடலைச் சிந்தித்து, அவர் திருமேனி எத்துணை நொந்ததோ என்று மனம் உருகுவரெனின் அம்முனிவர்களது அன்பினை எங்ஙனம் அளவிட்டுக் கூறுவது; கூறவியலாதாம்.

14. பிச்சை விரும்பி பிரமனது தலையோட்டினை ஏந்திய சிவந்த கையினையுடைய திருவாரூர்த்தலைவர் தம் அடியார்களுக்கு வரங்களைத்தர, வரதமாகத் தமது திருக்கரத்தை வைத்தது என்ன பயனாகும்! அவ் வரதத்தைக் காட்டிய கரம் இடது கரமாம். அக்கரம் இவரது கரமன்று; உமாதேவியார் கரமேயாகும். அங் ஙனமாக இவருக்குத் தியாகரென்ற திருநாமம் கூரிய ஒளிபொருந்திய விழிகளையுடைய உமாதேவியார் முப் பத்திரண்டு அறங்களை வளர்த்துக் கொடுத்ததேயாம்.

15. அழகிய திருவாரூரில் விளங்கும் தியாகேசரே! கிண்ணம்போலும் முலையினையுடைய கலைமகள் கணவனாகிய பிரமரது தலைவரிசைகளைச் சிரமாலையாகக் கொள்ளுவதையும், பூமகளாகிய இலக்குமியின் கணவனாகிய விஷ்ணுமூர்த்தியின் தலைகளைக் கிண்கிணியாகக் கோவைசெய்து திருவடிகளில் சாத்த நினைந்துகொள்ளுவதையும் ஒழிந்தருளுவீராக. அங்ஙனம் ஒழிந்தருளாவிடில் திருமுடி திருவடிகளைக் கண்டோம் என

அவர்கள் மொழியவரின் அவர்கட்கு அம்மாலைகளே சாட்சியாகும்.

16. பசிய குவளைமலர்களை மெல்லுதலால், இரும்பினையொத்த பெரிய கிளைகள்போல அகன்ற கொம்புகளையுடைய எருமையினது மடியினின்றும் மடைபோன்று சுரந்து வடிந்த பாலாகிய அருவி கரையினை மோதி அலைக்கும்படியாகப் பெருகுகின்ற, பொலிவாகிய தடாகத்திலுள்ள வெள்ளிய இதழ்கள் அவிழ்ந்த தாமரையின்மீது வீற்றிருக்கும், பாலையும் நீரையும் பிரித்துண்ணுகின்ற, பரிசுத்தமான வெண்ணிறத்தையுடைய அன்னம், நூல்களாகிய பெருங்கடலிலுள்ள நுண்பொருள்களை உணர்த்தி அறம் பொருளின்பம் வீடெனும் நான்கு உறுதிப் பொருள்களை அறியச் செய்யும் கலைமகளையொத்து விளங்கும் சிறப்பினையுடைய மருத நிலத்திலுள்ளதும், குளிர்ச்சிபொருந்திய நீர் நிலைகள் சூழ்ந்திருக்கின்றதுமான திருவாரூரில் மேருமலைபோல் விளங்கும் திருக்கோயில்கொண்டெழுந்தருளியுள்ளவரே! பிரமன், திருமால், உருத்திரன் எனும் மூவராலும் “அகண்ட மூர்த்தியே” என்று போற்றப் படுபவரே! தேவரகண்டர் என்னும் திருநாமத்தையுடையவரே! தேவர்களைத் தன் ஆணைவழி இயக்குகின்றவரே! தேவரீரது திருவடித் தொண்டில் உறுதியுடையேனல்லே னெனினும் திருவடித் தொண்டரது இணக்கமடைந்து உய்வனாதலினால் அடியேனது துன்பத்தைத் தீர்ப்பது கடமை என அறியாதீரல்லீர். அஃது அறிந்திருந்தும் நீங்காத வஞ்சனையையுடைய கொடிய பிறவியானது என்னை வருத்தாநிற்ப அதனால் தளர்கின்ற அடியேனது துயரை ஒழித்து அருள்செய்திலீர். இங்ஙனம் புறக்கணிக்கப்பட்டிருப்பது யாது காரணமென்று யோசிக்குமிடத்து, உறுதியுடைய பிருகு முதலிய முனிவரது சாபத்தின் றன்மையாற் றோன்றிய, துன்புறுத்தும் வலியவினையினது கொடியபயனை அநுபவிப்பவராய்ப் பிறவியெடுத்த முறையால் உடலைச்

சுமந்து உழலும் திருமால் முதலிய கடவுள ரல்லது, ‡பிறவியின் துன்பத்தைத் தேவரீர் அறிதலில்லை. ஆகலான் கருணையோடு விளங்கும் நெற்றிக்கண்ணை யுடையோய்! அடியேனுக்குத் திருவருள் புரியாது ஒழிந்தீர்போலும்.

17. தேவர்களுக்கு இன்பத்தைக் கொடுக்கும் திருவாரூர்ப் பெருமானே! தேவரீரது மெல்லிய தாமரைபோன்ற திருவடியைத் தூக்காது அமர்ந்திருந்தே ஆடுகின்றனிலை, திருமால்கூறிய பொய்ம்மொழி கருதியோ? அல்லது தென்புலத்தேயுள்ள பிதுரர்தம் தலைவனாகிய இயமன் அஞ்சுவானென்று பயந்தோ? மற்று, யாது காரணத்தாலென்று அடியேனுக்குக் கூறி யருளுவீராக.

18. எனது உயிரைப் போன்ற இளைய முருகப் பெருமானுடன், ஏழுலகங்களை யீன்ற உமாதேவியாரது உயிரை யொத்தவரும், திருவாரூரில் எழுந்தருளி யிருப் பவருமான தியாகேசரது நீலமணிபோலும் கறுத்த கண்டத்தை, திருமுடியிலுள்ள மெல்லிய கொன்றை அரும்புகள் பார்த்து, மின்னலைத் தோற்றுவிக்கும் கருமேகமென்று பொன்தாதினைச் சொரிதலால், அடி யேனது தந்தையாகிய இறைவரது தோலாடை, இலக்குமியின் ஆன்மநாயகராகிய திருமாலின் பொன்னுடைபோல விளங்குவதாகும்.

19. நீல நிறம் பொருந்திய அலைகளையுடைய நெடிய கடலாற் சூழ்ந்த உலகமுழுவதையும் ஒருங்கே பெற்ற உமாதேவியாரின் மனம் குழையும்படி குழைந் தருளிய, திருவாரூரில் திருக்கோயில் கொண்டருளிய இளமையை யுடையவரும், கிண்கிணி யணிந்த திருவடிகளையுடைய அழகுடையவருமாகிய தியாகேசர்,

---

‡ "பிறப்போ டிறப்பென்று மில்லாதான் காண்" என்பது திருவாரூர்த் திருத்தாண்டகம்

பூமிதேவியினது * உள்ளத் தாமரையில் வீற்றிருத்த லாலும், திருப்பாற்கடல் பெற்ற இலக்குமி தம்மை வழிபட சிங்காதனத்தில் வீற்றிருத்தலாலும், பிரம தேவரும் திருமாலும் சங்காரகாலத்து ஒருவராகநின்ற தாமே யாதலை யாவரும் அறியத் தெளிவிப்பார்.

20. நெடிய இலைகளையுடைய கமுகமரத்தில் நீண்ட கயிறுகள் நன்றாகக் கட்டி விடப்படும் அழகிய ஊசல் களில் பெண்கள் ஆட, அப்பசிய குலைகளையுடைய கமுக மரங்கள் சிவந்த பழுத்த காய்களைச் சிந்தாநிற்ப, பாளையினின்றும் வெடித்து வெள்ளிய ஒளிபொருந்திய முத்துக்கள் சிந்துகின்ற தோற்றம், அப்பெண்கள் தங்கள் கழுத்தின் அழகை இக்கமுகமரங்கள் களவு செய்தன என்று அம்மரங்களைக் கயிற்றால் பிணைத்து வருத்துதலினால் கழுத்து உடைபட்டு உதிரம் சிந்த கண்ணீர் உகுத்து அழுவதுபோலும் காட்சியளிக்கும் குளிர்ந்த சோலைகளாற்சூழ்ந்த மேம்பட்ட அழியா வின்பம் அளிக்கவல்ல திருவாரூரையாளும் ஞானத் திருநடனம் புரிபவனே! இளநிலாவை வீசுகின்ற குளிர்ச்சியுடைய பிறைச்சந்திரனும், கொடிய கோபத்தையும், மறைந்து தங்கிய விடத்தை யுமிழ்கின்ற பிளவுபட்ட வாயினையும், கூரிய வெள்ளைப் பற்களையும் உடைய ஒளிபொருந்திய பாம்புக்குட்டியும் தெள்ளிய அலைகளை வீசுகின்ற இனிய புனலையுடைய கங்கை யினது குளிர்ந்த துறையினிடத்துத் தனித்து விளை யாடும்படி ஒருங்கே வைத்து பகைமைபோக்கிய, அனலை வீசுகின்ற சூரியன்போல நிறைந்த பிர காசத்தைத்தரும் படர்ந்தசடையுடைய இறைவனே! மிகுந்த வன்மையையும், அஞ்சாமையையும், கொல்லும் கோபத்தையும் உடைய பன்றியினது மூங்கில் முளை போன்ற கொம்பு விளங்கித் தோன்ற தேன் சொரிய முறுக்கவிழ்ந்த குளிர்ந்த கொன்றைமாலை யணிந்த

* "மேதினிக் காதன்மங்கை இதயகமலமா மாரூர்" என்றனர் சேக்கிழாரும்.

மார்புடையோனே! அழகிய இரண்டு கண்களினின்றும் சந்திர சூரியராகிய இருசுடர்கள் நிலவையும் வெயிலையும் பரப்புவதால் இருளும் நடுப்பகலும் ஓரிடத்திற் றங்கினாற் போல, மதநீரைப் பெருக்கும் கன்னத்தையுடைய பெரிய யானையினதுதோலும், நரசிங்கத்தினின்றும் உரித்த தோலும் ஒருங்கு கிடந்துஅசைய, ஆகாயத்தை யளாவி யுயர்ந்த வன்மைமிக்க மலைபோன்ற திரண்ட தோள்களை யுடையோனே! கற்பனையைக் கடந்த கடவுளே! தேவரீரது திருவடிகளுக்கு ஓர் விண்ணப்பம் அதனைக்கேட்டருள்வீராக. மிருகங்களினுள் தேவர்தரு மிக்கதென்று ஒன்றாகவைத்து எண்ணுவது ஒரு முறைமையன்றாகலின் ஒத்த சாதிப்பொருள்களை உயர்வும் இழிவும் பாராட்டி வழங்கினரல்லாமல் ,வேற்றுச் சாதிப்பொருள்களை ஒருங்குவைத்து வழங்கினர் யாவர்? ஒருவருமிலர். ஆதலால் அரிய உயிர்கட்கு அமைக்கப்பட்ட எழுவகைப் பிறப்பினுள் மேம்பட்ட தெய்வப் பிறப்பில் முதன்மையுடையவனென்று சிறப்பிக்கும் நான்கு வேதங்களும் நின்னைக்குறித்துக் கருதிய பொருள் யாதெனப் பலமுறை ஆராய்ந்தாலும் உண்மையுணர்தல் அரிதாகும். தேவருள் நீ ஒருவன் என்று யாவரும் மயக்கமுற, நீயே நினது உண்மை நிலையைத் தோன்றாதபடி மறைத்துச்சொல்லியதாகு மாகலின் அறிந்தோர் அவ்வேதங்கட்கு மறை என்று பெயரிட்டு வழங்கினர்.

21. * மெய்யன்பர்கள் வணங்கும் ஆரூரில் எழுந்தருளியிருக்கின்ற பெருமானே இறைவன்? என்று மெய்ந்நூல்களைக் கற்றுணராதார் கேட்கும் கேள்விக்கு அதனை வெல்லுகின்ற விடையாவது சிவபெருமான் ஆரோகணித்து வரும் திருமாலாகிய இடபமேயாகும். (திருமாலாகிய இடபத்தைச் சிவபெருமான் செலுத்து

---

* திருமால் முதலிய தேவர்களையே முதல்வரெனக்கொண்டு மயங்குவோர்களைத் தெளிவுபடுத்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

பவராதலின் அவரே முதல்வர் என்பது தெளிவு.) இவ்வாறுணர்ந்தும் உண்மை யறியாதவர்களாய்ச் சந்தேகமுற்றுப் பின்னும் மயங்குவது யாது காரணம்.

22. **ஒவ்வொரு சமயத்தார்களும் தங்கள் தங்கள் கடவுளே பரம்பொருள் என்று கூறினாலும், அதனை ஏற்றுக்கொள்ளும் பொருள் எதுவோ, அதுவே பரம் பொருள் என்று தெளிந்துகொண்டேன். எல்லாவற்றை யும் உடன்பாடாக ஏற்றுக்கொள்ளும் அந்த உண்மைப் பொருள் எச்சமயத்தார்க்கும் பொதுவாகுமென்று கூறி னாலும் பொருந்தும்.** ஏனெனின் யாவரும் தரிசித்தற்குப் பொதுவாகிய திருச்சிற்றம்பலத்தே அப்பொருள் நின்று நடிக்கும். அன்றியும் தேன்பொருந்திய மலர் களையுடைய சோலைகள் சூழ்ந்த ஆரூரிலும் எந்நாளும் தங்கும். (அம்பலம் பொதுவென்பது போல ஆரூரும் யாருடைய ஊர் எனப்பொருள்படுவதால் பொது என்று தொனிப்பொருள் தந்து நின்றது.)

23. திருவாரூரில் திருக்கோயில் கொண்டருளிய சிவபெருமான், கேழல் வடிவங்கொண்டு மண்ணைக் கீண்டு உண்ணவல்ல திருமாலுக்குப் பூமிமுழுவதையும் கொடுத்தலினாலும், குபேரனுக்கு ‡ ஒன்பதுநிதிச் செல் வங்களையும் கையில் கொடுத்தலினாலும், அடியர்களாகிய எங்களுக்கு முத்தி வீட்டைக் கொடுத்தலினாலும், ஒப்பற்ற உமாதேவியாருக்குத் தம் திருமேனியில் ஒரு பாகத்தைஅளித்தமையாலும் **தியாகர்** என்று மொழிவது தலைவராகிய இவருக்கே தகுதியாகும். உபசார வார்த்தையன்றாம். வெறும் புனைந்துரையுமன்று.

24 மேலோங்கிய பொன் மாளிகையினது நிலா முற்றத்தில் ஐவகை மலர்களைப் பாணங்களாகவுடைய மன்மதன் தனது அரசினைச் செலுத்துதற்கு மகளிரது

‡ சங்கம், பதுமம், மகாபதுமம், மகரம், கச்சபம், முகுந்தம், குந்தம், நீலம், வரம் என்பனவாம்

கொங்கையாகிய பெரிய யானைப்படையும், கொலைத் தொழிலை யுடைய கண்களாகிய வாளாயுதமும், ஏழு வடமாகிய மேகலையணிந்த அல்குலாகிய வெற்றிக்கொடி யணிந்த தேரும், மற்றும் பலவகையான அங்கங்களும் தனது சேனை அங்கங்களாகக்கொண்டு, பிறவியாகிய பகையினை யொழிக்கும் தவமாகிய பகையை அழித்துத் துவளும் இடையையுடைய தெய்வப்பெண்களை யொத்த மகளிர் கூடி பக்கம் வகுத்திருந்து, அம்மானைக்காயை வீசிவிளையாடா நிற்ப, மை தீட்டிய கண்கள் கீழும் மேலு மாய்ச் சுழலுதல், சிவந்தமுகமாகிய தாமரை மலரி லிருக்கும் வண்டினங்களும், அழகிய கைகளாகிய காந்தள் மலர்களிலிருக்கும் வண்டினங்களும் ஒலித்து மேலெழுந்து கலந்து தழுவி விரும்புதலை யொத்திருக்கின்றதும், அழகிய வீதிகளையுடையதும், மதிலாற் சூழப்பட்டதுமாகிய திருவாரூர் என்னும் தலைமையினையுடைய பெரிய நகரின்கண்ணே எழுந் தருளியிருக்கின்ற நெற்றிக்கண்ணையுடைய கடவுள், ஆமையினது ஓட்டினைப் பதக்கமாக அணிந்து, தலை யோட்டினைக் கையில் ஏந்தி, அழகிய தாருகவனத்து இருடி பத்தினியர் வீடுகடோறும் சென்று பிச்சை யேற்று உண்டாலும் உண்ணும்; பசிய துளசிமாலை யணிந்த மேக நிறமுடைய திருமாலும் வேதங்களை யோதும் பிரமதேவரும் இந்திராதியரும் ஒலிக்கின்ற வீரக்கழலை வணங்கி எதிர்நிற்ப, அத்தேவர்களது பதவிகளை அவர்தம் வினைக்கேற்ப நீக்கியும், கொடுத்தும், தம்மை எதிர்த்தோரை அழித்துத் தம்மைச் சரணமடைந்தோரை ஆதரித்தும், போற்றுவோர் போற்ற, வணங்குவோர் வணங்க, அரசு வீற்றிருந்து அரசாட்சி செய்தாலும் செய்யும்; இன்னும் கூறின், யோகிகளது அடையாளங்கள் போகிகட்கு விதிக்கப் படாதிருப்பினும் சிவந்த சடையை விரித்து வெள்ளிய பூதியைப் பூசி, எருக்கமாலையுந் தரித்துக் காதலாலே, இடப்பாக மமைந்த உமாதேவியார் ஒரு கணப்பொழுது தம்மை நீங்கினும் பொறுது மடலேறுவனெனும்

உறுதிக் குறிப்பு விளங்க ஆற்றொணாத காம மேலோங்க ஏக்கமுற்று இரங்கி தேவியாரது தாமரை போலும் சிறிய திருவடியை வருடி ஊடல் கொள்ளுமிடத்து வருந்தியும், கூடலில் இன்பமுற்றும், போகங்களை அனுபவித்திருப்பினும் இருக்கும்; யோகிகட்கு அடைய வரியதாம் சிறந்த உண்மைப்பொருள் கிடைக்கும் பொருட்டுச் சின்முத்திரை காட்டி மௌன நிலையோடு யோகஞ் செய்துகொண்டிருப்பினு மிருக்கும்; இவ்வாறு அக்கடவுள் கற்பனையைக் கடந்த பொருளாக விருத்த லின் அவர் மேற்கொண்டிருக்கும் நிலை இன்ன தன்மை யதாமென்று அளவுபடுத்திக் கூறலொண்ணாது.

25. இனிய நீர் சூழ்ந்த உலகத்திலுள்ள உயிர்கட் கெல்லாம் 'யாம் இனிய உயிராய் இருக்கிறோம்' என் றுணர்த்தும் நல்ல நீர்மையுடைய வயல்கள் சூழ்ந்த திருவாரூர்த் தியாகேசரது அழகு நிறைந்த திருவடிக்கு அடிமைப்பட்டவர் சிலரே யாவர். பிதுரர்கள் தலைவ னாகிய இயமனது தண்டனைக்கு அவர்கள் நடுங்கி உள்ளாகமாட்டார்கள்.

26. குலையிலே பொருந்திய செவ்விளநீரானது குளிர்ந்த பூஞ்சோலையாகிய பெண்ணுக்கு இன்பந்தரும் முலையாகவைத்ததை ஒத்து அழகுசெய்யும் சிறப்புடைய திருவாரூரில் விளங்கும், தலைமாலையணிந்த தியாகேசரது சடை சிரித்தலைச்செய்யும் வெள்ளிய தலைபோலச் சித்தரித்த மண்ணோடு வைக்கப்பட்ட தினைப்புனத்தினை யொக்கும். அச்சடையிலுள்ள கங்காதேவி அத்தண்ணிய புனத்தில் காவலென வைக்கப்பட்ட வேடப்பெண்ணை யொப்பள். அச்சடையில் நீண்டு வளைந்த பிறை அவ் வேடர்மாதர் பறவைகளை ஓட்டக் கைக்கொண் டிருக்கும் கவணையொத்து விளங்கும்.

27. சந்திரன்மேலுயர ஓடுகின்ற நீரையுடைய கங்கை யாற்றின் பெருவெள்ளத்தைத் தடுத்தற்குப் பெரிய அணைபோலும் கட்டிவிடப்பட்ட வைக்கோற்புரி

யென்று யாவரும் சொல்லும்படியாக, விடங் கக்கும் படத்தையுடைய அரவம் ஊர்ந்து செல்லும்சடையையும், நெற்றிக் கண்ணையுமுடைய சிவபெருமான் திருக்கோயில் கொண்டருளிய திருவாரூரில் இளமை தங்கிய இலக்குமியை யொத்து விளங்குபவர்களே! தேன் ஒழுகு கின்ற மலர்களையுடைய சோலையை எனக்குக் குத்தகை யாகக் கொடுத்தீர்; நான் இரண்டு மாவடுவைத் தேடியுங் காணேன். நிறைந்த இனிய நீர் ஒழுகும் இளநீரையும் கண்டேனில்லை. ஆகவே நீர் செய்த செய்கையை யான் என்னவென்று மொழிவேன்.

(இப்பாட்டு அகப்பொருட்சுவை நிரம்பியது. புறங் காட்டல் என்னுந் துறையிலேனும், கண் புதைக்க வருந்தல் என்னுந்துறையிலேனும் அமைத்துப் பொருள் கோடற்குரியதாம். பள்ளியிடத்துத் தலைமகனைக் கண்ட தலைமகள் புறங்காட்ட, அவளது கூந்தலை மாத்திரம் கண்டேன் என்றும், அவளது கண்களையும் தனங்களை யும் கண்டேனில்லை என்றும் கூறிய முறையில் தலை மகன் கூற்றாகக் கருதலாம். அஃதன்றி, தலைமகனை எதிர்ப்பட்ட தலைமகள் வெட்கத்தினால் கரங்களிரண்டி னாலும் மார்பினை யணைத்துக் கண்களைப் பொத்திக் கொண்ட காரணத்தால் தலைமகன் கண்களையும் தனங் களையும் காணவியலாது கூறிய கூற்றுமாகும்.)

28. மன்மதனது அவயவங்களின் மெல்லிய தசை யாகிய மாமிசத்தை அக்கினிதேவனுடைய நாக்குச் சுவைக்கும்படி அழகிய நெற்றிக்கண்ணைத் திறந்தருளிய வனே! நான்கு வேதங்களையும் கற்றுணர்ந்த மிருகண் டுய முனிக்கு மகனாராகிய மார்க்கண்டேய முனிவர் இறவாமல் என்றுமிருக்க, விடுதற்கரிய பாசக்கயிற் றுடனே உடலாகிய பாரம் நீங்கும்படி உயிர்களைக் கவரும் இயமனைத் திருவடியா லுதைத்தருளினவனே! கரியகடல் போலும் நிறமுடைய திருமால் திரிபுர தகன காலத்தில் வெள்ளிய இடபமதாகி திருவடிகளைத் தாங்கிய உதவிக்காக அவனது கங்காளத்தைச் சுமந்

எரு. முதுகுலத் தேவியை முன்மருதர்க் கீந்த
விதுகுலப் பாண்டியர் வேந்தும் - முதலாக

எசு. மெய்க்குந் திருத்தொண்ட வெள்ளமுஞ் செய்வினைக்கு
வைக்குந் திருத்தொண்ட வாரியும் - திக்கிறைஞ்சும்

எஎ. தானச் சுருதி குலத்தவருஞ் சைவத்து
ஞானத் தவவேட நாயகரும் - ஏனைப்

எஅ. பரிகரத் தெண்டிரைபு மண்டமெலாம் பந்தாய்த்
தரிகரப் பூதோ ததியும் - பரியாளம்

எகூ. இன்னம் பிறவுஞ்சூழ்ந் தெங்குந் துதிமுழக்கப்
பொன்னந் திருக்கோ புரநீங்கி - மின்மகுடம்

---

**எரு.** மருதர்க்கு - இடைமருதவாணர்க்கு. விதுகுலம் - சந்திரகுலம். வேந்து - வரகுணபாண்டியர்; "விரும்பின கொடுக்கை பரம்பரற் கென்று, புரிகுழற் றேவியைப் பரிவுடன் கொடுத்த, பெரிய வன்பின் வரகுண தேவரும்" (**திருவிடை. மும்மணிக்.** 28); "அளக பாரமு மதிதன பாரமுந் தோய்ந்த, களப வண்டலுங் கண்ணிணைக் கெண்டையுங் கண்டே, இளகு நெஞ்சமோ டெம்பிராற் கிவடகு மென்னுப், புளகி தஞ்செய்து மனைவியைக் கொடுபுறப் பட்டான்", "கோயி லிற்புகுந் திடைமரு தாவெனக் கூவ, வாயி லைத்திறந் திறைவனும் வரகுணு வென்னத், தாயி லுங்நல சங்கரா வுனக்கிவ டகுமேல், ஆயி னுய்குவ னல்லதுய் யேனென வறைந்தான்" (**பழைய திருவிடை மருதூர்ப்புராணம்.**)

எசு. செய்வினைக்கு - திருக்கோயிலின் அகம்படித் தொண்டுக்கு. தொண்டவாரி - தொண்டர்களாகிய கடல்.

எஎ. தானம் - உதாத்தம் முதலிய ஸ்வரஸ்தானம். சுருதிகுலத்தவர் - வேதியர். சுருதி குலத்தைவரெனவும் பாடம்; அதற்கு, கௌசிகர், காசிபர், பரத்துவாசர், கௌதமர், அகஸ்தியர் ஆகிய ஐந்து முனிவருடைய கோத்திரங் களிற் பிறந்த ஆதிசைவர்களென்று கொள்க. சைவத்துத் தவவேட நாயகர் - சைவமுனிவர்; "வேதகிரி மூதூர் வைகுஞ் சிந்தைநான்மறைச் சைவத் திறநெறி நின்றோர்" (பாயிரம், 10.)

(**பி - ம்.**) சுருதிகுலச் சைவருஞ்.

எஅ. பரிகரம் - பணிவிடைசெய்வோர் தொகுதி. தரிகரம் - தாங்குகின்ற கைகளையுடைய. பூதோததி = பூத உததி - பூதங்களாகிய கடல். பரியாளம் - பரிவாரம்; "ஆயி ஞர்பரி யாள மடைந்ததே" (**சீவக.** 949.)

எகூ. (**பி - ம்.**) எங்கும் புடைநெருங்கப்.

**எகூ-அச. 'மின்மகுடம்' என்பது முதல் திருத்தேருக்கும் திருமால், பிரமன், இந்திரன் என்பவர்க்கும் முறையே சிலேடை.**

3

(திருத்தேரும் அதில் எழுந்தருளுதலும்)

அ0. தூக்க மணியரவஞ் சூழாழி யச்சங்கம்
ஆக்க வடமடுத்தோ ரச்சுதனும் - மாக்கமலம்

அக. பூதப்பா ரேபடைத்தும் போர்ச்சா ரதிசார்ந்தும்
வேதப்பா ராட்டு விரிஞ்சனும் - சீதப்

அஉ. புயலுஞ் சசியும் புணர்ந்தம் பரத்தின்
இயலுங் கொடியிடி யேறும் - உயரியே

அ௩. தேவா சனமுன் சிறந்துபல கண்ணாடி
ஓவா திமைத்திமையோ ரூர்வேந்தும் - தேவாய்

அச. முதிருந் தமதுருவ மூன்று மொருமித்
தெதிரு மொருதிருத்தே ரேறி - மதியைத்தன்

(குடை முதலியன)

அரு. மேலிற் புயங்கம் விசும்பிடைப்போய்த் தாயென்னக்
காலிற் கவிகை கவித்தோங்கச் - சாலத்தன்

---

அ0. தூக்கம் - தொங்கக் கட்டிய சல்லி முதலியவை, நித்திரை. மணியரவம் - மணிகளின் ஒலி, மாணிக்கத்தையுடைய பாம்பு. சூழாழி அச்சங்கம் - சுற்றுகின்ற உருளைகளும், அச்சாகிய அங்கமும்; சூழ்ந்த சக்கரமும் அழகிய பாஞ்சசன்னியமும்; அ - அழகு; "அப்பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே" என்றார் **பெரியாழ்வாரும்.** ஆக்கவடம் - உண்டாக்குதலையுடைய கயிறுகள்; ஆக்கத்தையுடைய ஆலிலை; வடம் - ஆகுபெயர்.

அ0-அக. மாக்கமலமும் பூதப்பாரும் தேர் உறுப்புக்கள்; பெரிய கமலத்தையும் பூதமாகிய பூமியையும். சாரதி சார்ந்தும் - சாரதியைச் சார்ந்தும், சாரதியாகச் சார்ந்தும். விரிஞ்சன் - பிரமதேவன்.

அஉ-௩. புயல் - மேகம். சசி - சந்திரன், இந்திராணி. கொடி இடியேறு - கொடிகளும் இடிக்கின்ற இடபமும், கொடியாகிய இடியேறு; இந்திரனுக்கு இடிக்கொடி உரியது; "அசனித்துவசத்தோன்" (௩) என்றார் முன்னும். தேவாசனம் - அவி, தேவருக்குரிய ஆசனம்; தேர்த்தட்டின்மீதுள்ள மூன்று ஆசனங்களுள் இடையிலுள்ளது இது. தேவ அசனமென்றும், தேவ ஆசனமென்றும் பிரித்துப் பொருள் கொள்க. பல கண்ணாடி ஓவாது இமைத்து - பல கண்ணாடிகள் ஒழியாமல் ஒளி வீசப்பெற்று, பல விழிகள் நாடி ஒழியாமல் இமைக்கப்பெற்று. வேந்து மென்பதன் பின் ஆகிய என ஒரு சொல் வருவிக்க.

**(பி - ம்.)** சிறந்த நிலைக்கண்ணாடி.

அச-ரு. குடைக்குப் பூர்ணசந்திரனும், அதன் காம்பிற்குப் பாம்பும் உவமைகள். புயங்கம் - பாம்பு. தாயென்ன - தாவியதுபோல. கால் - காம்பு. கவிகை - குடை.

அசு. மேனியைத் தீயென்னும் வேட்கையு மேனியரா
ஆனியைச் செய்யுமெனு மச்சமும் - தானினையாப்
அஎ. பண்ணிய சாமரைக்கால் பட்டால வட்டக்கால்
அண்ணியு நீங்கியு மாங்குழலப் - பண்ணவர்க்கா
அஅ. ஊற்றுக் கடல்கடைந்தோன் ருனென்ப துண்மையா
ஏற்றுப் படாகை ரவிமூடத் - தோற்றமாம்
அகூ. கோழியான் றோகையுங் குஞ்சரத்தா னாகுவும்
ஆழியான் புள்ளு மயன்ககமும் - ஏழு
கூ௦. சகத்தர் வணக்கந் தருங்காரி நாம
யுகத்தர் சுவாவு முவாவும் - நகைத்தோடும்
கூக. ஆறிருவர் பன்னொருவர் தேரு மடல்விடையும்
வேறிருவ ரெண்மர் விமானமும் - கூறும்
கூ௨. பொருவின் மதிக்கடவுள் புத்தாரத் தேரும்
திருவின் மகன்பவனத் தேரும் - இருநாற்

---

அசு. ஆனி—ஹானி - கேடு ; அதாவது உண்டுவிடுதல். காற்றையே உணவாகக் கொள்ளுதலால் பாம்பிற்கு வாதாசனமென்று ஒரு பெயருண்டு. நினையா - நினைந்து.

அஎ. கால் - காற்று. பட்டு ஆலவட்டம் - பட்டாலாகிய விசிறி. அண்ணியும் - நெருங்கியும்.

அஅ. ஏற்றுப்படாகை - இடபமாகிய பெருங்கொடி ; படாகை - பெருங்கொடி. திருமால் பாரத யுத்தத்தில் சூரியனைச் சக்கரத்தால் மறைத்தாரென்பது ஒரு கதை ; திருமாலாகிய இடபக்கொடி.

அகூ. கோழியான் - கோழிக்கொடியை உடைய முருகக்கடவுள். தோகை - மயில். குஞ்சரத்தான் - விநாயகக் கடவுள். ஆகு - பெருச்சாளி. புள் - கருடன். ககம் - பறவை ; இங்கே அன்னப் பறவை.

கூ௦. காரியென்பது வைரவருக்கும் ஐயனுருக்கும் பெயர். யுகத்தர் - இருவர் ; யுகம் - இரண்டு. சுவா - நாய். உவா - யானை ; நிரனிறை ; "பாடுமிரு, காரிப் பெயரோர் கருனா ளியுங்களிறும்" (**திருவாரூருலா, 108-9.**)

கூக. ஆறிருவர் - துவாதசாதித்தர். பன்னொருவர் - ஏகாதசருத்திரர் ; "சிட்டருக்குப் பன்னொன்கு நீதாகும்" (**தனிப்.**) என்புழிப் போல. இருவர் - மருத்துவர்கள். எண்மர் - அட்டவசுக்கள்.

கூ௨. புது ஆரம் தேர் - புதிய முத்துவிமானம் ; "சீதக் கதிர்முத்தின் றேர்மீதிற் புட்பகத்தேர், மீதிற் பெருந்தோழன் மேவிவர" (**பூவண. உலா, 76.**) திருவின்மகன் - மன்மதன். பவனத்தேர் - தென்றற்காற்றாகிய தேர் ; பவனம் - காற்று.

௧௩. புரவர் பகடாடு போத்தழன் மீனம்
பரவு கலைபுட் பகமான - அரனயனத

௧௪. தேவா லுகைத்தேக வீரோன் பதுகணத்துத்
தேவா திபர்முதலோர் சேவிப்பப் - பூவான்

௧௫. முழுது முழங்க முனிவரெழு வோரும்
தொழுது பெரிதாசி சொல்லக் - குழகனைப்

௧௬. பொன்மலை யொன்றையிரு வெள்ளிமலை போற்றலெனத்
தன்மலைச்சம் பாதித் தவர்போற்றச் - சொன்மான்

௧௭. திருமா னிலமான் சிகராரிக் கின்பம்
தருமான் மயிடத் தலைமான் - ஒருமித்

௧௮. தெழுமகளிர் காளி யிடாகினிக ளீர்த்தச்
செழுமகளி ரெல்லாத் திரளும் - குழுமி

௧௯. அணியா தழகிய வம்மை மருங்கிற்
பணியா தரவிற் பரவத் - தணியாத

---

௧௨-௩. இருநாற் புரவர் - இந்திரன் முதலிய எட்டுத் திக்குப்பாலகர்; புரவர் - பாதுகாத்தலையுடையவர். பகடு - யானை. போத்து - எருமைக்கடா. அழன் - பிணம். நிருதி பிணமாகிய வாகனமுடையவன். கலை - மான்; இது வாயுவின் வாகனம். ஆன் - இடபம். அரன் நயனத்து - அரனுடைய விழியின்.

௧௪. ஏவால் - ஏவலால்; கட்டளையால். பூ வான் - பூமியும் வானும்.

௧௫. ஆசி - வாழ்த்து. குழகனை - சிவபெருமானை.

௧௬. பொன்மலை சிவபெருமானுக்கும், இரண்டு வெள்ளிமலைகள் கழுகு வடிவம்கொண்ட இரண்டு முனிவர்களுக்கும் உவமைகள். சம்பாதித்தவர் - சம்பு ஆதி என்னும் பெயரையுடைய இரண்டு முனிவர்கள். சொல்மான் - கலைமகள்.

௧௭. நிலமான் - பூமிதேவி. சிகராரி - இந்திரன்; மலையைச் சிறகரிந்தமைபற்றி இங்ஙனம் கூறினர். அவனுக்கு இன்பம் தரும் மான் - இந்திராணி. மயிடத்தலைமான் - எருமைத் தலையின்மீதுள்ள துர்க்கை.

௧௮. எழுமகளிர் - சத்தமாதர். இடாகினிகள் - காளியின் ஏவல் செய்வோர்கள். தீர்த்தச் செழுமகளிர் - தீர்த்த கன்னியர்.

௧௯. அணியாதழகிய அம்மை - திருமலைச் சொக்கநாயகி; இத்தலத்து அம்பிகையின் திருநாமம். பணி ஆதரவின்.

க௦௦. இன்வை யகத்துகளா லெல்லார் மணிமுடியும
முன்வையை கட்டு முடியாகத் - தொன்மை

க௦க. நரவெள்ளக் கண்மழை வெள்ளத்தை நான்கு
சுரவெள்ளப் பூமழை தூர்ப்ப - இருவர்

க௦உ. சுருக்கா விசையின் மணிகரைந்து சோர்ந்து
திருக்கா தரவுகணந் தீர - ஒருக்கட்

(வாத்தியங்கள்)

க௦௩. பதலை முழாமுருடு பம்பை படகம்
முதலிய தோற்கருவி மொய்ப்பும் - மதுரிய

க௦௪. சோதி வலம்புரி தூய சலஞ்சலம்
ஆகிய வெண்சங்க வங்கமும் - கீதப்

---

க௦௦. இன் வையகம் - இனிய பூமியின். வையை கட்டும் முடியென்றது, சிவபெருமான் திருமுடியை. அது மண்ணோடு கூடியிருந்ததென்பது இங்கே அறிதற்பாலது. எல்லார் முடியிலும் புழுதி படிந்ததென்பது கருத்து.

க௦க. நான்கு சுர வெள்ளம் - ஆதித்தர், உருத்திரர், வசுக்கள், மருத்துவர் என நால்வகையான தேவர்களின் கூட்டங்கள்; "நால்வேறு தேவர்" (**மணி.** க : 37.) இருவர் - கம்பளர் அசுவதரரென்ற இரண்டு நாகர்கள். இவர்கள் சரசுவதி தேவியைக் குறித்துத் தவஞ்செய்து வரம்பெற்று இசையில் வல்லவர்களாய்ப் பின் சிவபெருமானைக் குறித்துத் தவஞ்செய்து ஸாமகானம் முதலியவற்றால் வழிபட்டு அவருடைய திருவருளால் அவருடைய திருச்செவிகளிரண்டிலும் தோடுகளாகத் தங்கிக் கானஞ்செய்து மகிழ்விக்கின்றார்களென்பது புராணகதை (உஎகூ, ௩௬௩ - ௪); "தோடுவார் காதன்றே தோன்றாத் துணையையர், பாடுவா ரோரிருவர்க் கிட்ட படைவீடே" (**திருப்பாதிரிப் புலியூர்க் கலம்பகம்,** 16); "காதி லிரண்டுபேர்" (**தில்லைக்கலம்.** 8.)

க௦உ. சிறந்த இசையால் கல்லும் கரையுமென்பது நூற்றுணிபாதலால் மணிகரைந்து சோர்ந்ததென்றார்; "வாழொப்பி லாதவன் சேயொப்பி லாத மழவதிசை, ஆழிக் கடல்விட்டு நீபாடுங் காலத் தரிசெலுங்கால், நீழற் கவுத்துவ நீத்துச்செல் வானந்த நீண்மணிதான், காழொப் பினுநின் னிசைகேட்குங் காற்கரைந் தேகுமென்றே" (**தமிழ்நா.** 235) என்பது இந்நூலாசிரியர் வாக்கு. காது அரவு - காதுகளிலுள்ள பாம்புகள்.

க௦உ-௩. ஒருக்கட் பதலை - ஒரு பக்கத்தையுடைய பதலையென்னும் வாத்தியம்; "பதலை யொருகண் பையென வியக்குமின்" (**புறநா.** கருஉ : 17.) முருடு - ஒருவகை வாத்தியம். மதுரிய - இனித்த.

க௦௪. சலஞ்சலம் - ஒருவகைச் சங்கு.

கO௫. பெருமகரச் செங்கோட்டுப் பேரிச் சகோடக்
கருமகரச் செய்யாழ்க் கணமும் - உருகத்தம்

கO௬. ஊடுறை பண்டை யுயிர்சென் றெமையுடையான்
பாடுறை வெய்தும் படியார்ப்பக் - கோடில்

(திருச்சின்னம்)

கOஎ. உரையிற் சுருதி யொருவரைசெய் தந்த
வரையிற் குடிவந்தான் வந்தான் - பரவை

கOஅ. அலைமருந் தண்டர்க்கே யண்டர்க்கும் யார்க்கும்
மலைமருந் தாகவந்தான் வந்தான் - தொலையா

கO௯. வினைமுற்றப் பாட்டொன்று வேட்டோர் கணிகை
மனைமுற்றத் தேவந்தான் வந்தான் - எனமுன்

ககO. முழங்குதிருச் சின்ன முறைமுறைநின் றாத
வழங்குதிரு வீதி வரலும் - தொழும்பாய்

(குழாங்கள்)

ககக. நமது பதத்திறைவர் நன்கடைந்தா ரின்னும்
எமது கதிக்குமதென் றெய்தும் - திமிராரி

ககஉ. சீதன் வருணன் குலிசன் றிசையளந்த
பாதன் வனசன் பதமாதர் - ஆதி

---

கO௫. மகரயாழ், செங்கோட்டியாழ், பேரியாழ், சகோடயாழ். கரும கரம் - தொழில்களைச் செய்வனவாகிய கரத்திலுள்ள.

கO௬. பண்டை உயிரென்றது யாழ் முதலியவற்றைச்செய்த மரங் களிலிருந்த ஓரறிவுயிரை. கோடு இல் - கோணுதல் இல்லாத.

கOஎ. சுருதியை வரையாகச் செய்து; சுருதி - வேதம்; வரை - மலை, பரவை - திருப்பாற்கடல்.

கOஅ. அலைமருந்து அண்டர்க்கே உரியது. மலைமருந்து : இறைவன் திருநாமத்துள் ஒன்று; "சுருதி மலைமருந்தே" (கச௫.)

கO௯. வேட்டு - விரும்பி; "ஆங்கொருத்தி, தேனுக் கெதிருமொரு செய்யுள்போற் செய்வளவும், மானுக் கெதிர்திரும்பி வாராயே", "வேட் டொருபெண், முற்றத்தி லேவந்து முன்னிற்கி லோவென்று, சொற்றத்தில் வேறுமொரு சொல்லுண்டோ" (௩௫௩-௪, ௩அ௩-௪) என்பர் பின்.

ககO. தொழும்பு - அடிமை.

ககக. எமது கதிக்கும் அது - எம்முடைய பிறப்புக்கும் அத்தொழும்பே உரியது. திமிராரி - சூரியன்; திமிரம் - இருட்டு.

ககஉ. சீதன் - சந்திரன். குலிசன் - இந்திரன். திசை அளந்த பாதன் - திருமால். வனசன் - பிரமதேவர்.

கக௩. அரமாதர் சேடி யகமாதர் நாக
வரமாதர் மாலுழந்து வாழ்த்த - நரமாதர்

கக௪. ஈட்டமு மீண்டி யிருமருங்கும் பொன்மாடக்
கூட்டமுஞ் சாளரமுங் கோபுரமும் - ஆட்டரங்கு

கக௫. முற்றமும் பெண்கடல்வாய் மூழ்கத் தமதாயச்
சுற்றமுந் தாமுந் தொகாநிற்பார் - பொற்றுடையால்

கக௬. தூய கதலிவன மீதெனத் தொல்லைநாட்
போய பழமை புதுக்குவார் - நாயகனைச்

கக௭. சேரு மிடியுடன் சேர்கின்ற மின்முகிலாய்ச்
சோரு மருங்களகஞ் சூழ்போவார் - பாரிற்

கக௮. கலையின் மறைக்கிரிதங் கோவெனக்கண் டண்டு
மலையின் முலைநெருக்கம் வாய்ப்பார் - உலகனைத்தும்

கக௯. கண்ணுங் கழுகிரண்டு போனமையுங் காப்பாரென்
றண்ணுஞ் சகோரங்க ளாய்ப்பொலிவார் - ஒண்ணுதலும்

க௨0. சோளற்கு வில்லாய்த்தஞ் சுற்றம் வதைத்தவனை
மாளக் குனிதனுவாய் மாணுவார் - ஆளும்

க௨க. மலைக்கொழுந்து மோலி மதிக்கொழுந்து மாநீர்
அலைக்கொழுந்துங் கொன்றை யடுக்கும் - புலத்தை

---

௧கக-௨. சூரியர் முதலியோர் இத்தலத்து வழிபட்டுப் பேறு பெற்றோர்.

கக௩. சேடி - வித்தியாதர நகரம்.

கக௪. மாடக்கூட்டம் - மாடங்களின் தொகுதி. சாளரம் - பலகணி.

கக௬. கதலிவனம் : இத்தலத்தின் திருநாமங்களுள் ஒன்று.

கக௭. இத்தலத்தில் இடி பூசித்ததென்பர் (க௫0-௫க.) இடை மின்னலும், கூந்தல் முகிலும்.

கக௮. தம்மென்றது மலைகளை. கோ - தலைவன். (பி - ம்.) உலகலைக்கும்.

கக௯. கண்ணும் - கருதுகின்ற.

க௨0. சோளன் - சுரகுரு. வதை - கோவதை. ௬ந்தல் தனுவாய் மாணுவார் ; தனு - வில்.

க௨க. மலைக்கொழுந்து : இறைவன் திருநாமம். "மறைக்கொழுந்தை வெள்ளி மலைக்கொழுந்தை மௌலிப், பிறைக்கொழுந்தை வைத்த பிரானை" **(விக்கிரம சோழனுலா, 42.)** புலம் - அறிவு.

கஉஉ. நெகிழ்க்குந் திருநெற்றி நீற்றி னிலாவும்
முகிழ்க்கு முறுவன் முகமும் - நகைக்குழையின்

கஉ௩. தூக்குந் திருமுக்கட் சோதியு மூதண்டம்
காக்குந் திருநீல கண்டமும் - ஆக்கும்

கஉ௪. அவைய வரத வழன்மழுமான் கையும்
பவைய திருத்தோட் பணைப்பும் - தவழருவி

கஉ௫. முந்நூலு மார்பமு மூதராக் கச்சுடையும்
பொன்னூ புரமும் பொலன்கழலும் - பன்னூறு

கஉ௬. செவ்வி யிளஞாயி றுய திருவழகும்
வெளவி யுவந்துவந்து வந்திப்பார் - நௌவி

கஉ௭. விழியிற் களிகிளைப்ப வெண்முத்தங் கால்வார்
மொழியிற் றுதிகுழறி மொய்ப்பார் - செழுமேருக்

கஉ௮. குன்று பிடியு முழையுங் குழாமயிலும்
சென்று வளைந்தெனத் தேர்வளைவார் - அன்று

கஉ௯. புவனித் திருத்தேர் புகுந்தார் புகுந்த
பவனித் திருத்தேரைப் பாரீர் - உவணைப்

க௩௦. புரிய னருச்சித்த போதிவருக் கீந்த
பரிய சுரரத்னம் பாரீர் - கரியோனும்

---

கஉஉ. நீற்றின் நிலா: "நிலாவை, வழியவார்த் தாலன்ன மாநீற்றர்" (நள. கடவுள்.) (பி - ம்.) முறுவற் செம்முகமும்.

கஉ௪. பவைய - பிரபையையுடைய; பவை = பிரபை - ஒளி; "தாம மல்லிகை மாலைச் சயம்பவை" (சூளாமணி, இரதநூபுரச். 32.)

கஉ௫. அராக்கச்சு - பாம்பாகிய கச்சு; "கச்சைசே ரரவர் போலும்" (தே. திருநா.)

கஉ௬. நௌவி - நௌவி மான்.

கஉ௭-௮ முத்தம் - கண்ணீர்த்துளி; "பூப்போ லுண்கண் புலம்புமுத் துறைப்ப" (முல்லைப். 23.) மேருமலை தேருக்கு உவமை. குன்று - குன்றை. அன்று - திரிபுரமெரித்த காலத்தில். பிடி முதலியன மலையில் வாழ்வன.

கஉ௯. புவனித்திருத்தேர் - பூமியாகிய அழகிய தேர். பவனி - உலா. உவணை - தேவலோகம்.

க௩௦. கரியோன் - திருமால்.

கரு௧. பாணிக்க முன்னம் பணிந்தணிந்த பாற்கடலின்
மாணிக்க ராசி வடம்பாரீர் - பேணிப்

கரு௨. பிரமர்மேற் காலம் பிறந்தகத்து முத்தம்
பரமர்மேற் சாத்தியது பாரீர் - இரவகற்றும்

கருரு. வெங்கருவி வாளோர் மிலைந்த வுபயகிரிப்
பொங்கருவி வாள்வயிரப் பூண்பாரீர் - மங்கைமீர்

கரு௪. ஏன வெயிறு பிறையென் றிருவேட்கை
ஆன திருக்காப் பதுபாரீர் - மேனிமிர்ந்து

கரு௫. தாமத் திடப்பாகத் தாமந் தழையென்று
வாமத் துழைதிறக்கும் வாய்பாரீர் - காமுற்றுள்

கரு௬. ஓர்கண் ணடங்கினு ரொள்ளமுகிற் பல்கோடி
பேர்கண் ணடங்கார் பெரிதென்பார் - வார்சடையாற்

கரு௭. கன்றுமா லாயோ ரணிந்தவொரு கண்ணநந்தம்
இன்றுமா லாயோ ரிவர்க்கென்பார் - அன்றுமால்

---

கரு௧. பாணிக்க - அலங்கரிக்க; இச்சொல் சைவ சம்பிரதாயத்தில் வழங்குகின்றது. ராசி - கூட்டம்.

கரு௨. பிறந்தகத்து முத்தம் - தாம்பிறந்த இடமாகிய தாமரையில் தோன்றிய முத்து. இரவு அகற்றும் - இராத்திரியைப் போக்கும்.

கரு௩. வாளோர் - சூரியர் பன்னிருவர்; எழுவாய்; வாள் - ஒளி. உபயகிரி - உதயகிரி, அத்தமனகிரி. மிலைந்த வயிரப் பூணென இயைக்க.

(பி - ம்.) மிலைந்த வுதயகிரிப்.

கரு௪. ஏன வெயிறு - பன்றிக் கொம்பு. இரு வேட்கை - உண்ண வேண்டுமென்ற பெரிய ஆசை. காப்பு - பாம்பாலாகிய கங்கணம்.

கரு௫. தாமத்து - மாலையையுடைய. இடப்பாகத் தாமம் - இடப்பக்கத்துள்ள அம்பிகையின் பசுமைநிறத்தை; தாமம் - ஒளி. ஒளியைப் பச்சிலையென்று எண்ணி. வாமத்து - இடப்பாகத்திலுள்ள. உழை - மான். காமுற்றுள் - உமா தேவியாரது.

கரு௬. ஓர் கண் - ஒருவிழியில். பல்கோடி பேர் - பலகோடி மாதர்களுடைய.

கரு௭. மாலாயோர் - திருமால். ஒருகண் - ஒருவிழி. அநந்தம் - பல. மாலாயோர் இன்று இவர்க்கு அணிந்த கண்கள் பல; மாலாயோர் - காமமயக்கம் கொண்ட மகளிர்.

கங்அ. ஆனார் விழிக்கே யணிந்து மரியரிவர்
மானார் விழிக்கெளியர் வந்தென்பார் - மேனிகணைக்

கங்கூ. கில்லாத் திருக்கோல மென்பதோ விக்கோலம்
இல்லாத் திசைகாணேம் யாமென்பார் - இல்லாது

கசo. சொல்லா தருமறைநந் தொல்லறிவு மிக்கள்ளம்
வல்லார் பறித்தார் மறித்தென்பார் - நல்லாழி

கசக. வட்டத் தொருகள்ளம் வல்லாரை நாங்கூடிக்
கட்டத் தகாதோ கவர்ந்தென்பார் - அட்டின்னம்

கசஉ. தீய்த்தாலுந் தீய்ப்பார் திருவுலாக் காண்பேமை
மாய்த்தாலென் றஞ்சான் மதனென்பார் - போய்த்தாதைக்

கசங. கேறு பழியைப் பொறுத்தாரன் றீதறிந்தால்
வேறு வெருவுமோ வேளென்பார் - மாறி

கசச. ஒருபோது கங்குல்வந் தோங்கா திரவிக்
கிருபோதுந் தந்திலவே யென்பார் - திருமுன்போய்த்

கசரு. தோற்றும் பிறப்பாய துன்பநோ யன்பர்க்கு
மாற்றுஞ் சுருதி மலைமருந்தே - வேற்றுத்

---

கங்அ. வந்து : ஒரு சொல் நடை. "மண்வைத்த குக்கி வளைவைத்த செங்கைமால், கண்வைத்துங் காணக் கழலினான்" (**திருவிடை. உலா**, 17.)

கசo. கள்ளம் வல்லார் : இறைவன் திருநாமம் ; "வேதங்கள் விழி பனிப்ப மெய்புளக மரும்பக், கைப்பதும முகிழ்த்தெமது காற்பதுமத் திறைஞ் சிக் கள்ளம்வல்லாய் கள்ளம்வல்லா யெனக்கசிந்தோ விடுமால்", "வினைத் தொழிலிற் கள்வரெல்லாஞ் சிலர்க்கொளித்துஞ் சிலர்க்கு வெளிநின்றும் வழிபறித்து விரவுவரா தலினாற், கனைத்தமறை யறிந்தெம்மைக் கள்ளம் வல்லா யெனும்" (வேதகிரிச். 27-8) ; "கள்ளம் வல்லான் காதல்செய் கோயில் கழுக்குன்றே" (**தே. திருஞா.**) மறித்து - தடுத்து.

கசo-சக. ஆழி வட்டத்து - கடல் சூழ்ந்த பூமியில்.

கசஉ. மன்மதன் அஞ்சாமற் போர்செய்கின்றானென்பது கருத்து.

கசங. பழி - பிருகு முனிவருடைய மனைவியைக் கொன்றது முதலி யன. ஈது - திருமாலின் பழியைத் தீர்த்தது.

(**பி - ம்.**) துடைத்த வெளிதறிந்தால் ; மாறு.

கசச. இருபோதும் - இரவையும் பகலையும்.

கசரு. மலைமருந்து : கசஅ ; "வேற்று மருந்தால் விடாதவெம் பிற வியை, மாற்று மருந்தா மலைமேன் மருந்தா" (**அருணைக்கலம்**. 1.)

கசசு. திருவின்மூ தண்டர் சிகாமணி யாக
மருவுமா சில்லா மணியே - இருவினையும்

கசஎ. வீட்டிய வாதவூ ராளிக்கு மெய்விளங்கக்
காட்டிய கண்ணார்ந்த கற்பகமே - சூட்டிய

கசஅ. நும்மருக் கொன்றை யலது நுமதாசை
மம்மருக் கொன்றையு மாற்றறியேம் - உம்மைத்

கசகூ. திசைமுழுதும் பொன்னிட்டா ரென்கைக்கோ தீயேம்
மிசைமுழுதும் பொன்னிட்டு விட்டேர் - சசிதழுவும்

கருO. அக்காம னெய்திய வெஞ்சிறையை யஞ்சாத
இக்கா மனுமொருகா லெய்துமே - முக்காலும்

கருக. பூசித் திடிவலஞ்சூழ் போதுவதிப் போதாகிற்
கூசிக் குயிலொடுக்கங் கொள்ளுமே - ஈசரே

---

கசஎ. மெய் - திருமேனியை. திருவாதவூரடிகளுக்குத் திருப்பெருந்துறையிற் காட்டிய கோலத்தைச் சிவபெருமான் இங்கே காட்டியருளினர்; "கழுக்குன்றத் தரிபிரமர் காணானைக் கண்டானே" (பாயிரம், 9); "காணொணாததொர் கோல நீவந்து காட்டினாய்கழுக் குன்றிலே" (**திருவாசகம்.**) கண்ணார்ந்த கற்பகம்: இறைவன் திருநாமம்; "கழுக்குன்றத் தமர்ந்தான் றன்னைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேனே" (**தே. திருநா.**); "கண்ணார்ந்தகற் பகமல்லவோ கழுகாசலா கழுகாசலா" (**கழுகாசல சதகம், 18.**)

கசஅ. மரு கொன்றை அலது - வாசனையையுடைய கொன்றை மாலையையல்லாமல். மம்மருக்கு - மயக்கத்தைப் போக்குதற்கு. மாற்று - பரிகாரம்.

கசகூ. திசைமுழுதும் பொன்னிட்டார்: இத்தலத்தில் இறைவன் ஒரு காலத்தில் அன்பர்களுக்கு மிகுதியாகப் பொன்னை அளித்தருளினரென்றும் அதற்கு அறிகுறியாக ஸோமாஸ்கந்த மூர்த்தியின் இடத் திருக்கரத்தில் பொற்கட்டியொன்று உள்ளதென்றும் பெரியோர் கூறுவர். பொன் - பசலை. சசி - இந்திராணி.

கருO. அ காமன் - அந்த இந்திரன்; கா - கற்பகச்சோலை. இ காமன் - இந்த மன்மதன். எய்துமே: ஏகாரம், வினா. இந்திரன் சிறையிலிடப்பட்டதை, ௩-ஆம் கண்ணியின் குறிப்பாலுணர்க.

கருக. இடிமுழக்கத்திற்குக் குயில் அஞ்சும்; இடி இத்தலத்தில் வழிபட்டதென்பர்; ககஎ, குறிப்பைப் பார்க்க.

கருஉ. ஆயர்வாய் வேயி னகட்டிற் சிலகாலம்
மேயதோ தீயாக மேயினீர் - மாயனுநீர்

கருங. விண்ணோன் முகனுநீ ரென்றறிய வெவ்வினையேம்
கண்ணாழி யுட்கமலங் கைக்கொண்டீர் - விண்ணணங்காம்

கருச. கோவை வதைத்த கொலைபொறுத்தீ ரிவ்வுலகிற்
பாவையர் கன்றருமை பார்ப்பீரோ - மாவெய்யோர்

கருரு. மின்கை யருச்சித்து மெய்பழகி யோவொருவர்
முன்கை நறுஞ்சாந்த மூழ்கினீர் - வன்கண்

கருசு. தரிக்கு மதியைநீர் தாள்பொறுத்துத் தேய்த்தீர்
எரிக்கு ணடம்பயின்றோ வென்பார் - திருப்பனைத்

கருஎ. தாடகை யாடையைத் தாங்கியது பொய்யாக
ஆடக வாடை யவிழ்ந்துழல்வார் - ஊடடங்கும்

---

கருஉ. ஆயர்வாய் வேய் - இடையர் வாயில் வைத்தூதும் புல்லாங் குழல்; “ஆயர்வாய் வேயோ வழல்” (தண்டி. சூ. 15, மேற்.) திருநெல்வேலியிலும் திருப்பாசூரிலும் சிவபெருமான் மூங்கிலிற்றோன்றியவரென்பது பற்றி ‘வேயி னகட்டிற் சிலகால மேயதோ’ என்றார். தீ ஆகம் - நெருப்பாகிய திருமேனி.

கருங. கண்ணாழி - கண்ணாகிய கடல். உட்கமலம் - இதய கமலம். திருமாலுக்கு ஆழியும், பிரமதேவர்க்குக் கமலமும் உரியன; நிரனிறை. கண்ணாகிய கடலிலுள்ள நீரையென்பது மற்றொரு பொருள். விண்ணணங்கு - திலோத்தமை.

கருங-ச. கோவை - பசுவை. கன்று - வளையல், பசுவின் கன்று ; “முன்னோளே, அக்கன்று போக்குதிரு வாரூர்த் தெருவென்றோ, இக்கன்று போக்க வந்தேம் யாமென்பார்” (திருவாரூருலா, 167-8.) வெய்யோர் - சூரியர்.

கருரு. ஒருவர் - மூர்த்தி நாயனார். சந்தனம் தமக்கு வெப்பஞ் செய்தலால் இங்ஙனம் கூறினார்.

கருசு. சந்திரன் தம்மைச் சுடுகின்றதென்பது கருத்து. திருப்பனைசை - திருப்பனந்தாள்.

கருஎ. தாடகை - திருப்பனந்தாளில் எழுந்தருளிய ஸ்ரீ அருணசடேசுவரரை வழிபட்ட ஒரு பெண். அவள் ஒரு நாள் மாலை சாத்தும்போது ஆடை அவிழ அதனை இருகைகளாலும் இடுக்கிக்கொண்ட அவளுடைய நிலையைக் கண்ட இறைவன் தம் திருமேனி சாய்ந்து அவள் கையிலிருந்த மாலையை அணிந்தருளினரென்பது வரலாறு; “சிலைச்சிக்கு மதனெரிய விழிதிறந்த திருப்பனந்தாட் சிவனே யந்தோ, வலைச்சிக்கு விடைநினையே னும்மையுநான்

கருஅ. ஆல மிடற்றி னழகொழுகப் போர்த்தென்ன
நீல மலர்க்க ணிரைநிரைப்பார் - சாலவும்

கருகூ. தீதுறுவா ரிந்தத் திறநாணும் பூணும்போய்ப்
பேதுறுவா ராகப் பிறிதொருத்தி - மீதுறைய

(பேதை)

ககூ0. வீடா மதிவருவ தோர்ந்து வெருவியிருள்
கூடா தகன்றனைய கூந்தலும் - ஆடா

ககூக. ஒழுங்கு தலைப்பட்ட வுபயவாட் கண்ணும்
கொழுங்குதலை தாய்தேற்றுங் கூற்றும் - விழுந்தெழுகைச்

ககூஉ. செம்பானு மானு மெயிறுஞ் சிறுதாழைப்
பைம்பாளை யொத்த பணைமார்பும் - செம்போ

ககூங. துறுவ தொருகுரவா மொண்பாவைக் கையும்
பெறுவ தொருபருவப் பேதை - இறுகும்

---

யைப்படுத்த மாட்டே னந்தோ, குலைச்சிக்கோ ரன்னமின்னுங் காணாத சடை
மேமளவி குலைந்து போன, கலைச்சிக்கு வளைந்ததுவுங் கலையனுக்கு நிமிர்ந்ததுவுங்
கண்டுந் தானே" (பழையபாட்டு.)

கருஅ. கண்களுக்கு ஆலம் உவமை; ஆலம் - விடம். மலர்க்கண்களின்
நிரையைத் திருமேனியிலே நிரைப்பார்.

கருகூ. பேது - மயக்கம். பிறிது, வேறென்னும் பொருளில் வந்தது;
"முன்னர்ப் பிறிதொருத்தி மொய்பங் கிழந்தமையும்" (உஉ௯); "பேதிப்பா
ராகப் பிறிதொருத்தி" (திருவாரூருலா, 186.)

ககூ0. வீடா - இருப்பிடமாக எண்ணி. மதி யென்றது முகத்தை.
ஆடா - வெல்லாமல்.

ககூக. ஒழுங்கு - மருட்பார்வைமுதலியன இல்லாமை. உபயம் - இரண்டு.
கூற்று - வார்த்தை. விழுந்தெழுகை - விழுந்து எழுதலால்.

ககூஉ. பானு மானும் - அத்தமித்தப் பின் உதிக்கும் சூரியனை ஒக்கும்;
"துஞ்சி, விழுந்த கதிரே யெழல்போல் விழுந்த, தெழுந்ததென லொக்கு
மெயிற்றுள்" (வேங்கை யுலா, 150-151.) தாழைப்பாளை - தென்னம்பாளை;
அது முதிர்ந்தக்கால் இளநீரைத் தோற்றுவிப்பது.

ககூங. பாவைக் கை - பாவையைத் தாங்கிய கை. பாவையைத் தாங்கி
யிருத்தலால் குரவாகிய கை; குரவம்பூ, பாவைபோல்வது.

க௬௪. முலையிணை தாய்க்கு முகிலீரந் தீரா
மலையிணை செய்தருந்தும் வாயாள் - பலவண்டல்

க௬௫. ஊதைவருங் காலை மிதிலை புழுநிலத்துக்
கோதைவருங் கோலமாங் கோலத்தாள் - வீதிவாய்ப்

க௬௬. பாரா லிடுங்கிளியைப் பாறெடுக்கு மென்றெடுத்து
வாரா தொழிய மனத்தழிவாள் - ஆரூர்த்

க௬௭. திருவந்திக் காப்புந் திருத்தில்லை யெல்லை
மருவந்திப் பிற்பொழுதை வாழ்வும் - இருசேய்

க௬௮. பொருப்பு மடந்தையுடன் பொற்கழுக் குன்றத்
திருப்பு மெனவிருக்கு மெம்மான் - தெருப்போதப்

க௬௯. போந்து திருத்தாயர் பூவார்ந்த சேவடியைச்
சேர்ந்து தொழத்தொழுத செங்கையளாய்க் - காந்தித்

க௭௦. துவரார் சடைமௌலித் தொல்லோனை நோக்கி
இவரா ருரைமின்க ளென்றாள் - அவளொருத்தி

---

க௬௪. "மாமலை யணைந்த கொண்மூப் போலவும், தாய்முலை தழுவிய குழவி போலவும்" (**பட்.** 95-6); "தாய்முலை தழுவிய குழவி போலவும், மாமலை தழுவிய மஞ்சு போலவும்" (**சீவக.** 100) என்பவை இங்கே நினைத்தற் குரியன. வாய்வைத்தலின் நகில் ஈரமாதல்பற்றி இவ்வுவமை கூறினர். வண்டல் - மகளிர் விளையாட்டு.

க௬௫. ஊதை - காற்று. கோதை - சீதை. புழுதி படிந்த மேனியுள்ள பேதைக்குப் படைச்சாலில் எழுந்த சீதை உவமை.

(**பி - ம்.**) ஓதைவருங்காலை.

க௬௬. பாரால் - பூமியில்; உருபு மயக்கம். பாறு - பருந்து.

க௬௭. திருவாரூரில் திருவந்திக்காப்புக்காலத்திலும் திருத்தில்லையில் அர்த்தயாமத்திலும் மட்டும் தங்கி யிருப்பார்; இரண்டு குமாரர்களோடும் உமாதேவியாரோடும் இங்கே அனவரதமும் சிவபெருமான் எழுந்தருளி யிருப்பா ரென்பது புராணவரலாறு; "ஆத லாற்கம லாலயத் தந்தியங் காப்பும், கோதி லாமணி மன்றத்தி யாமமுங் குடியாப், போது மத்தனை யேயலா தில்லையெப் பொழுதும், வேத வெற்பிடை மலைமடந் தையொடும்வீற் றிருப்போம்", "சொக்கியெனுந் திருமலையான் மடந்தையொடும் புதல்வரொடுஞ் சுருதிக் குன் றிற், புக்கனன்" (உருத்திரகோடிச். 56, நந்திதவச். 62); "யாமத்தே, தில்லையா நருந் திருவந்திக் காப்புக்கே, தொல்லையா ரூருந் தொழநின்றோன்" (**திருவாரூ ருலா,** 203 - 4.)

க௭௦. துவர் ஆர் - பவளநிறம் பொருந்திய. ஒருத்தி - உமாதேவியார்.

௧எ௧. ஒட்டிய தன்பாற் குரிய தெனப்பெரிது
கட்டிய தீங்கருப்புக் கட்டிகாண் - எட்டிய

௧எ௨. கன்னலந் தூய கனதனுச் செற்றதுகாண்
இன்னலங் கோதை யிகந்ததுகாண் - மின்னனையாய்

௧எ௩. மாற்றின் மறுகு மதன்கடத்திற் காய்ந்ததுகாண்
சாற்றி லளவிறப்பச் சார்ந்ததுகாண் - தோற்றிய

௧எ௪. ஆலைக் களத்தி லமைத்ததுகா ணன்றியும்
வேலைப் படியிரத மேயதுகாண் - நாவிருகைப்

௧எ௫. பாகான் முதிர்ந்து பதத்ததிக மானதுகாண்
தோகாய் நிறைதூக்கந் தொக்கதுகாண் - நாகேசன்

௧எ௬. பைகளாற் சூழ்ந்ததுகாண் பாவாய் பணிகென்று
மெய்களாற் றுயர் விளம்புதலும் - தையலும்

௧எஎ. தேரில் வருகருப்புக் கட்டி சிறிதெளியேன்
வாரி நுகர வருங்கொலென - நேரிழையாய்

௧எ௮. பாடப் பரியப் பலகா லிருகாலும்
சூடத் தனிகருதச் சூழ்போதத் - தேடத்

---

௧எ௧ - ௬. சிவபெருமானுக்கும் கருப்புக்கட்டிக்கும் சிலேடை.

௧எ௧. தீங்கருப்புக் கட்டியென்றது இறைவனை; ௧எஎ, ௩௫௩. ஒட்டிய தன் பாற்கு - சேர்ந்த தன் பகுதிக்கு, காய்ச்சப்பட்டு வற்றிய தன் பாலுக்கு.

௧எ௨. தனு - வில், உடம்பு. கோதை - குற்றத்தை, சக்கையை.

௧எ௩. கடம் - உடம்பு, குடம். சாற்றில் - சொல்லுமிடத்தில், இரசத்தில்.

௧எ௪. ஆலைக்களத்தில் அமைத்தது - விடத்தைத் தன் கண்டத்தில் கொண்டது, ஆலையையுடைய இடத்தில் செய்யப்பட்டது; ஆல் = ஆலம் - விடம்; கடைக்குறை. வேலைப்படி இரதம் - கடல் சூழ்ந்த பூமியாகிய தேர், கடலை யொத்த சாறு; படி - பூமி, ஒப்பு. ஏழுகடல்களுள் கருப்பஞ்சாற்றுக் கடல் ஒன்று.

௧எ௫. பாகு - பாகன், வெல்லப்பாகு. பதம் - பதவி, பக்குவம். நிறை தூக்கம் - நிறைந்த ஆடுதல், நிறையும் தூக்கமும்; தூக்கம் - ஒரு நிறுத்தலளவை.

௧எ௬. பை - படம், கோணிப்பை. மெய்களால் - உண்மைச் சொற்களால்.

௧எஎ. என - என்று பேதை கேட்ப.

௧எ௮. பரிய - அன்புகூர. இருகாலும் சூட - இரண்டு திருவடிகளையும் சூட.

௧௭௯. தெரிசிப்ப வுண்ணின்று தித்திப்ப தல்லாற்
பரிசிப்ப மாந்தப் படுமோ - விரிநிலத்தோர்

௧௮௦. உண்டு வெறுப்பதுபோ லன்றுகா ணென்றுவகை
கொண்டு தமரமரக் கூறுதலும் - ஒண்டொடிக்கு

௧௮௧. நோக்குந் திருநகையு நூன்மார் பகலத்து
வீக்குங் கடுக்கையும் வீசாமே - மாக்குருகும்

௧௮௨. சிற்றுடை யுந்தனக்குத் தெள்ளமுதிற் கொள்ளாமே
நீற்றுடி யத்தெருவை நீத்தொழிந்தான் - வேறறியா

௧௮௩. வல்லியு மில்லத் தகல வரிகருப்பு
வில்லியு மவ்வெல்லை விட்டகன்றான் - கொல்லியம்

(பேதும்பை)

௧௮௪. பாவை பொருவும் பருவத் தொருபெதும்பை
பூவை வளர்கொம்பர் போல்வளர்வாள் - ஓவியத்திற்

௧௮௫. பார்வைக் கமையும் பரிசன்றிப் பாயல்வாய்ச்
சேர்வைக் கமையாத செவ்வியாள் - மார்வின்

௧௮௬. முகிழா முலைதனது பாவையு மோய்மார்
நெகிழா முலைதானு நீத்தாள் - அகவனசம்

௧௭௯. பரிசிப்ப மாந்த - தொடவும் உண்ணவும்.

௧௭௮-௯. "பார்த்தாலும் நினைத்தாலும் படித்தாலும் படிக்கப் பக்கநின்று கேட்டாலும் பரிந்துணர்ந் தாலும், ஈர்த்தாலும் பிடித்தாலுங் கட்டியணைத் தாலு மித்தனைக்குந் தித்திக்கு மினித்தசுவைக் கரும்பே" (**இராமலிங்க. பாடல்.**)

௧௮௦. அமர - முற்ற; "மண் ணுண்டிருந்தோர், அமர" (**அரங்கத். 31.**)

௧௮௧. கடுக்கை - கொன்றை மாலை. வீசாமே - கொடாமல். பேதையைப் பாராமலும் சிரியாமலும். குருகு - வளை.

௧௮௨. சிற்றுடை - சிற்றுடை.

௧௮௩-௪. கொல்லியம்பாவை - கொல்லிப் பாவையைப் போன்ற பெதும்பை; "வல்வில் லோரி கொல்லிக் குடவரைப், பாவையின்" (**குறுந். ௧00 : 5-6.**) ஓவியத்தின் - சித்திரப்பாவையைப்போல்.

௧௮௫. பார்வைக்கு - கண்ணாற் பார்த்து இன்புறுதற்கு. சேர்வைக்கு - சேர்தலுக்கு. மார்வு - மார்பு.

௧௮௬. மோய்மார் - தாய்மார். பாவைக்குத் தான் பால்கொடுத்தலையும், தான் தாய்மாரின் பாலுண்ணுதலையும் நீத்தனள்.

கஅஎ. போர்க்கு மதன்முளரி போதும் படியெட்டிப்
பார்க்கும தன்ன பணைமுலையாள் - ஆர்க்கும்

கஅஅ. தரியா வுலகளப்பத் தாரைகரத் தேற்ற
கரியா னனையகடைக் கண்ணாள் - சொரிதேன்

கஅகூ. வடித்தன்ன பாணினிய மாதவ ரோதி
முடித்தென்ன வோதி முடிப்பாள் - தடுத்தெம்மை

ககூ0. ஆளுடையா னாளா யரிபிரமர் சேவிக்கும்
தாளுடையான வேதகிரிச் சாரல்வாய - ஆளுடையான்

ககூக. சேத்தந்த சாபத் தமையுந் திலோத்தமையாம்
கோத்தந்த மீந்த குளிர்முத்தும் - பூத்த

ககூஉ. மதிய நிலவெறிக்கு மாயீகப் பன்றி
முதிய வயக்கோட்டு முத்தும் - கதிரொழுகத

ககூங. தன்னுயம் வாரிச் சமைத்தவொரு சிற்றிலின்கண்
மின்னு யவர்போற்ற வீற்றிருந்து - முன்னேன்

ககூச. அரும்பொற் கழலாடு மாடலைப் பாடி
இரும்பொற் கழலாடு மெல்லை - விரைந்தொருததி

---

கஅஎ. மதன்முளரி போாக்குப போதுமபடியை ; முளரி - தாமரைபபூ. " முட்டித துறவாம பறவைமபன் முடியிற படுதன் மெல்மைமறைந், தெட்டிப பாாபப தெனமார்பி னிடஙகொண டெழுநத விளமுலைகள் " (**பிரபு.** மாயை யுற்பத்தி. 56.)

கஅஅ. தாரை - மாவலி வார்த்த தாரைநீா. கரியான் - வாமன வடிவங் கொண்ட திருமால்.

கஅகூ. ஓதி முடித்தல் - படிதது முடிததல், கூந்தலை முடித்தல் ; அ - ஆம் கண்ணியின் குறிபபைப பாாக்க.

ககூக. சே - திருநந்தி தேவா. கோ - பசு. தந்தம் - பல். திலோத்தமை யாம கோ : கஉ - ௩. பசுவின்பல் முததுப பிறக்கும் இடங்களுள் ஒன்று.

ககூஉ. மாயீகப் பன்றி : கக-ச. பன்றிக்கொம்பு முத்துப் பிறக்கும் இடங்களுள் ஒன்று.

ககூங. சமைத்த - அமைத்த. வீற்றிருந்து - கவலையின்றி யிரு

ககூச. கழல் - இருவடி. பொற்கழல் - பொன்னாற் செய்த கழற்சிக்காய். " செறியரிச் சிலம்பிற் குறுந்தொடி மகளிர், பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடும் " (புறநா. ௩௬ : 3-4.)

௧௯௫. ஊதியது சங்க மொலித்தது பொற்சின்னம்
மோதின பேரி முழாவாரி - நீதிச்

௧௯௬. சுரகுருத் தண்டகத் தொண்டர்கள் வாயாற்
பரகுருத் தேர்முன் பரந்த - துருக

௧௯௭. மறையோதை கேட்டது வந்ததுநம் வீதிக்
கிறையோன் றிருப்பவனி யென்றாள் - நறையோதி

௧௯௮. தானுந் தமரு மெழுந்து தனதுபுள்ளும்
மானுங் கலையும் வரன்மாற்றிக் - கானடையே

௧௯௯. நீடாது போதலுமப் பிள்ளைக ணின்றிரங்கக்
கோடாது நோக்கிக் குழாமெல்லாம் - ஆடலான்

௨௦௦. சென்னிப் பகீரதிக் கன்னஞ் சிறுபிறைக்குக்
கன்னிச் சகோரங் களிக்குங்காண் - மின்னும்

௨௦௧. வலக்க ணிடக்கண் மகிழ்ச்சியை வாகம்
புலக்க ணரிணம் புகுங்காண் - கொலைக்கணிச்சி

௨௦௨. மல்லற் புகையைத் தமது வகையென்று
புல்லக் கபோதங்கள் போதுங்காண் - பல்கிளியும்

---

௧௯௫. (பி - ம்.) மோதியது.

௧௯௬. சுரகுருத் தண்டகம் - சுரகுருவால் ஆளப்பட்ட தொண்டை நாடு. பரகு உரு - சொல்லுகின்ற இசைப்பாட்டுக்கள்; பரகு: திசைச்சொல் (தெலுங்கு.) உரு - இசைப் பாட்டு; உருப்படியென இக்காலத்து வழங்கும்.

௧௯௮. கால் நடையாக.

௧௯௯. அப்பிள்ளைகள் - மேற்கூறிய மான்கன்றும் பறவைக் குஞ்சுகளும்; "கொள்ளைகொள் காமன் கொடும்பகைக்குக் கூசித்தன், பிள்ளைகளோடிருந்து பேசுவாள்" (**குலோத். உலா, 206.**) குழாம் எல்லாம் - ஆயத்தா ரெல்லாரும்; இது, "கொண்டு வருதி வருதியென" (௨௪௦) என்பதனோடு முடியும்.

௨௦௦. அன்னம் கங்கையில் வாழ்வது; "மேவிப்பூங் கங்கையுள் விளைந்த வன்னமே" (**சீவக. 1017.**) சகோரம் நிலவையுண்ணும் பறவை.

௨௦௧. வலக்கண் - சூரியன். இடக்கண் - சந்திரன். வாகம் - சக்கரவாகமென்னும் பறவை; இது சூரியகிரணத்தை உண்பது. புலக்கண் அரிணம் - முல்லை நிலத்தின்கண் உள்ள மான். மான் சந்திரனைக் கண்டால் மகிழும். கணிச்சி - மழுவினுடைய.

௨௦௨. கபோதங்கள் - மாடப்புறாக்கள்; இவை புகையைத் தமது இனமென்று கருதும்; "ஒள்ளகிற் புகைதிரண்ட தொக்குமா மணிப்புறா" (**சீவக.**

உ௦௩. தாமத் திதழித் தமனிய வண்ணத்தை
ஏமத் தினையென்ன வேழுறுங்காண் - வாமத்து

உ௦௪. மானைக் கலைசென்று காண மழைமிடறென்
றேனைக் கலிங்கமயி லெய்துங்காண் - வானத்தோர்

உ௦௫. அங்கப் பணிய ரருளே பொருளென்கை
கங்கப் பிறவிக்கே காணியோ - நங்கோன்

உ௦௬. உறவை யுறப்பெற் றுருகுவது கூடற்
பறவை யிரண்டற்கே பங்கோ - மறைநாலும்

உ௦௭. நன்ன ரடிமுடியை நாடுவது கேழற்கும்
அன்ன மதற்குமே யாட்சியோ - முன்னர்

உ௦௮. நெடிய கயிலைமலை நீள்சிலந்தி பாம்பு
கொடிய களிறிவைக்கே கூறோ - மடவாய்

உ௦௯. நினையடைந்த மன்னுயிரு நின்பொருட்டா லின்பந்
தனையடைந்து வாழ்கை தவறோ - இனியவற்றைக்

---

70) ; "செங்கெ ருப்பினைத் தகடு செய்துபார் செய்த தொக்குமச் செந்
தைப்பரப், பங்கெ ருப்பினிற் புகைதி ரண்டதொப் பல்ல தொப்புறு
வதனி டைப்புறு" (கலிங்கத். 69.)

உ௦௩. ஏழுறும் = ஏமம் உறும் - இன்ப மடையும். தினைக்கதிர் பொன்
னிற முடையது ; அதனைக் கிளி விரும்பும். வாமம் - இடப்பாகம்.

உ௦௪. மிடற்றை மழை பெய்யும் மேகமென்று எண்ணி. கலிங்கமும் மயி
லும் ; கலிங்கம் - வானம்பாடி.

உ௦௫. அங்கப்பணியர் - என்பாகிய ஆபரணத்தை உடையவர். கங்கப்
பிறவி - கழுகின் பிறப்பு. காணியோ - உரிமையோ.

உ௦௬. கூடல் - மதுரை. பறவை இரண்டு - கரிக்குருவியும், நாரையும் ;
இவ்விரண்டும் மதுரையிற் பேறு பெற்றவை.

உ௦௭. கேழல் - பன்றி.

உ௦௮. கயிலைமலை-தென்கைலாயமான திருக்காளத்திமலை. திருக்காளத்தி
மலை சிலந்தியும் பாம்பும் யானையுமாகிய இவற்றிற்கே உரிய பங்கோ. இம் மூன்
றும் திருக்காளத்தியில் இறைவனை வழிபட்டு முத்திபெற்றவைகள். இத்தலமும்
கயிலை யெனப்படுதலால் இங்ஙனம் கூறினர்.

௨௧௰. கொண்டு வருதி வருதியெனக் கொண்டுபோய்க்
கண்டு திருத்தேர்முன் கைம்முகிழ்த்தாள் - திண்டோளை

௨௧௧. மொய்த்து விரிந்ததிரு நீற்று முதுநிலவில்
வைத்து மடக்கு மடநோக்கம் - தத்தித்

௨௧௨. திரைகுதிக்கும் பாற்கட லோடித் திரும்பிக்
கரைகுதிக்குஞ் செஞ்சேல் கடுத்தாள் - விரிகயத்து

௨௧௩. வேமா டகப்பாவை தோய்ந்தென்ன மெய்தோய்ந்த
காமா னலமுங் கடிதோய்ந்தாள் - மாமாரன்

௨௧௪. பூவர் சரம்பூட்டி மீட்டான் புராந்தகனும்
தேவ ருடனத் தெருவகன்றான் - பாவையைச்

௨௧௫. சீறு வெயிலனிச்ச நீழல்வாய்ச் சேர்த்தென்னக்
கூறு மகளிர் கொடுநடந்தார் - வேறொருத்தி

(மங்கை)

௨௧௬. மங்கை வடவனத்து வாதாளன் மாதாளக்
கொங்கை மறைத்தணிய கூறையாள் - வெங்கட்

௨௧௭. கொலைகற் றணிய கொழுங்கயற் கண்ணாள்
கலைகற் றணிய கருத்தாள் - மலராளகம்

௨௧௰. கொண்டுபோய் - மான்முதலியவற்றையும் உடன்கொண்டுபோய்.

௨௧௨. (பி - ம்.) எரியகத்து.

௨௧௧-௨. திருநீற்றின் ஒளிக்குப் பாற்கடல் உவமை. நோக்கம் சேல் கடுத்தாள்; நோக்கம் - கண்.

௨௧௨-௩. விரிகயத்துத் தோய்ந்தென்ன. காம அனலம் - காமமாகிய நெருப்பு. கடிது - விரைவில்.

௨௧௪. பூவர் - பூ; அர்: பகுதிப்பொருள் விகுதி; "பூவர் சோலையக் கயிலையிற் புகுந்தவப் பொழுதே", "பூவர்சே வடிச்சுவட்டிற் பூப்பொழிந் திறைஞ்சி" (கைலாயச். 5, தலவிசிட்டச். 18); "பூவர் சோலை புகுவலென் றெண்ணினான்" (சீவக. 1328.)

௨௧௫. வெயில் அனிச்சம் - வெயிலிலுள்ள அனிச்சப்பூவை.

௨௧௬. வடவனம் - திருவாலங்காடு. அந்தத் தலத்திற் சிவபெருமான் காளியோடு வாதஞ் செய்து ஊர்த்துவ தாண்டவமாடினமையின் வாதாளன் என்றார். அணிய - அண்ணிய; பின்வருவனவற்றிற்கும் இங்ஙனமே பொருள் கொள்க; "பிறந்தணிய கிள்ளை பெருத்தாயர் கொங்கை, மறந்தணிய செவ்வி மடமான்" (**இராசராச.** 116.) கூறை - மேலாடை.

௨௧௭. கலை - பொதுமகளிர்க்குரிய நூல்கள்; **மணிமேகலை, ௨:** 18 - 32-ஆம் அடிகளாலும், "யாழ்முத லாக வறுபத் தொருநான், கேரிள மக

௨௧௮. பின்சாய்த் தணிய பிடராள் மடநாண்
முன்சாய்த் தணிய முகத்திறள் - மின்சூழ்

௨௧௯. நிலப்பதும ராக நிறையறையைப் பண்டைப்
பொலப்பதும ராகமெனப் போந்து - மலைச்சொக்க

௨௨௦. நாயகி நாயக னம்வீதிக் காயிர
வாயகி யாரன் வருந்துணையும் - தாயர்முன்

௨௨௧. பாங்கியை யாடுதும் பந்தென்று கைப்பந்து
வாங்கி யெறிந்தாடும் வாதாட்டிற் - பாங்கி

௨௨௨. எறிந்தவையி லொன்றொளித் தேந்திழையெல் லோரும்
செறிந்தவையிற் புன்முறுவல் செய்தாள் - அறிந்தவளும்

௨௨௩. பந்து கரந்தது பார்த்திபர்க் கோலிடுதும்
இந்து நுதலி யெனநகைத்தாள் - செந்திருவும்

௨௨௪. முன்னர்ப் பிறிதொருத்தி மொய்பந் திழந்தமையும்
மின்னற் குலிசன் வெகுண்டமையும் - அன்னவன்

௨௨௫. பட்ட குறையும் படுசிறையு நந்தலத்தின்
இட்ட கதையோதிற் றில்லையோ - பட்ட

---

ளிர்க் கியற்கையென் றெண்ணலிக், கலையுற வகுத்த காமக் கேள்வி" (**பெருங்.** க. 35 : 84-6) என்னும் பகுதியாலும் இவை விளங்கும்.

௨௧௯. பொலப் பதுமராகம் - பொன்னாலாகிய சிவந்த தாமரைப்பூ. என - என்று சொல்லும்படி. மங்கையைத் திருமகளாகக் கூறியபடி; "செந்திரு" (௨௨௩) என்பர் பின்.

௨௧௯-௨௦. மலைச் சொக்கநாயகி : அம்பிகையின் திருநாமம். ஆயிரவாய் அகி ஆரன் - ஆயிரம் வாயையுடைய பாம்பாகிய ஆதிசேடனை மார்பில் மாலையாக உடையவர்.

௨௨௨. எறிந்தவையில் - எறிந்த பந்துகளுள். ஒன்றை ஒளித்து. ஏந்திழை - மங்கை; எழுவாய். செறிந்தவையில் = செறிந்த அவையில்; தொகுத்தல் விகாரம். அவள் - பாங்கி. செந்திரு - மங்கை.

௨௨௪. பிறிது வேறென்னும் பொருளில் வந்தது. ஒருத்தி - ஒரு தெய்வப் பெண். குலிசன் வெகுண்டமை - இந்திரன் சிவபெருமானைக் கோபித்தமை.

௨௨௫. தலத்தின் இட்ட கதை - தலவரலாறு; ௩-ஆம் கண்ணியின் குறிப்பைப் பார்க்க.

௨௨௬. குறையவர்க் கன்றிக் குவலயங் காக்கும்
இறையவற்கும் வேண்டிற்றே யென்றாள் - முறையே

௨௨௭. இருவரு மித்திற மின்பவினை யாட்டிற்
பொருவரு மாறே புகலத் - திருவரும்

௨௨௮. பௌவத் தெழுந்த பகலை யிரவாக்கும்
தெய்வப் பெரிய திகிரிக்கும் - பௌவம்

௨௨௯. அடைத்துளா னுபிபிறந் தாவிபல கோடி
படைத்துளான் பாசப் படைக்கும் - புடைக்கிரியை

௨௩௦. வீட்டி வலனை விழுத்தி விருத்திரனை
ஓட்டிய வச்ரா யுதத்திற்கும் - பாட்டனைத்தும்

௨௩௧. ஓது நெறியே யுயிர்செலுத்திச் செல்லாரை
மோதும் யமதண்ட மூரிக்கும் - ஓதஞ்சூழ்

௨௩௨. வேலா வலயத்தும் வேற்றண்ட சாலத்தும்
தோலா வலிகொடுக்குஞ் சூலத்தான் - ஆலாலம்

௨௩௩. உண்டான் கழுக்குன் றுடையா னெமையடிமை
கொண்டான் மறுகு குறுகுதலும் - தண்டாது

௨௩௪. பண்டு பணிந்த பருவத் துருவத்துக்
கொண்டு பெயர்ந்த குறுந்தொடியும் - வெண்டுகிலும்

---

௨௨௬. அவர்க்கு அன்றி-சிவபெருமானுக்குக் கூறுதலன்றி. இறையவற்கு-அரசனுக்கு. வேண்டிற்றே: வேண்டாவென்றபடி.

௨௨௭. பொரு அருமாறு - ஒப்பில்லாத வண்ணம்.

௨௨௮. திருமால் சக்கரத்தாற் சூரியனை மறைத்தது பாரத கதை. திகிரிக்கும் - திருமாலின் சக்கரத்திற்கும். பௌவம் - கடலை. (பி - ம்.) பௌவத்துலகிற.

௨௨௯. அடைத்துளான் - திருமாலினுடைய. பாசம் - பிரம பாசம்.

௨௨௯-௩௦. கிரியின் பக்கத்தை வெட்டி வீழ்த்தி; வீட்டி - வீழ்த்தி. வலன்: ஓரசுரன். விருத்திரன் - விருத்திராசுரன்; இவர்களை இந்திரன் கொன்றதை, முறையே **திருவிளை.** மாணிக்கம் விற்ற படலத்தாலும், இந்திரன் பழிதீர்த்த படலத்தாலும் அறிக. பாட்டு - வேதம்.

௨௩௧. மூரி யமதண்டம் - வன்மையையுடைய யமதண்டம்.

௨௩௨. வேலா வலயம் - பூமி. வேறு அண்டசாலத்தும் - வேறு அண்டங்களின் தொகுதியிலும்; சாலம் - தொகுதி.

௨௩௪. பருவம் - பெதும்பைப் பருவம்.

௨௩௫. இன்னங் கொடுபெயர்து மென்றகருத் தன்றியே
பின்னம் பறிபோம் பிழையறியாள் - முன்னம்

௨௩௬. பணிப்பகழி மீட்டமை பார்த்தா ளநங்கன்
இனிப்பகழி மீளாமை யெண்ணாள் - கனிக்கிளவித்

௨௩௭. தோழியருந் தானும்போய்த் தொண்டர்க ளையகனை
வாழியரென் றேத்தி வணங்கினாள் - வீழுங்காற்

௨௩௮. பூரித் தகலும் பொலன்கச்சு மெய்ம்மெலியப்
பாரித் தகலும் பலகலையும் - நேராய்

௨௩௯. நெரிந்த சிலகுருகு நீணிலமான் கொள்ளச்
சரிந்த சிலகுருகுந் தந்தாள் - பெருந்தகையும்

௨௪௦. தேரை மறுமறுகிற் செல்விப்பச் செல்வியும்
ஓரை யுடன்மாடத் துட்புகுந்தாள் - பார்வை

௨௪௧. நனவு பிரியாமை நாதாந்தச் சோதி
கனவு பிரியாமை கண்டாள் - அனநடையார்

௨௪௨. கண்ணைத் தனையுங் கடலென்ப தெம்பெருமான்
வண்ணப் பவள வனம்புக்கோ - விண்ணவரிற்

௨௪௩. பேரா யிரமுடைய பெம்மான் முடிக்கங்கை
ஓரா யிரமுகத்தோ டோடியோ - ஈரப்

---

௨௩௫. பின்னம் - பின்பு ; அம் ; பகுதிப் பொருள் விகுதி. பறிபோம் - நீங்கும் ; "பார்ப்பான் கதையும் பறிபோச்சோ" (**தனிப்.**) முன்னமென்றது இவளது பெதும்பைப் பருவத்தை.

௨௩௬. அநங்கன் - மன்மதன்.

௨௩௮. (**பி - ம்.**) மெய்ம்மெலிவும்.

௨௩௮-௯. மகிழ்ச்சியாற்பூரித்து விரகத்தால் இளைத்தாளென்பது கருத்து. பாரித்து - பெரிதாகி. மகிழ்ச்சியால் வளை நெரிந்தது ; விரகத்தால் அது சரிந்தது. குருகு - வளையல்.

௨௪௦. ஓரை - மகளிர் விளையாட்டு ; இங்கே மகளிருக்கு ஆயிற்று ; ஆகு பெயர்.

௨௪௧. பிரியாமை - பிரியாமல்.

௨௪௨. பவளவனம் - பவளக்காடு ; என்றது சடையை.

௨௪௩. கங்கை ஆயிரமுகமுடைய தென்பர் ; "கங்கை, துறைகொளாயிர முகமுஞ் சுழல" (**கல்.** ௧௮ : 8-9); **தக்க.** 417-ஆம் கண்ணியின் உரையைப் பார்க்க.

உ௪௪. பிறையு முழிதந்தோ போராமை மீனம்
நிறையு முறுப்பா னிவந்தோ - செறிவிற்

உ௪௫. குழையா மகரங் குடிகொண்டோ நாகத்
துழையாம் விடைத்திருமா லுற்றோ - அழகிய

உ௪௬. கண்ட விடநீலங் கைகலந்தோ வென்றென்று
விண்ட கலுழி விழிபொழிந்தாள் - ஒண்டொடி

(மடந்தை)

உ௪௭. மற்றொருத்தி தெய்வ மடந்தை மலர்க்கோயில்
முற்றொருத்தி பின்செல்ல முன்செல்வாள் - சுற்றும்

உ௪௮. பரிந்த புதுமின் படாமுகிலு மெங்கும்
விரிந்த முகிற்படா மின்னும் - பெருந்தடக்

உ௪௯. கைம்மருங் கெய்தாக் கரிக்கோடு மக்கோடு
மொய்ம்மருங் கெய்தா முரட்கையும் - விம்மும்

உ௫0. இசைபிறவா யாழு மிருமகர யாழின்
மிசைபிறவாப் பேரிசை வீக்கும் - திசைதுளங்க

உ௫௧. நஞ்சுமி ழாதவொரு நாகமு நாகத்தின்
நெஞ்சுமி ழாத நெடுநஞ்சும் - கஞ்சன்

---

உ௪௪. ஆமையின் ஓடும் மீனத்தின்கண்ணும் சிவபெருமான் அணிந்தவை. செறி வில் - செறிந்த ஒளியையுடைய.

உ௪௫. விடைத்திருமால் - விடையாகிய திருமால். திருமால் கடலில் உறங்குபவர்.

உ௪௬. கலுழி - கலங்கிய கண்ணீர்.

உ௪உ-௪௬. மகளிர்கண்களைக் கடலாகக் கூறுதல் பொருந்து மென்பாளாய்ச் சிவபெருமானுடைய உறுப்புக்களில் அணிந்த பொருள்களை அக்கடலிலுள்ள பொருள்களாக உருவகஞ் செய்து கூறினாள்.

உ௪௭. மலர்க்கோயில் முற்று ஒருத்தி - திருமகள்.

உ௪௮. மின் படா முகில் - மின்னல் உண்டாகாத மேகம்; என்றது கூந்தலை. முகிற்படா மின் - இடை.

உ௪௯. கை - துதிக்கை. கரிக்கோடு - கொங்கை. முரட்கை - துடை.

உ௫0. யாழ் - முன்கை. இசையின் வீக்கு - இசையின் மிகுதி; என்றது வார்த்தையை; வீக்கு - மிகுதி; இது வீக்கமெனவும் வழங்கும் "என்னினி, வேறியாம் புகல்வது நிலவின் வீக்கமே" (கம்ப. உண்டாட்டுப். 3.)

உ௫௧. நாகம் - அல்குல். நஞ்சு - கண்ணின் விழி. கஞ்சன் - பிரமதேவன்.

உருஉ. நயக்க வ்வயவமாச் செய்திந்த ஞாலம்
வியக்க வகுத்ததிரு மெய்யாள் - புயற்காவில்

உருங. அம்மணி கண்ட னழகொத் தொழுகுமொரு
செம்மணி யூசலைச் சேர்ந்ததற்பின் - அம்மனையும்

உருச. பந்து முறுப்பே பரிசிக்கும் பேறளித்தாய்
முந்து மிதற்கே முழுதளித்தாய் - முந்தைநாட்

உருரு. பூவைநின் னூசல் புரிந்ததவம் யாதென்று
பாவைய ரெம்மருங்கும் பாராட்ட - ஆவலாய்த்

உருசு. தொல்லை மலர்க்கமலத் தோகையைத் தோகையென்
றெல்லை யெடுத்தாங் கினிதேத்தித் - தொல்லைமறைக்

உருஎ. கோடுங் குகநதியுங் கொன்றையுந் துண்டீர
நாடுஞ் சிவபுரமு நாற்பரியும் - கோடிரண்

உருஅ. டாயிர வேழமு மாடற் பெருமுரசும்
மாயிரு ஞால வயிற்றேறும் - தூயண்ட

---

உசஅ-ருஉ. மடந்தையின் கூந்தல் முதலிய அவயவங்களை விலக்குருவக மென்னும் அணியமைய இங்ஙனம் கூறினர்.

உருங. அழகு - செந்நிறம்; செம்மணி ஊசல் - மாணிகக ஊசல்.

உருச. இதற்கென்றது ஊசலை.

உருசு. கமலத்தோகை - திருமகள்; இங்கே மடந்தை. தோகை - மயில்போன்றவள்; சோலையில் இருத்தலால் மயிலாகக் கூறினர்.

**உருசு-சு. இக்கண்ணிகளில் தசாங்கம் கூறப்படும்.**

உருசு - எ. மறைக்கோடு - வேதகிரி. குகநதி - ஸ்கந்த நதி; இது பாகு லேய நதியென்று வடநூலில் வழங்கும். "ஓவிலாக் குகந திக்கே யுத்தரத் தரையா மென்ப" (வேதகிரிச். 7); இதனை இக்காலத்தார் பாலாறென்பர். துண்டீர நாடு - தொண்டை நாடு; ருச - ஆம் கண்ணியின் உரையைப் பார்க்க. சிவபுரம் - திருக்கழுக்குன்ற நகரம். நாற்பரி - நான்கு வேதங்களாகிய குதிரை கள்.

உருஎ-அ. கோடு இரண்டாயிர வேழம் - ஐராவணமென்னும் யானை; கோடு - கொம்பு. ஆடற்பெரு முரசு - வெற்றி முரசு. பூமியை வயிற்றிலே யுடைய திருமாலாகிய ஏறு; இடபக்கொடி.

உருகூ. கோடிநெடி தாண்டு குலாயதிரு வாணையும்
பாடியினி தாடும் பருவத்தே - கோடியர்

உசாo. சென்னியர் சூதர் சிலதர் சிலதியர்
கன்னியை வாழியெனக் கைகூப்பி - அன்னமே

உசாக. மண்ணிற் பிறந்த மலர்த்திருவே யத்திருவின்
கண்ணிற் பிறந்த கவுத்துவமே - பெண்ணமுதே

உசாஉ. மாமடந்தை நின்மேனி வாடிற் புறங்கொடுத்த
பூமடந்தை மெய்யிணையாப் போகாதோ - மாமுலையும்

உசாங. பொற்றாழ் வடமு மசையப் பொறுமலோசிங்
கிற்றான் மருங்கு லிரண்டுண்டோ - சுற்றிய

உசாச. மாலை யவிழக் குழலவிழின் மாரிபோய்
வேலை யகில மெலியாதோ - கோல்வளையாய்

உசாரு. தானை முலைக்கச் சவிழத் தனித்தனியெட்
டானையு மானித் தகலாவோ - மாநிலம்

உசாசா. ஏற்ற வரவு னிடையிற் கலாபாரம்
ஆற்ற முழங்கி னனுங்காதோ - போற்றும்

---

உருகூ. கோடியர் - கூத்தர்.

உசாo. சென்னியர் - பாணர். சூதர் - நின்றேத்துவார். சிலதர் - ஏவல் செய்யும் ஆடவர். சிலதியர் - ஏவல் செய்யும் மகளிர்.

உசாக. கண்ணின் - கண்ணைப்போல.

உசாஉ. மடந்தை: அண்மை விளி. புறங்கொடுத்த - அழகுக்குத் தோற்ற. பூமடந்தை - திருமகளது.

உசாங. மருங்குல் இற்றால் - இடை ஒடிந்தால்; "சேமவிடை யின் றென்று தேராத" (**வெங்கை யுலா**, 279.)

உசாச. அவிழ்ந்த கூந்தலைக் காணின் அஞ்சி மேகம் தோன்றாதாதலால் 'மாரிபோய்' என்றார்; போய் - போக.

**(பி - ம்.)** குழலவிழ்ந்து மாரிபோல்.

உசாரு. தானையும் கச்சும் அவிழ; தானை - மேலாடை. மானிக்க - மானங்கொண்டு; நாணி.

உசாசா. அரவு - ஆதிசேடன். அனுங்காதோ - வருந்தாதோ. பாம்பு கலாபாரத்தின் ஒலியைக் கேட்பின் இடியென்று நினைந்து துன்பமடையு மென்றபடி.

உ௬எ. திலக மணியாயிச் செய்கைநீ செய்தால்
உலக முறுக ணுரு தோ - பலமொழிந்தென்

உ௬அ. அம்மே யமையு மமையுமெனுங் காலத்துச்
செம்மேரு வீரச் சிலைவல்லான் - நம்மைவந்

உ௬௯. தாண்ட திருமலை யாளுடையா னற்பரியும்
பூண்ட திருத்தேரிற் போதுதலும் - ஈண்டிவளும்

உஎ0. ஊசலை விட்டிழிந் தோடித் தொழுதுமதன்
பூசலை விட்டுப் புறஞ்செல்லாள் - ஆசை

உஎக. உழந்தா டொடியுந் துகிலு முடனே
இழந்தாள் கடந்ததுதே ரிப்பால் - விழைந்திடக்

உஎஉ. கண்ணு முடியுமெனக் கைக்கொண்ட திங்களைநாம்
பண்ணுந் தழலென்கை பாங்காமோ - கண்வலத்தைச்

உஎ௩. சற்றே விழிப்பினுந் தங்காத கங்குலை
உற்றே யுகமென்ப துட்கொளுமோ - நெற்றிக்கண்

உஎ௪. காதித்தான் வெந்துதிருங் காம னியமனென
வாதித்தா னென்னின் மதிக்குமோ - மோதிய

உஎ௫. தெண்ணீர் கரந்த சிரத்தார் திருவுளநம்
கண்ணீர் பெரிதாக் கருதுமோ - பண்ணீர்மை

உஎ௬. யாழிசை யுண்ணின் றதிருஞ் திருச்செவிக்கீழ்
ஏழிசை தீதென் றுரே லேற்குமோ - சூழடவி

---

உ௬எ. உறுகண் - துன்பத்தை.

உ௬௯. திருமலையாளுடையான் : இறைவன் திருநாமம். நாற்பரி பூண்ட தேர்: “ கோட்டிற் செய்த கொடுஞ்சி நெடுந்தேர்........பால்புரை புரவி நால்குடன் பூட்டி ” (பொருந. 163-5.)

உஎக-உ. இடக்கண்ணும் முடியும். சிவபெருமானுக்குச் சந்திரன் கிரீடமாக உள்ளதென்பது சந்திரமௌலீசரென்னும் திருநாமத்தாலும் அறியப் படும். கண்வலத்தை - வலக்கண்ணை சூரியனை.

உஎ௩. விழிப்பினும் - விழித்தாலும். கங்குல் - இராப்பொழுது.

உஎ௪. காதி = காத - எரிப்ப. (பி - ம்.) மதியாமோ.

உஎ௫. (பி - ம்.) பெரிதென்கை கைக்கொளுமோ.

உஎ௬. இரண்டு நாகர்கள் தோட்டின் வடிவங் கொண்டு திருச்செவிகளில் தங்கியிருந்து இசைபாடுகின்றனரென்பது புராண வரலாறு; ௩௬௩-௪.

௨௭௭. மீது திரிதந்த வானுயர் வேய்பொறுத்த
காது கழைபிழையாக் காணுமோ - வீதிதொறும்

௨௭௮. அவ்வான் மணிகறங்கச் செல்வா ரகமுருமக்
கிவ்வான் மணிசுடுமென் றெண்ணுமோ - வெவ்வா

௨௭௯. பரண மருந்தப் படுவிக்குந் தென்றல்
மரண மெமக்கென்றால் வாய்ப்போ - முரணுது

௨௮௦. வீறு குயின்மா வடிக்காஞ்சி மேயாற்கு
மாறு குயிலென்றான் மாறன்றோ - ஊறிய

௨௮௧. பாற்கடல் சேயாற் பருகுவித்தார் நெஞ்சமும்
கார்க்கடல் வேகங் கணிக்குமோ - மேற்கடிஞை

௨௮௨. ஐய மெடுத்தூ ணயின்றார்க் கமுதூணை
வெய்ய விடமென்னின் மெய்யாமோ - தையன்மீர்

௨௮௩. பிள்ளைப் பழிக்கஞ்சா வஞ்சகர்க்குப் பெண்பிறந்தேம்
கொள்ளைப் பழிக்குமனங் கூசுமோ - வள்ளலுக்

௨௮௪. கெவ்வாறு தூதுவிடுத் தெவ்வா றிதுதெளிவித்
தெவ்வா றிருந்துய்வ தென்றயர்ந்தாள் - அவ்வீதி

---

௨௭௭. வேய், கழை - வேய்ங்குழலின் இசை ; ஆகுபெயர்.

௨௭௮. ஆன்மணி - இடபத்தின் கழுத்திற் கட்டிய மணி. செல்வார் - பிச்சைக்குச் செல்வார் ; "நீறேறுந் திருமேனி நெடும்பகலே நிலவெறிப்ப, ஏறேறிக் கடைதோறு மிடுபலிக்கு வருதிரால்" (**தோல்.** செய். 146, **பேர்.** மேற்.)

௨௭௯. ஆபரணம் - பாம்பு. மரணம் - மரணத்தைச் செய்வது.

௨௮௦. குயில் மாமரத்தில் வாழ்வது. மா - வேதமாகிய மாமரம். காஞ்சி - காஞ்சீபுரம்.

௨௮௧. சேய் - உபமன்யு முனிவர். கடிஞை - பிச்சைப்பாத்திரத்தில்.

௨௮௨. பிச்சை யெடுத்துண்ணும் உணவு அமுதம்போல் இருக்குமென்பது கருத்து.

௨௭௨-௮௨. சந்திரன், இரவு, மன்மதன், இசை, வேய்ங்குழலோசை, ஆன்மணியொலி, தென்றல், குயிலோசை, கடலோசையென்பன துன்பம் செய்தலையும், உணவு நஞ்சுபோன்றிருத்தலையும் மடந்தை புலப்படுத்தினள்.

௨௮௩. பிள்ளைப்பழி - சிறுத்தொண்டநாயனருடைய பிள்ளையைக் கொல்வித்த பழி ; "பிள்ளைப் பழிகொண்டார் பெண்பழிக்கு நாணுவரோ, கொள்ளைப் பழிகொள் கொடியரென்பார்" (**திருவிடை. உலா,** 293.)

(அரிவை)

உ௮௫. மற்றை யரிவை யொருத்தி வரவேதப்
பொற்றை யருவிப் புதுவயிரம் - கற்றைச்

உ௮௬ சடையார் பவனி தமனிய வீதிக்
கிடையார வாரித் தெழுமுன் - புடைநின்ற

உ௮௭. வேளை யருகழைத் தேதுவிளை யாடுதும்
காளை விளம்பென்னக் காமனும் - தாளிறைஞ்சி

உ௮௮. அம்மனை யென்று னணங்கவனை யம்மனைசெய்
தெம்மனை யாடரங்கத் தீகென்றாள் - அம்மனைக்குக்

உ௮௯. கொள்ளத் தகுவதுகொல் கோவருண் முத்தென்றான்
எள்ளத் தகுவ திதுவென்றாள் - தெள்ளமுதச்

உ௯0. சோமப் பதமுத்தோ வென்றானச் சோமபதம்
ஏமப் பதமோ வெமக்கென்றாள் - மீமிசையிற்

உ௯௧ கொண்டல் கரிமருப்பு முத்தோ குறிப்பென்றான்
அண்டர்க் கரசு மனைத்தென்றாள் - அண்டுளவக்

உ௯உ. கோலத் தயன்வனசத் தொண்முத்தோ கூறென்றான்
ஞாலத் தவையு நவையென்றாள் - கோலேந்தும்

உ௯௩. வேயுந் தமியன்கை வின்முத்தோ சொல்கென்றான்
நீயும் புறக்கடவு ணீக்கென்றாள் - வேயீன்ற

---

உ௮௫. வேதப் பொற்றை - வேதாசலம். அருவி: "கல்லில் வெள்ளை யருவித் தண்கழுக் குன்றினை" (சுந்தர. தே.)

உ௮௭. காளை : அண்மைவிளி.

உ௮௮. அணங்கு - அரிவை.

(பி - ம்.) ஆடரங்கிற் கேகென்றாள்.

உ௮௯. கோ - பசு; காமதேனுவுமாம்; ௧௧௧.

உ௯0. சோமப் பதம் - சந்திர பதம். ஏமப்பதம் - இன்பத்தை யுடைய பதவி. சந்திரனிடத்திலிருந்து முத்து உண்டாகும் என்பர்.

உ௯௧. கொண்டல் - மேகம். கரி - ஐராவதம் என்னும் யானை. அண்டர்க்கு அரசு - இந்திரபதவி.

உ௯௧-உ. துளவக் கோலத்து - திருத்துழாயை அணிந்த ஆதிவராகத்தின்; கோலம் - பன்றி. அயன் வனசத்து - பிரமதேவருடைய தாமரைப் பூவினது; "பிரமர்மேற் காலம் பிறந்தகத்து முத்தம், பரமர்மேற் சாத்தியது பாரீர்" (௧௩உ) என்றார் முன்னும். நவை - குற்றம். கோல் - அம்பு.

உ௯௩. வில் - கரும்பு. வேய் - மூங்கில்.

௨௯௪. முத்த மிணிதோ மொழிகென்றான் முத்திருக்கண்
அத்தன் வடிவிதுவே யாமென்றாள் - முத்ததனைற்

௨௯௫. பண்ணித் திருமுன் பணிந்து மதனுதவக்
கண்ணிக் குழலி கவர்ந்தாட - விண்முகிலும்

௨௯௬. அல்லும் புகுந்த சசியொத் தளகத்தே
புல்லுந் தொழிலிற் புகாநின்றும் - மெல்லக்

௨௯௭. கடல்வழங்குந் திங்களைப் போலக் கலகித்
தடல்வழங்குங் கண்ணோ டடுத்தும் - முடிவிலா

௨௯௮. ஞானத் திருமூர்த்தி நன்மகுடத் திந்துவை
மானத் தனத்தே வயங்கியும் - மீன

௨௯௯. வெளியிடை யம்புலியின் வெண்டரளக் காஞ்சி
ஒளியிடை நீங்கா துழன்றும் - தெளிமதியம்

௩00. ஓகையைச் சூழ்ந்தென் னுடனுதித்தா ளென்றுதிருத்
தோகையைச் சூழ்ந்தெனச் சூழ்போந்தும் - ஆகத்தின்

௩0௧. ஒன்று முறுப்பிழனொழிதரா தம்மனைகள்
சென்று திரிதருஞ் செவ்விக்கண் - மன்றத்

௩0௨. திறையோன் சுரகுருச்சோ ளேசனகி லேசன்
பொறையோன் திருவுலாப் போத - இறையும்

௩0௩. தரியா தெழுந்து தமரோட வோடிப்
புரியா தரவிற் புகுந்தாள் - விரிசடையிற்

௩0௪. கங்கா சலத்தலையான் கைத்தலையான் முத்தலைவேற்
கங்கா சலத்தலையான் கால்பணிந்தாள் - அங்கட்

---

௨௯௩-௪. திருநெல்வேலியிலும் திருப்பாசூரிலும் சிவபெருமான் மூங்கி லடியிற் றோன்றியவராதலின் வேய்முத்தென்று பாராட்டப் பெறுவர்.

௨௯௫. கண்ணி - தலையிற் சூடும் மாலை; புறநா. ௧: 1.

௨௯௫-௬. முகிலும் அல்லும் கூந்தலுக்கு உவமை. சசி - சந்திரன்.

௨௯௭. கலகித்து - கலகஞ் செய்து. கண்ணுக்குக் கடல் உவமை.

௨௯௯. அம்புலியின் - சந்திரனைப் போல. காஞ்சி - ஒருவகை மேகலை. ஒளியிடை - ஒளியை யுடைய இடை. இடைக்கு ஆகாயம் உவமை.

௩0௨. சுரகுருச் சோளேசன்: இறைவன் திருநாமம்; சுரகுரு என்னும் சோழன் வழிபட்டமையால் இத் திருநாமம் அமைந்தது.

௩0௪. கங்காசலத்து அலையான்; கங்காசலம் - கங்கைநீர். கைத்தலை முத்தலை வேலான் என விகுதி பிரித்துக் கூட்டுக. கங்காசலம் - திருக்கழுக்குன்றம்.

௩௦௫. கழுகு தொழவீற் றிருந்தோன் கருணை
ஒழுகு திருமுகம்பார்த் துய்ந்தாள் - விழிகளுழ்ந்தாள்

௩௦௬. பேச விடங்காண் பரியபெரும் பேரழகா
தேச விடங்கா சிவலோகா - நீசிறிது

௩௦௭. கோவ நிசாசரப்போர் கொல்கோடி ருத்திரரை
ஏவ நிசாசரப்போ ரேகாதோ - ஆவியடும்

௩௦௮. திண்ணரக்கர் சேயைச் சினந்த முனிசாபம்
கண்ணரக்கர் சேய்க்குங் கலவாதோ - எண்ணுத

௩௦௯. வென்றிக் கலுழற்குன் வெள்ளேறு செய்வருத்தம்
அன்றிற்கு மென்குயிற்கு மாகாதோ - அன்றமைச்சன்

௩௧௦. வெண்பொ னிறந்தீர்த்த வெண்சுனையால் வெவ்வினையேன்
ஒண்பொ னிறந்தீர்க்க வொண்ணாதோ - எண்படா

௩௧௧. மண்ணி னதியடங்கக் கண்டநின் மாதீர்த்தம்
கண்ணி னதியடங்கக் காணாதோ - அண்ணலே

௩௧௨. என்றா ளயர்ந்தா ளிவளை யிகுளைகொடு
சென்றாண் மலரமளி சேர்த்தினாள் - பின்னை

---

௩௦௫. கழுகு தொழ வீற்றிருந்தோன் : காப்பின் குறிப்புரையைப் பார்க்க.

௩௦௬. பேச - பேசுதற்கு. தேச விடங்கர் : ஸோமாஸ்கந்தமூர்த்தியின் திருநாமம் ; "சோதி விடங்கர்" (**திருக்காளத்தி. உலா**, 74) என்பது போல ; தேசம் - ஒளி.

௩௦௭. நிசாசரப்போர் - அசுரரின் சண்டை, சந்திரனுடைய போர்.

௩௦௮. அரக்கர் சேய் - மாயீகனென்னும் அரக்கன் (கக, ககூஉ.) முனி - மார்க்கண்டேயர். கண் அரக்கர் சேய் - சிவந்த கண்களையுடைய திருமாலின் மகனான மன்மதன்.

௩௦௯. வென்றிக் கலுழன் - முன்பு வெற்றியையுடைய கருடன்.

௩௦௯-௧௦. அமைச்சன் - சுரகுருவின் மந்திரியான இரணிய சேதாவென்பவன். வெண்பொன் - வெள்ளி. சுனை - சம்பாதி தீர்த்தம்.

௩௧௧. தீர்த்தம் - பன்னிரண்டு தீர்த்தங்கள் ; இவற்றின் விரிவை கரு-ஆம் கண்ணியின் குறிப்புரையால் உணரலாகும். கண்ணின் நதியென்றது ஆறாகப் பெருகும் கண்ணீரை.

**(பி - ம்.)** அடங்கக் காவாதோ.

௩௧௨. இகுளை - தோழி.

(தெரிவை)

நகக. ஒருத்தி தெரிவை யுலகுபதி னாலும்
வருத்தி மனங்கவர வல்லாள் - அருத்தியிற்

நகச. பாங்கியர் சேடியர் பாராட்டப் பேரியாழ்
வாங்கி யரமியத்து வைகுதலும் - ஆங்கொரு

நகரு. பாடகி வந்து பணிந்து பணிமொழிமுன்
சூடக முன்கைத் துணைகூப்பி - ஆடக

நகசு. வெற்புங் கயிலையு மேதகைய நீலகிரிப்
பொற்பு முலையாப் புகல்புகழ்ந்தாள் - நற்பாவை

நகஎ. ஏந்து பரன்மீ திடுங்குங் குமநீறு
சாந்து படுங்கொ றனத்தென்றாள் - ஏந்தும்

நகஅ. மிசையா யிழைசொல்லே மெல்லென் விறலி
இசையா யிசைவ திசைத்தாள் - ஒசிமருங்குல்

நகக. மாது தமியேன் மொழியு மழுவலான்
காது புகுங்கொலெனக் காதலித்தாள் - மாதங்கி

நஉ0. மௌவ னகைக்கிருகண் மாதிரமெ லாமளந்து
பௌவ நிகர்ப்பது பாடினாள் - அவ்வணிதை

---

நகக. அருத்தி - ஆசை.

நகச. பாங்கியர் - உயிர்த்தோழியர். சேடியர் - பணிப்பெண்கள். அரமியத்து - நிலாமுற்றத்தில்.

நகரு. பாடகி - விறலி. சூடகம் - வளை.

(பி - ம்.) சூடகமென்கை.

நகரு-சு. ஆடகவெற்பு - மேருமலை. நீலகிரிப் பொற்பு - அழகிய இந்திரநீல பருப்பதம்; பொற்பு நீலகிரி என மாற்றி இயைத்துப் பொருள் கொள்க; பொற்பு : பொருப்பென்பதன் விகாரமுமாம்.

நகசு-எ. மேரு முதலிய மூன்றும் சிவபெருமான் வீற்றிருக்கும் மலைகளாதலின் அவர் திருமேனியில் அணிந்த குங்குமம் முதலியன அவற்றிற் படுமென்பது கருத்து.

நகஅ. ஆயிழை சொல் இசையாகப் பொருந்துவதைக் கூறினாள்; அவள் சொல் இசையைப்போல இன்பம் பயப்பதென்றபடி.

நகக. மாது - தெரிவை. காதில் இசை புகுவதை நினைந்து இங்ஙனம் கூறினாள். மாதங்கி - பாடினி.

நஉ0. மௌவல் நகை : தெரிவை; அன்மொழித்தொகை.

௩௨௧. ஏர்சூழ் தருமென்க ணெங்கோ னுடைநோக்கித்
தேர்சூழ் தருங்கொலெனச் செப்பினுள் - பேரிசையாள்

௩௨௨. வன்னக் கவிரிதழி வாயளகந் தாருவனம்
என்னப் பலகாலு மேத்தினுள் - அன்னமுமென்

௩௨௩. காதற் சுரும்போதி காமவிளை யாட்டமலன்
போதற் கெழுங்கொலெனப் போற்றினுள் - கீதையும்

௩௨௪. போற்றுந் திருவேட்கை நோக்கிப் புரிசடையான்
ஆற்றும் பணிவுக் கருளுங்காண் - நாற்றிசையும்

௩௨௫. மன்றிற் பெறுதுமந்த மன்றிற் பெரும்பேறும்
குன்றிற் பெறுதுமெனக் கூறுங்காண் - அன்றியும்

௩௨௬. காதல்செய் கோயில் கழுக்குன் றெனக்கடைகாப்
போதல்செய் திட்ட துறுதிகாண் - கோதாய்

௩௨௭. எழுகா தவைவட்ட மேழ்புவன வட்டம்
தொழுகாதன் மிக்குத் தொழுங்காண் - எழுதிநீ

௩௨௮. என்று முடித்தா ளிவளுக் கவளும்பொற்
குன்றும் விடையுங் கொடுத்தெழுந்தாள் - தன்றுணையோர்

---

௩௨௧. உடை யென்றது திசையை. தேர் - பூமியை.

௩௨௨. கவிர் இதழி - முள்ளு முருக்கை மலரைப் போன்ற இதழை யுடைய தெரிவையினது. அன்னம் - தெரிவை.

௩௨௩. சுரும்போதியென்றது விறலியை; விளி. விளையாட்டை யுடைய அமலன். கீதை - இசைப்பாட்டை யுடையவள்; விறலி.

௩௨௪. நாற்றிசை - உலகம்; எழுவாய்.

௩௨௪-௫. மன்று - தில்லைச்சிற்றம்பலம். குன்று - திருக்கழுக்குன்றம். நாற்றிசையும் கூறுமென முடிக்க. (பி - ம்.) பெரிதுவந்த மன்றே பெருவரமும்.

௩௨௬. "காதல்செய் கோயில் கழுக்குன்றே" (திருஞா. தே.) கடை காப்பு - இங்கே தேவாரம்.

௩௨௭. எழுகாதவை வட்டம்: "இந்தவே தாச லஞ்சூ ழெல்லையே ழுரைக்கா தத்தும்" (தலவிசிட்டச். 3); எழுவைக் காதவட்டமென மாறுக; கா்து - காதம்; கடைக்குறை. எழுதி - எழுவாயாக.

௩௨௮. இவளுக்கு - விறலிக்கு. பொற்குன்றென்றது பரிசாக அளித்த பொற்குவியலை. விடை - செலவு. துணையோர் - தோழியர். (பி - ம்.) மொழியவிவளுக்கு.

௩௨௯. வெள்ளம் புறஞ்சூழ வேத கிரிப்புறஞ்சூழ்ந்
துள்ளம் புறஞ்சூ ழுவகையளாய் - வெள்ளமே

௩௩௦. பொங்கி வருமுடியார் வைகும் புறவரைவாய்த்
தங்கி வருமயில்கா டத்தைகாள் - அங்குள்ள

௩௩௧. காளத்தி வேடனிடுங் கைப்பா சிலையேனும்
ஆளத் தினங்கொடுவந் தாற்றிலீர் - நாளும்

௩௩௨. சிராமலைச் செவ்வந்தித் தேம்போதொன் றேனும்
இராமலை யாதுபணிக் கில்லீர் - பராவும்

௩௩௩. இமைய வசலத் திமசலமுங் கூழை
அமைய முகந்திறைத்தீ ரல்லீர் - நமையுடையான்

௩௩௪. விட்டுப் பிரியா வருணகிரி மீதொழுகும்
தட்டுப் புழுகருவி தந்திலீர் - கிட்டரிய

௩௩௫. மாணிக்க வெற்பிற் பொசிவாசி மஞ்சனநீர்
பேணிக் கொணர்ந்தெனக்குப் பெய்திலீர் - தானுவின்

---

௩௨௯. உள்ளம் புறம் சூழ் - உள்ளத்தும் புறத்தும் சூழ்ந்த.

௩௩௦. புறவரை - வெளியேயுள்ள மலைகளாகிய தலங்கள்.

௩௩௧. பாசிலை - பச்சையிலை காமமயக்கத்தால் வெம்மை யுடையாளாயினமையின் பச்சிலை கொண்டுவந்து ஆற்றுதல் கூறினாள்.

௩௩௨. செவ்வந்திப்போது சிராமலையில் விசேடமுடையது. இரா மலை யாது - இராக்காலம் வந்து என்னுடன் மாறுபடாதபடி.

௩௩௩. இமைய அசலம் - இமயமலை. இம சலம் - பனிநீர். கூழை - கூந்தலில்.

௩௩௪. தட்டுப் புழுகு - தட்டி எடுக்கப்படும் புழுகு; "தட்டிய புழு கனைந்துமெய்ப் பனிநீர் துளைந்தன" (**அருணைக்கலம்.** 13); "தட்டுப் புழுகு சவாது பனிநீரும்" (**தென்றல்விடு தூது,** 55.) இதன் விரிவை **அருணகிரிப் புராணம்,** தராதிபன் புழுகு சாத்திய சருக்கத்தாலுணர்க.

௩௩௫. மாணிக்க வெற்பு - இரத்தினகிரி; வாட்போக்கி. பொசிவாசி - பொசிந்த தண்ணீரின் குறை; "ஆண்டவன்போய்க், கொண்டுவரு மாயி ரத்தைக் கூறுந்தொள் ளாயிரமாக், கண்டுபொசி வாசிக் கணக்குரைத்தே", "சொன்னபொசி வாசியறி தூநலத்தா லெவ்வுலகும், மன்னுபொசி வாசியென வைகினேன்", "பொசிவாசி கொள்வீர் புனலுகவே கண்கள், கசிவாசி தீரக் கருதீர்", "பேணிப், பொசிவாசி கொள்வார்க்குப் பூவையர்க ணீரே, விசு வாச மென்று விடாதே" (**இரத்தினகிரியுலா,** 23, 27, 162, 329-30); "சூரியரா யிரகோடி தோன்றியபோற் சுடர்மணிக்காக், காரியல்கண் டனைப்

௩௩௬. அம்மலை யென்னு மவைவயெவைக்கு மேம்பட்ட
இம்மலை யின்க ணினிப்போகீர் - கைம்மலை

௩௩௭. வெள்ளை நிறத்தா னபிடேக மேகநீர்க்
கொள்ளையி னள்ளிக் கொடுதெளியீர் - தெள்ளிய

௩௩௮. வேத னருச்சித்த வேரி முளரித்தேன்
சீத மளைந்து சிறையறையீர் - மாதவனும்

௩௩௯. பூசித்த பாலாழிப் பாலிற் புரள்வெள்ளம்
வீசித் தமியேன் மெலிவகற்றீர் - பேசுவதென்

௩௪௦. ஈரத் துமதுபுகல் யானென் றிரங்கியடி
வாரத் தணங்கு வணங்குதலும் - போரப்

௩௪௧. பெருவரந் தந்தென்னப் பெண்ணினல்லாள் பாகன்
தெருவர வந்தத் திருவும் - நிருதர்

௩௪௨. சிதைய வொருபன் னிருகதிருஞ் செம்மாந்
துதைய கிரிகலந்த தொப்பப் - புதையிருள்போம்

௩௪௩. ஆணிக் கனகா பரணத் தருணமுலை
மாணிக்கம் விட்டெறிப்ப வந்தெதிர்ந்தாள் - பாணி

---

பொன்னிக் கடநீரா யிரமாட்டப், பூரியெனப் பாத்திரத்திற் பொசிவாசி தர முனிந்த, ஆரியமன் னனொநாளு மகக்கமலத் திருத்துவாம்" (**வாட்போக்கிப் புராணம்**, பாயிரம், 15.) மஞ்சன நீர் - திருமஞ்சனத்திற்காக ஆரியர் கொண்டு வரும் காவிரிநீர்.

௩௩௬-௭. கைம்மலை வெள்ளைநிறத்தான் - வெள்ளை யானையையுடைய இந்திரன்; வெள்ளைநிறக் கைம்மலையென மாறுக.

௩௩௮. சிறை - சிறகு.

௩௪௦. ஈரம் - அன்பு. புகல் - அடைக்கலம். அடிவாரத்து - மலையின் அடிவாரத்தில். போர - மிக; "போரத்தாழ் வானசடம் போட்டு" (**நாற்றெட்டுத் திருப்பதி**. காப்பு, 4.)

௩௪௧. பெண்ணினல்லாள்: அம்பிகையின் திருநாமம்; "பெண்ணினல் லாளொடும் பெருவிடைப் பரியொடும், அண்ணலுங் கோடிசூ ரியரையொத் தண்மினன்" (தினகரச். 10); "பெண்ணினல் லாளையொரு பாகமிணையல் செய்யா" (**தே. திருஞா.**) நிருதர் - சூரியனது தேரைத் தடுக்கும் மந்தேகரென்னும் அசுரர்.

௩௪௨-௩. மாணிக்கத்திற்குப் பன்னிரு சூரியர்களும் உவமை. ஒளியை விட்டெறிப்பவென ஒரு சொல்வருவித்துப் பொருளுரைக்க.

௩௪௩-௪. ஆணிக்கனகம் - ஆணிப்பொன். பாணி முகிழ்த்தாள் - கைகளைக் குவித்து வணங்கினள்.

௩௪௪. முகிழ்த்தா டுதித்தாண் முதுதீ யரக்கின்
நெகிழ்த்தாண் மனத்தையெதிர் நின்றாள் - நகைக்குடையும்

௩௪௫. பேரியுந் தேரும் பெருஞ்சே னையுங்கருணை
வாரியும் போயகல மாதர்போய்ப் - பார்முதலா

௩௪௬. எண்ணிய வண்டங்க ளெல்லா மொளிவிளங்கப்
பண்ணிய மெய்ஞ்ஞான பானுவே - விண்ணதியும்

௩௪௭. ஒக்கச் சிறுபிறையும் பாப்பிறையு மூர்கின்ற
முக்கட் பவள முதுகுன்றே - அக்குவடக்

௩௪௮. கொந்துசூழ் தாரகையுங் குஞ்சரத் தோலிருளும்
வந்துசூழ் செவ்வந்தி வானமே - நந்துசூழ்

௩௪௯. செய்யற் பரவைத் திரைவாய் விடமடுத்து
மெய்யர்க் கமுதளிக்கு மேகமே - வையத்துச்

௩௫௦. சூழும் பரசமயத் தொல்கோடி யாறும்போய்த்
தாழும் பரம சமுத்திரமே - வாழியாய்

௩௫௧. நின்கிரிக்கு மூவர் புகவஞ்சி நின்றமையெம்
மின்கிரிக்கு நீயும் விளைத்தாயே - தென்கிரிக்கால்

---

௩௪௪. அரக்கின், மனத்தை நெகிழ்த்தாள். நகை - ஒளி.

௩௪௫. கருணைவாரி யென்றது சிவபெருமானை.

௩௪௭. பாம்பு இறை. அக்கு வடம் - சங்குமணியாலாகிய வடம்.

௩௪௮. யானைத்தோலுக்கு இருள்: "புதையிருளி னெழுகின்ற புகர் முகயா னையினுரிவைப் போர்வை போர்த்த, உதையகிரி யெனுங்கடவுள்" (**கம்ப.** மதிலைக்காட்சிப். 150.)

௩௪௯. (**பி - ம்.**) அமுதொழுகும்.

௩௪௮ - ௯. நந்து சூழ்செய்யல் - சங்கு சூழுதலை யுடைய. பரவை - திருப்பாற்கடல்.

௩௫௦. தாழும் - தங்கும். இதனோடு, "மடங்கும் பரசமய வாத நதிவந், தடங்கக் கருங்கடலு மானேன்" (**அழகர் கிள்ளைவிடு.** 92) என்பது ஒப்பு நோக்கற்பாலது.

௩௫௧. மூவர் - திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் முதலிய மூவர்; இத் தலத்திலுள்ள மலையை மிதிக்க அஞ்சிய மூவரும் கீழே நின்று இத்தலத்தைப் பாடினர்; அங்ஙனம் பாடிய இடம் இத்தலத்திற்குத் தென்கிழக்கில் மூவர் பேட்டையென இப்போதும் வழங்குகின்றது. மின் கிரி - கொங்கை. விளைத்தா யென்றது அதனை நீங்கிநின்றதைக் குறித்தபடி. தென் கிரி - பொதியின்மலை. கால் - காற்று; தென்றல்.

௩௫௨. நின்றுதவி யாது நினதுத்தி ராடக்கால்
சென்றுதவி யாகச் செலுத்தாயே - வென்றிப்போர்

௩௫௩. ஆங்கருப்பு வில்லைமுறித் தாட்டப்பெற் றாலலது
தீங்கருப்புக் கட்டிநீ சேராயே - ஆங்கொருத்தி

௩௫௪. தேனுக் கெதிருமொரு செய்யுள்போற் செய்வளவும்
மானுக் கெதிர்திரும்பி வாராயே - ஆனக்கால்

௩௫௫. மல்கப் புனைகொன்றை யேனும் வழங்கென்று
நல்கக் கொணர்ந்திவட்கு நல்கினார் - மெல்லியலும்

௩௫௬. தார்க்கனக வண்ணந் தரித்துத் தரியாது
மேற்கனக வண்ணம் விடுத்துய்ந்தாள் - கார்க்கண்டன்

(பேரிளம்பெண்)

௩௫௭. இத்தேர் வளைபோந் தெருவத் தெதிரொருத்தி
அத்தேர் வளையொப் பரிதென்பாள் - எத்திசையும்

௩௫௮. முன்ன ரமைத்தோ னமைக்கு முறைதேறிப்
பின்ன ரமைத்தவொரு பேரிளம்பெண் - சென்னி

௩௫௯. வகுத்த மலர்துறந்த வார்கோதை கோதை
உகுத்த மலர்ச்சோலை யொப்பாள் - நகக்கயிலைப்

---

௩௫௨. உத்திராடக் கால் - ஆடிமாதத்தில் அடிக்கும் காற்று. ஆடிமாதத்தில் முன்பு இத்தலத்தில் பிரமோத்ஸவம் நடைபெற்று வந்ததைச் சுட்டியது இது.

௩௫௩. கருப்பு வில் - மன்மதனுடைய கரும்பாகிய வில். ஆட்டப் பெற்றால் - அலைக்கப் பெற்றால், ஆலையில் ஆட்டப் பெற்றால். தீங்கருப்புக் கட்டி : இறைவன் திருநாமம்; "ஒட்டிய தன்பாற் குரிய தெனப்பெரிது, கட்டிய தீங்கருப்புக் கட்டிகாண்" (௧௭௧) என்றார் முன்னும்.

௩௫௫. என்று - என்றுகூறி. இவட்கு - தெரிவைக்கு. மாதர் (௩௪௫) நல்கினார் (௩௫௫) என முடிக்க.

௩௫௬. தார் - கொன்றை மாலையினது. மேற் கனகவண்ணம் தரியாது - தன்மேற் பசலைநிறத்தைத் தரியாமல்.

௩௫௭. தேர் வளைபோம் - தேர் வளைந்து செல்லும். தேர் வளை - தேரை வலம்வருதல்.

௩௫௮. அமைத்தோன் - பிரமதேவன்.

௩௫௯. வார்கோதை - பேரிளம்பெண். கோதை, மலரை உகுத்த சோலையை ஒப்பவள்; கோதை - கூந்தல்; பூவணியாமைபற்றி இங்ஙனம் கூறினார். நகக்கயிலை : கயிலை நகமெனமாறுக.

௩௯௦. பாலாந் தழன்மேனிப் பண்புங் கழுக்குன்றின்
மேலாஞ் சிவன்வெள்ளை மேனியும் - நீலக்

௩௯௧. களமானு மெய்தினெனக் கண்டொளித்த தென்ன
வளமான் விழிக்கெழுதா மையாள் - கிளைவரையாய்ச்

௩௯௨. சூழ்ந்தவை யெல்லாந் தூரந்துபெரு விந்தம்போய்
வீழ்ந்தமை பார்த்தனைய வெம்முலையாள் - தாழ்ந்து

௩௯௩. வருபா டினியர் வயிரியர் தற்சூழ்ந்
திருபாடு பாடும்போ தெல்லாம் - அரனிருகா

௩௯௪. தேறியதும் வேணிவிற கேற்றியதுஞ் சேரற்குக்
கூறியதன் ஞேலைதரக் கொண்டதுவும் - பேறுபெற

௩௯௫. வெவ்வா ளிராவணன்முன் வேதத்திற் பாடியதும்
அவ்வாணி ஞரதன்மாட் டாடியதும் - கைவீணை

௩௯௬. ஆதிக் கதம்பவனத் தம்மைநம்மை யாளுடைய
சோதிக் கமுதே சுரப்பதுவும் - பாதியிரா

௩௯௭. ஆரூர் வடபுரிசை யன்பாற் றிறந்ததுவும்
ஏரூர் வடகிழக்கி ழெய்தியதும் - ஆராயின்

---

௩௯௦-௩௯௧. இறைவன் திருமேனியைத் தான் பார்த்தால் அம்மேனி கரியநிறத்தை அடையுமென்று கண்ணிற்கு மையெழுதிலள்; நீலக்களம் மானும் - நீலநிறமுள்ள கழுத்தை ஒக்கும்.

௩௯௩. பாடினியர் - விறலியர். வயிரியர் - கூத்தர். இருபாடு - இரண்டு பக்கமும்.

௩௯௩ - ௯௮. **இக்கண்ணிகளில் சிவபெருமானுக்கும் இசைக்கும் உள்ள தொடர்பு சொல்லப்படும்.**

௩௯௩ - ௪. சிவபெருமான் திருச் செவியில் எப்பொழுதும் இசைபாடும் கந்தருவர் இருவர் இருப்பதை எண்ணி 'இருகாதேறியதும்' என்றாள். வேணி - சடையில். சேரற்கு - சேரமான் பெருமாள் நாயனருக்கு. ஓலை: 'மதிமலி புரிசை' என்னும் முதற்குறிப்புடைய திருமுகப்பாசுரம்.

௩௯௫. (பி - ம்.) அவ்வாணி நாரதன் பாட்டு.

௩௯௬. கதம்பவனம் - மதுரை. மதுரை அம்பிகையின் அந்தப்புரஸ்தலமென்பது இங்கே அறியத்தக்கது.

௩௯௭. ஆரூர் வடபுரிசை திறந்தது: சந்நிதியில் வந்து யாழ் வாசிக்க வேண்டுமென்று திருநீலகண்டயாழ்ப்பாண நாயனர் நிரம்பப் பிரார்த்தித்த பொழுது, ஸ்ரீவன்மீகநாதர் வடமதிலில் ஒரு வாயில் செய்வித்து அவ்வழியே வருவித்து யாழ் வாசிக்கச்செய்து கேட்டருளினரென்பது பழைய வரலாறு; இதனை, "கோயில் வாயில் முன்னடைந்து கூற்றஞ் செற்ற பெருந்திறலும்

௧௬௮. இன்னவர் கீதமென் றேத்தித் தனைத்தினமும்
அன்னவர் பாடுதலை யஞ்சுவாள் - முன்னடிக்கும்

௧௬௯. கண்ணுளர் கூத்தாங் கலியுகத்து மெய்யன்செய்
பண்ணுளர் கூத்தாய்ப் பரவெடுப்பாள் - தண்ணிய

௧௭௦. வேயிற் குழலைபு மேனுளா னுயர்தம்
வாயிற் குழலிதென்று வந்திப்பாள் - ஆயம்

௧௭௧. வடியளகங் கோதுங்கான் மானக்கஞ் சாறன்
கொடியளகப் பேறுகந்து கூறும் - நெடிது

௧௭௨. கடுங்கணே போற்றினுற் கண்ணப்பன் கண்ணில்
இடுங்கணே கண்ணென் றிரங்கும் - அடுந்தொழிலைப்

௧௭௩. பெட்டான் முளைசமைத்தாள் பிட்டமைத்தாள் பிள்ளையறுத்
தட்டாளட் டுணே யறமென்னும் - பட்டத்து

---

தாயி னல்ல பெருங்கருணை யடியார்க் களிக்குந் தண்ணளியும், ஏயுங் கருவி யிற்றெடுத்தாங் கிட்டுப் பாடக் கேட்டங்கண், வாயில் வேறு வடதிசையில் வகுப்பப் புகுந்து வணங்கினர்" (**பெரிய.** திருநீலகண்ட. 8); "திருநீல கண்டத்துப் பெரும்பாணன் றிருமூலட் டானன் முன்னே, பெருகார்வத் தடனேயாழ் வாசிக்கப் பெறுவேனே யென்கை பேசி, உரமாரும் வடமதிலி லொருவாய்தல் செய்வித்துள் வரவு மேவித், திருவாரூர்த் திருமூலட் டானனை வன் யாழ்கேட்டுச் சிறப்புச் செய்தான்" (**கமலாலய மான்மியம்**, திருவாரூர்ச். 38) என்பவற்றாலும், "புரிசைவட, வாயிலா னீலகண்டப் பாணர் வரவழைத்த, சாயலார் கந்தருவத் தையலரும்" (**திருவாரூருலா**, 130-31) என்னும் இந் நூலாசிரியர் வாக்காலும் அறியலாம். வடநிழற் கீழ் எய்தியது - தட்சிணா மூர்த்தியாகக் கல்லாலமரத்தின்கீழ் எழுந்தருளியிருந்தது. தட்சிணாமூர்த்தியின் பேதங்களுள் வீணாதட்சிணாமூர்த்தி ஒருவர்; "எம்மிறை நல்வீணை வாசிக்குமே" (**தே. திருநா.**)

௧௬௯. கண்ணுளர் - கூத்தர். கலியுகத்து மெய்யன்: இறைவன் திருநாமம். பண் உளர் கூத்து - பாட்டைப் பாடியாடும் நடனம்.

௧௭௦ - ௮௦. இக் கண்ணிகளில் பேரிளம்பெண்ணுக்கு நாயன்மார் களிடத்திலுள்ள பேரன்பு கூறப்படும்.

௧௭௧. மானக்கஞ்சாறர் தம்முடைய மகளின் கூந்தலை மாவிரத மதத்த ராகி வந்த இறைவனுக்குப் பஞ்சவடியாகும்பொருட்டு அரிந்து கொடுத்தவர்.

௧௭௨. பிறருக்குத் துன்பம் விளைத்தலின் கடுங்கணென்றார். கண்ணில் - காளத்தியப்பருடைய கண்ணில்.

௧௭௩. பெட்டால் - விரும்பினால். முளை சமைத்தாள் - இளையான்குடி மாற நாயனாருடைய தேவியார்; இவர் நென்முளையை வறுத்துக் குத்திச்

௩௭௪. மின்னா ருடனீர் விளையாட் டயருங்கால்
தென்னூர் பசுபதியைச் சேவிக்கும் - பொன்னாடிற்

௩௭௫. செஞ்சாலி பார்க்கினர சிங்க முனையனை
அஞ்சா விடங்கழியை யாதரிக்கும் - செஞ்சுடரைக்

௩௭௬. கண்டாற் கலியனமி நந்தி கணம்புல்லன்
தொண்டாற் பெரிதுந் துதியோதும் - வண்டார்ப்ப

௩௭௭. மொய்ம்மலர் கொய்யின் முருகன் கணநாதன்
கைம்மலர்த் தாமமே காமிக்கும் - மெய்ம்மணக்கும்

௩௭௮. ஆவிகாண் டோறுங் கலைய னருனேசன்
நீவிகாண் டோறு நினைந்தேத்தும் - மாவடுவைத்

---

சமைத்தவர். பிட்டமைத்தாள் - செம்மனச்செல்வி. பிள்ளையறுத்து அட்டாள் - சிறுத்தொண்டர் தேவியாரான வெண்காட்டு நங்கையார். அட்டூண் - அட்ட ஊண். பட்டம் - குளம்.

௩௭௪. தென் - அழகு பசுபதி - உருத்திர பசுபதி நாயனார்; இவர் கழுத்தளவான தண்ணீரில் நின்று ஸ்ரீ ருத்திரத்தை உருவேற்றிப் பேறுபெற்றவர்.

௩௭௪-௫. பொன் நாடின் நரசிங்க முனையரையரையும், சாலிபார்க்கின் இடங்கழிநாயனாரையும் ஆதரிப்பாள்.; சாலி-நெல். நரசிங்கமுனையரையர் திருவாதிரைதோறும் சிவனடியார்களுக்குப் பொன்னளித்து வந்தவர். இடங்கழியார்: நாள்தோறும் சிவனடியார்களுக்குத் திருவமுதளித்து வந்த இவர் ஒரு நாள் அதற்கு முட்டுப்பாடு நேர அரசனுடைய கொட்டகாரத்தில் நெல்லைத் திருட முயன்றபோது காவலாளர் இவரைப் பிடித்து அரசன் முன்னே நிறுத்தினர்; அரசன் இவருடைய தொண்டின் பெருமையை அறிந்து நெற்களஞ்சியத்தையும் கருவூலத்தையும் இவரது விருப்பத்தின்படி சிவனடியார்களுக்கு அளித்தனன் (பெரிய. இடங்கழி.) சுடரை - தீபத்தை.

௩௭௬. கலியன் - கலிய நாயனார்; திருவொற்றியூரில் இவர் திருவிளக்குப் பணி செய்து வந்தவர். நமிநந்தி: திருவாரூர் அரநெறியென்னுந் தலத்தில் நீரை ஊற்றி விளக்கேற்றியவர். கணம்புல்லன்: கணம்புல்ல நாயனார்; சிதம்பரத்திலுள்ள திருப்புலீச்சரத்தில் (இளமையாக்கினார் கோயிலில்) கணம்புல்லால் திருவிளக்கிட்டவர்.

௩௭௭. முருகன் - முருக நாயனார். கணநாதன் - கணநாத நாயனார். இருவரும் முறையே திருப்புகலூரிலும் சீகாழியிலும் புட்பப்பணி இயற்றி வந்தவர்கள்.

௩௭௮. ஆவி - புகை. கலையன் - குங்குலியக்கலய நாயனார். நேசன் - நேச நாயனார்; இவர் அடியார்களுக்கு உடை, கீள், கோவணம் முதலியவை உதவி வந்தவர். நீவி - ஆடையை.

ருஎகூ. தண்கனியை நோக்கினற் றாயனைப்பே யம்மையை
எண்கனியச் சிந்தித் திசைபாடும் - ஒண்காரத்துச்

ருஅ௦. சேர்த்திய சந்தனத்தின் மாந்திய தீம்பாலின்
மூர்த்தியைத் தண்டியை முன்போற்றும் - சீர்த்திருவும்

ருஅக. இவ்வழி பாட்டிற் பொழுதுகழித் திட்டதொரு
வெவ்வழிப் பொற்பீட மீதிருந்து - செவ்வழியின்

ருஅஉ. ஓதினு ணம்பிக் கொளித்தபிரான் செந்தமிழ்ப்பாட்
டேதினல் வந்தெய்து மென்றிரங்கக் - காதலியும்

ருஅரு. காட்டினை யென்றொருவன் கண்டதிரு வாசகப்
பாட்டினை விட்டுமொரு பாட்டுண்டோ - வேட்டொருபெண்

ருஅச. முற்றத்தி லேவந்து முன்னிற்கி லோவென்று
சொற்றத்தில் வேறுமொரு சொல்லுண்டோ - அற்றைநாட்

---

ருஎஅ-கூ. மாவடுவை நோக்கினல் தாயனையும், மாங்கனியை நோக்கினல் பேயம்மையையும் காதலிப்பாள் ; நிரனிறை. தாயன் - அரிவாட்டாய நாயனர் ; இவர் நெல்லரிசி, மாவடு, கீரை என்பவற்றைக் கொண்டு சென்று இறைவனுக்கு அமுது செய்வித்தவர். பேயம்மை - காரைக்காலம்மையார்.

(பி - ம்.) எண்கனிய நேசித்து

ருஅ௦. மூர்த்தி - மூர்த்தி நாயனர் ; இவர் சந்தனக்காப்பு அளித்தவர். தண்டி - சண்டேச நாயனர் ; இவர் பாலை அபிடேகம் செய்துவந்தவர்.

ருஅக. இட்டதொரு பொற்பீடம். வெவ்வழி - விருபபமுள்ள இடத்தில் உள்ள. செவ்வழி - செவ்வழிப் பண்.

ருஅஉ. நம்பி - சுந்தரமூர்த்தி நாயனர். சுந்தரமூர்த்தி நாயனர் இத்தலத்திற்கு வந்தபோது பொன்னைப்பெற விரும்பினர். இறைவன் அதனை உடனே கொடாமல் மேற்குக் கோபுரவாயில் வழியாகச் சென்று மறைந்திருந்தனரென்றும், பின்பு சுந்தரர் தெற்குக் கோபுர வழியாகச் சென்று இறைவனைக் கண்டு பொன் பெற்றாரென்றும் கூறுவர். இத்தலத்தின் தென்மேற்கு மூலையிலுள்ள கணக்கர் மண்டபத்தில் 4-ஆந் திருநாளன்று இறைவன் நாகவாகனத்தில் வேய்ங்குழலல்லாத வாத்தியங்கள் ஒன்றுமில்லாமல் மேலைக்கோபுர வழியாகச் சென்று எழுந்தருளி யிருப்ப, சுந்தரமூர்த்தி நாயனர் யானை வாகனத்தில் அமர்ந்து தெற்குக் கோபுர வழியாகச் சென்று இறைவனைக் கண்டு உபதேசமும் பொன்னும் பெறுதல் இப்பொழுதும் நடைபெற்று வருகின்ற தென்பர். ஏதினல் பிரான் வந்தெய்தும்.

(பி - ம்.) என்றேத்த.

ருஅரு. ஒருவன் - ஸ்ரீ மாணிக்க வாசகர்.

ருஅரு-ச. இத்தலத்திற் பண்டைக்காலத்திற் சிவபத்திச் செல்வம் வாய்ந்த உருத்திர கணிகையொருத்தி, " கழுக்குன்றவாணரே, அடிச்சியின் இல்

௩௮௫. சொற்றார்க்கு மன்றியத் தொல்லைத் தமிழ்மாலை
கற்றார்க்குந் தெய்விகங் காணுங்காண் - முற்றிழாய்

௩௮௬. பாடு கெனவிறைஞ்சப் பைந்தேன் றுளிதுளிப்ப
மாடக நல்யாழில் வாசித்து - நீடிருகண்

௩௮௭. பாயு மருவிதடைப் பட்டுத் தெறியாது
சாயு முலைக்கட் சரிந்தோட - வாயிற்

௩௮௮. குதலை குழறக் குறுவேர் வரும்ப
விதலை மனத்தயரும் வேலை - பதலை

௩௮௯. முரசந் தழங்க முழங்குதிருச் சின்னம்
கரசங்க சாலங் கறங்க - அரசிவ

௩௯௦. சங்கரவோ வென்றுலக மெல்லாந் தமரிப்ப
அங்கர மாய னயன்கூப்பப் - புங்கவர்

௩௯௧. பூமாரி தொண்டர் விழிமாரி போர்மாரன்
ஏமாரி தம்மி லெதிர்மலைப்பத் - தூமென்

௩௯௨. கவரி கவிகை கடவுள ரூர்தி
உவரி கொடியிடப மோங்கப் - பவனி

௩௯௩. உருத்திர கோடீச னுத்தமநந் தீசன்
கிருத்திர வேத கிரீசன் - திருத்தில்லை

௩௯௪. ஆடுவா னென்னையழைத் தாடரவக் கிண்கிணிக்கால்
சூடுவான் வீதிவாய்த் தோன்றுதலும் - பாடிய

---

லத்தின் முற்றத்தில் வந்து காட்சி கொடுத்தருளவேண்டும்" என்று ஒரு செய்யுளை இயற்றிப் பிரார்த்தித்த பொழுது இறைவன் கருணை கூர்ந்து அங்கே எழுந்தருளிக் காட்சி கொடுத்து அவளை ஆட்கொண்டனரென்று ஒரு சரித்திரம் வழங்குகின்றது. அச்செய்யுள் இப்பொழுது அகப்படவில்லை. இந்நூல், ௧௦௮-௯, ௩௫௩-௪-ஆம் கண்ணிகளாலும் இச்செய்தி புலப்படும்.

௩௮௬. மாடகம் - முறுக்காணி.

௩௮௮. விதலை - நடுக்கம்.

௩௮௯. கர சங்க சாலம் - கையில் வைத்துள்ள சங்கங்களின் கூட்டம்.

௩௯௦. தமரிப்ப - ஒலிக்க. மாயனும் அயனும் அம் கரம் கூப்ப.

௩௯௧. ஏ மாரி - அம்பாகிய மழை.

௩௯௨. ஊர்தி உவரி - வாகனங்களாகிய கடல்; உவரி - கடல்.

௩௯௩. கிருத்திரம் - கழுகு.

௩௯௫. தையல் விரைந்து தமரோடும் பொய்யாத
மெய்யன் றிருமுன்னர் வீழ்ந்தெழுந்தாள் - ஐயா

௩௯௬. அனகா சுருதிநகா வாரப் பனகா
கனகா சலமடந்தை காந்தா - முனிகாமன்

௩௯௭. வேறுதொடா துன்சுருதி வெற்பி லசோகெடுத்து
மாறுதொடுத் தாலறிவு மாறிலேன் - வேறுலகிற்

௩௯௮. கூர்த்த மரைதுரந்து கோவியா துன்னந்தி
தீர்த்த மரைதுரந்தாற் சிந்தியேன் - பேர்த்தொரு

௩௯௯. தண்காவி யைவிடா துன்சிகரத் தாழ்சுனையின்
ஒண்காவி விட்டா லுயிர்விடேன் - வண்காவிற்

௪௦௦. சூத மலரைச் சொரியாதுன் னேகம்ப
சாத மலர்சொரிந்தாற் றாழ்கிலேன் - பேதமர்

௪௦௧. மாமுல்லை யெய்யாம னின்முல்லை வாயில்வாய்ப்
பூமுல்லை யெய்தாற் புலம்பெய்தேன் - ஆமுல்லைப்

௪௦௨. பைங்கழை யூதாதுன் பாசூர்நெல் வேலியின்
வெங்கழை யூதினுன் மெய்சோரேன் - பொங்கிய

௩௯௫. தையல் - இங்கே பேரிளம்பெண். பொய்யாத மெய்யன் : இறைவன் திருநாமம் ; “ கலியுகத்து மெய்யன் ” (௩௬௬) என்பது போல.

௩௯௬. சுருதி நகா - வேதாசலத்தை யுடையீர் ; நகம் - மலை. ஆரப் பனகா - பாம்பாகிய மாலையை யுடையீர் ; பனகம் = பன்னகம் - பாம்பு. கனகா சல மடந்தை - உமாதேவியார் ; கனகாசலம் - இமயமலை. முனி காமன் - கோபிக்கின்ற மன்மதன்.

௩௯௭. தொடாது - பிரயோகியாமல். சுருதி வெற்பில் - திருக்கழுக்குன்றத்தில்.

௩௯௮. மரை - தாமரைமலரை. நந்தி தீர்த்தத்திலுள்ள தாமரைமலரை ; இத்தீர்த்தம் ஸ்ரீபக்த வத்ஸலப் பெருமான் கோயிலுள் வடபுறத்தே யுள்ளது.

௩௯௯. காவி - நீலோற்பல மலர். சுனை - சம்பாதி தீர்த்தம்; இது மலையின் மேலுள்ளது. நீலமலர் கொல்லும் குணமுடையதாதலின் இங்ஙனம் கூறினாள்.

௪௦௦. சூதமலர் - மாம்பூ. ஏகம்ப சாத மலர் - காஞ்சீபுரத்திலுள்ள ஏகாம்பரத்தில் தோன்றிய மலர்; சாதம் - பிறப்பு. பேது - மயக்கம்.

௪௦௧ - ௨. முல்லைவாயில் - தொண்டை நாட்டிலுள்ள வட திருமுல்லைவாயிலென்னும் தலம். ஆ முல்லைப் பைங்கழை - பசுக்களையுடைய முல்லை நிலத்திற்குரிய பசிய வேய்ங்குழல். பாசூரிலும் திருநெல்வேலியிலும் இறைவன் மூங்கிலடியில் எழுந்தருளி யிருக்கின்றனர்.

சoந. நீலாழி யாராது நின்மடைப் பள்ளியெனும்
பாலாழி யார்த்தாற் பருவரேன் - காலிச்

சoச. சுரவி மணியொலியா தேற்றுத் தொகுதி
விரவி மணியொலித்தால் வெம்பேன் - பரிகரித்

சoரு. திவ்வகை யேனு மெனக்குப் பணித்திலையேல்
உய்வகை யில்லை யுயிர்க்கென்றாள் - எவ்வகையின்

சoசு. வேளும் பிறவும் வெருவப் பெருமகளை
ஆளுங் கடைக்க ணருளசெயதான் - நீளும்

சoஎ. தெருவத் தினைய திறமிறைஞ்சி யேழு
பருவத் தவரும் பரவ - மருதத்தான்

சoஅ. சோணையான் சோற்றுத் துறையா னரத்துறையான்
கோணையான் றண்டலையான் கோளிலியான் - தோணியான்

சoகூ. கச்சியான் காசியான் காளத்தி யான்கழுக்குன்
றச்சியான் போந்தா னுலா.

---

சoந. ஆராது - ஒலியாமல். பாலாழியை மடைப்பள்ளி யென்றது, சிவ பெருமான உண்ட நஞ்சு தோன்றியமைபற்றி. பாலாழி - பாற்கடல். பருவரேன் - துன்பமடையேன்.

சoச. சுரவி - பசு. ஏறு சிவபெருமான் வாகனமாதலின் இங்ஙனம் கூறினாள்.

சoசு. வேள் - மன்மதன். பெருமகளை - பேரிளம் பெண்ணை.

சoஎ. மருதததான் - திருவிடைமருதூரில் மருதமரத்தின்கீழ் எழுந்தருளியுள்ளவர்.

சoஅ. சோணை - அண்ணாமலை; இது சோணாசலமென்பதன் மரூஉ. அரத்துறை - நெல்வாயிலரததுறை. கோணை - திருக்கோணமலை; இது கோணாசலமென்பதன் மரூஉ; இலங்கையிலுள்ள ஒரு தலம். தண்டலை - தண்டலை நீணெறி. தோணியான் - சீகாழியில் தோணியில் வீற்றிருபபவா.

சoகூ. கச்சி - காஞ்சிபுரம்.

ரஸ நிலைய பிரசுரம்;—5

ஓம்.

வந்தே மாதரம்! அல்லாஹு அக்பர்

மகாத்மா காந்திக்கு ஜே!



# தேசிய ஞான வெண்பா

இஃது.

திண்டுக்கல்,

**கி. மருதநாயகம் பிள்ளை,**

அவர்களால் இயற்றப்பட்டு

ஷையார் வேண்டுகோளின்படி

அவர் அன்பர்

**அ. சுப்பிரமணிய அய்யார்,**

அவர்களால்

**மதுரை அஷ்டலெக்ஷிமி விலாஸ் பிரஸில்,**

பதிப்பிக்கப்பெற்றது.

**1929.**

சுத்தப்பதிப்பு.

# முகவுரை.

---

தேசியஞானவெண்பா ஆசிரியர் மந்தநாயக பிள்ளையை எனக்கு நன்றாய்த் தெரியும். அவரால் சொல்லப்பட்ட தேசியஞான வெண்பாவை நான் பார்வையிட்டிருக்கிறேன். மேற்படி நூலை அவர் வியாக்கியானம் செய்யும்பொழுது பலரில் கேட்டிரு அனேகதரம் அடைந்திருக்கிறேன். மேற்படி நூலிலுள்ள ஒவ்வொரு வெண்பாவும் வாசிப்பதற்கு இனிமையாக இருக்கின்றது. வள்ளுவர் குறள்மாதிரி வெண்பாக்களில் விரிவான அர்த்தத்தைப் புகட்டிப் பாடப்பட்டிருக்கிறது. சுமார் 120 வெண்பாக்களுக்குள், தேசியஞானம் ராஜீய ஞானம் இரண்டும் விளங்குமாறு தெளிவாய் உரைக்கப்பட்டிருக்கிறது. அர்த்த சாஸ்திரங்களை வெகுகாலம் ஆராய்ச்சி பண்ணினவர்க்குங்கூட இந்நூல் ஆச்சரியத்தை உண்டுபண்ணுகிறது. இது இளைஞர்கள் மனனம் பண்ணத் தகுந்ததாயிருப்பதுடன், பொது நலத் தொண்டு புரிபவர்களும் கட்டாயம் கைக்கொள்ளவேண்டிய ஓர் அபூர்வ நூல் என்பதும் எனது துணிபு.

96, சந்தைப்பேட்டைத்தெரு
மதுரை
14—12—29

A. வைத்தியநாதய்யர்.
வக்கீல்.

# ஆசிரியர் முன்னுரை



இந்நூல் இம்முறை பற்றி ஒரு தேசம் தனக்குத் தானே அபிவிருத்தியாவதற்குரிய பொதுவான அமைப்பைக் காட்டி அதற்கொக்க தற்காலத்துள்ள பலதேசங்களின் அமைப்பையுங் காட்டி இந்தியாவின் பூர்விக அமைப்பையும் விளக்கி இந்தியாவானது தனக்குத்தானே நாசத்தை உண்டு பண்ணுவதாகவும் அயல் நாடுகளுக்கு அபிவிருத்தியைத் தரத்தக்க மாறுபாடுள்ள தற்கால அமைப்பையும் அதை நிவர்த்திக்கும் உபாயத்தையும் சொல்லிக்கொண்டு போகிறது.

திண்டுக்கல்,
௵ கார்த்திகை மீ

கி. மருதநாயகம் பிள்ளை.

# தேசிய ஞான வெண்பா



1 எங்கும் நிரந்தரமா யேக பராபரமாய்ப்
பொங்கு மருட்கடலாய்ப் போதமாய்த் — தங்கு
முயிர்க்கு ளுயிரா யுளான்தேச ஞானப்
பயிர்க்கங் குரமாய்ப் பரிந்து

2 அன்னையாய்த் தந்தையா யாசானாய்த் தெய்வமாய்த்
தன்னையுல குக்கீந்த தாதாவாய்ப் — பொன்னையொத்துத்
தான்சார்ந்த தானுலகைத் தன்சார்ந்த மாக்கிவைத்த
கோன் சார்ந்தார் தெய்வக்குழாம்

3 தேசிய ஞானஞ் சிறந்த பரதகண்ட
வாசி யனைவருக்கு மற்றதனைப் பேசி
யுணர்த்தல் குருகடனெளிக்கொளினை வேண்டிப்
புணர்த்த நினைத்தகிகர் போந்து

4 உயிர்க்குள் மனித னுயர்ந்தோன் சிருஷ்டி
பியல்பருந்தி யாவு மிருக்கச் — செயுமனார்வால்
வேண்டும் பொருளை விதவிதமாய்த் தான்திருத்தி
யாண்டனுப விக்குமுறை யால்.

5 தானனுப விப்பதெலாந் தான்திருத்த வாற்றது
மானிடர்க ளில்லுலக வாழ்க்கைதனை — யேனையருக்
காற்றலொடு தானுழைத் தன்றே றுழைப்பதனை
யேற்றனுப விப்ப தியல்பு.

6 உழைப்புக் குழைப்பை யுவந்தளித்துப் பெற்றுப்
பிழைத்தல் மனிதர் பிழைப்பு — தழைத்துலகில்
வாழ்வோர்க் கிதுவே வழிதொழிலும் சீனமு
மாழ்ந்துணரி லிங்கிதுவே யாம்.

7 ஒருவர்க் கொருவ ருழைப்பினைப் பண்டந்
தருதற்குங் கொள்ளுதற்குஞ் சால — அரசாள்வோர்
நாணயங்க ளுண்டுபண்ணி நல்கினார் நம்முழைப்பிற்
காணுகின்ற கூலிக் கணக்கு.

8 மாந்த ரொருவர்க்கொருவர் வஞ்சகம்செய் யாதென்றுஞ்
சாந்தமுற வாழ்ந்துலகிற் சஞ்சரிக்க — வேந்தரை
நீதி செலுத்த நியமித்தார் முன்னவர்க
ளாதிமுத லென்னாளு மாண்டு.

9 அன்னியராற் சோரரா லானுமதி காரிகளாற்
றன்முறையாற் பஞ்சமத னால்விலங்கா — வின்னலொன்றும்
நேரா தரசியற்று நீதி யரசாங்கத்
தாரா ளிக்கு மமுது.

10 குடிக ளிடத்திறையைக் கோமேவற்று மீண்டுங்
குடிகளுக் கன்றே கொடுப்பன் — குடிகளின்
தேவை பலவகையுஞ் செய்தந்தச் செய்கைதமக்
கேவற் பணிபலவா றேற்று.

11 எந்தெந்தத் தேசத் தியல்பாராய்ந் தாலுமவர்
தந்தந்தே சத்தோர் சகோதரராய்ப் — பந்தமுற்றுச்
சீவனஞ் செய்வரயல் தேசத் தொழில்கடுக்கக்
காவலிறை போட்டுக் கடிந்து.

12 தேச மயலார் செயற்பொருளை வேண்டி னுறும்
நாச மதற்கொக்க நாடியயல் — தேசந்
தமக்குச் செயற்பொருளைத் தந்தல்ல தெவ்வா
றமைக்கினுஞ் சீராவ தன்று.

13 இந்தியரா நம்மை யிதுகா லரசாண்டு
வந்தவர்க ளெள்ளளவு மாறும — ணந்தொழிலைப்
போற்றிபி ரக்ஷித்த போங்கவர்கள் தம்முடைய
ஆற்றலுறு நேராக்ஷி யால்.

14 இன்னா ளரசாளு மிங்கிலீஷ் ராஜாங்கந்
தன்னா ளுகையரசர் தாமிருக்க அந்நாடார்
தாமாளு கின்றார் தனியரசாய்த் தம்முடைய
க்ஷேமாதி காரியமே செய்து.

15 நாட்டை யவராளும் நாட்ட மவர்தொழிலைத்
தேட்டமுள மட்டும் திறமாக — நாட்டு
மியல்புடைய தாக விருப்பதா னாமு
முயிர்பிழைக்க வென்னதொழி லோது.

16 நாட்டாண்மை கொண்ட நரிகிடைக்கி ரண்டியண்டா
யாட்டைக்கேட் டாலென்ன வாமதுபோல்—நாட்டையா
ளாளுகின்றே மென்றுதொழி லாசைகொண்டா ராங்காழ்வு
பாழுறு தென்னுகும் பார்.

17 இந்திரன்செய் யாகமதி லேற்ற குருவாக
வந்தவிச்வ ரூபன்செய் வஞ்சகம்போ—னந்தேசத்
தாக்ஷியவர்தேசத் தார்க்கு நலம்புரியுங்
காக்ஷிபெறு மாழ்ந்த கருத்து

18 தந்தேசத் தார்வாழ்வைத் தாம்விரும்பி வந்தவர்க
ணந்தேசக் கைத்தொழிலை நாசமிழைத்—தந்தந்தே
பன்னுட்டார் தம்மோடும் பாகித் தனுபவித்தா
னந்நாட்டார்க் கேதுவகை நாடு.

19 தந்தந்தே சத்தொழிலைத் தாங்காவல் செய்துகொண்டி
நந்தேசக் கைத்தொழிலை நாடியவர்—வந்துகொள்ளை
யிட்டேக விட்டென்று மேமாந் திருந்தாக்கா
னட்டமெவர்க் காமென்று நாடு.

20 நாளாவட் டத்திலவர் நந்தொழிலைக் கொள்ளைகொண்
டாளாகத் தீவிற் கழைத்தேகி—வாளா
வுழைப்பேற் றுயிர்வாட்டி யுண்டாம் நலம்பெற்
றிளப்பம் நமக்களித்தா ரெய்த்து

21 ஓங்கும் வியாபார மொப்பந்தக் கூலிமுறை
யீங்கிரண்டும் லாபமொப்ப வெய்துவதால்—தாங்கள்
தொழிலா னமைமடக்கிச் சூழ்ந்துபெறு மிலாப
வழிதமக்குண் டாக்கினரென் மற்று

22 நஞ்சீவ னத்தைப்ப னுட்டார்கை யிற்கொடுத்தோம்
நஞ்சீவ னம்பின்னும் நாடியவர்—தஞ்ஜீவ
னந்தேடித் தீவுகளி னும்போ யுயிருடனும்
நொந்தோமீ தென்னமதி நோக்கு.

23 நாமா தொழிலிழந்தோம் நாடுவிட்டுத் தீவுக்கோ
மேமாந் தவர்போனு ரென்பீரே—லேமாற்ற
முன்பவர்க்குத் தோன்றி முழுதுந் தேசமக்க
ளின்பிழக்கச் செய்வதென வெண்.

24 எத்தொழிற்கும் போட்டியுற்றே மேமாந்தோர் தீவுபுக்
சித்த மயங்கினின்றோம் ஜீவிக்க — மெத்த [கொஞ்
இழிவுற் றுலகின ரேச விருந்தோம்
தொழிலைந் தேசந் துறந்து.

25 இந்தியரே யுங்களுக் கேற்ற சுதந்தரந்
தந்தந் தொழில்செய்தல் தானன்று — நுந்தொழிலை
யெங்கள்கை யிற்கொடுத் தேவும் பணிசெயலா
முங்களுக் கென் றுணர்வீ ரோ?

26 மாற்றாந்தாய் மக்கள்ஜார்ஜ் மன்னரர சாக்ஷிதனை
யேற்றாக்ஷி பண்ணுவோ ரெக்கருத்தி — னாற்றனம்
மாதா சுதந்தரத்தை மக்க ணமக்களித்தல்
தீதா வெதிர்சொல்லுந் தேர்ந்து.

27 இனத்தோ ரரச ரியற்றுமர சாக்ஷி
மனத்தொவ்வா தேற்ற மதியோர் — இனத்தலா
ராக்ஷியொவா நம்மை யராஜகரென் றேதுமவர்
சூழ்ச்சி யறிந்துபதில் சொல்.

28 மதபேதத் தானீர் வழக்கிட் டழிவீ
ரிதமா யுமையாள்வோ மென்று — பதமாகப்
பேசுவோர் நந்தொழிலைப் பேண தபேக்ஷித்து
நாச முறச் செய்தலென்ன நாடு.

29 இகம்பரமி ரண்டி லிகமுதலை யார்க்கு
மிகவாழ்க்கை யேபரத்துக் கேது — பகரின்
மதத்துக் குயிரை மகான்துரப்பன் யார்க்கும்
மதம்பிழைப் பன்றி வரா.

30 மதங்கள் பலவு மனிதர்க் குதவி
யிதமாகச் செய்ய இயம்பும் — நிதநிதமும்
ஜீவிக்க ஜீவனமே தேவைநஞ் சோதரர்க்கு
ஜீவனத்தைத் தந்துதவி செய்.

31 டாம்பீக மாயிருக்கத் தந்தார் சமத்துவத்தை
யாம்பிழைப்பி னம்மை யகற்றிவைத்தார் — தாம்பிழைக்க
நந்நாக ரீக நலித்து நமைமடக்கித்
தந்நாக ரீகமில் தந்து.

32 சரச விலைக்கவர்கள் தாரா ரெனநி
ரசமிலா வார்த்தை யிசைத்தீர்—சரச
விலைகொடுத்து வாங்குதற்கா வேண்டும் பணமுந்
தொழிலிருந்தன் றோயாருஞ் சொல்.

33 நாட்டுணவைக் கொண்டுசெல நாடயலார்க்குக் கொடுக்குஞ்
சீட்டு விதேசியத்திற் செல்லுபணங் கேட்டவர்
தொழிற்பொருளி லன்னவர்பால் தோன்றும் விலைசரசம்
வினைபொருளி லேறி விடும்.

34 தந்தி தபால்மோட்டார் சைக்கிள் ரயில்கப்பல்
தந்தவ ரென்றுநீர் சாற்றுகிறீர்—நந்தொழி
லின்று மிதற்குணவை யீந்துபெற்றோ மென்றுணரி
னன்றோ வயிற்றெரிச் சலாம்.

35 எல்லாத் துறைகளிலு மிந்தியா வுங்கொளுமா
வல்லமையா யன்றெவரும் வந்ததில்லை—தொல்லுலகி
லின்றெவருந் தாழ்ந்திருக்க வில்லை நமதுநிலை
யன்றோ பரிதாப மாச்சு

36 ஆளுந் திறனற்றோ மஃதாற் றொழிலாளர்
தாழும் படிவந்து சார்ந்ததுகாண்—பாழும்
அயலுக ரீக மலைம் பலந்தெய்
தியலுக ரீக மிழந்து.

37 செய்பச் செயப்படுக்கஞ் சேரு மதிலாகச்
சையத் தெதை யெனு மாறுமல்—செய்யத்
தொழி லிழந்து நாம்நமக்குட் டோன்றும் விவகார
வழியுடன்றோ மப்படுக்கம் வந்து

38 தேவையெலாந் தான்றமக்கே தேடல் விதியாகும்
தேவை யயலார்பாற் றேடலவர் — தேவையொக்க
நாங்கொடுக்க வேண்டாமோ நாங்கொடுப்ப தென்னவவர்
தாங்கொடுப்ப தென்னவெனச் சாற்று

39 ஜீவனத்தை நாடுவோம் தேவை யயலார்பால்
ஆவலுடன் வேண்ட லறிவுடைத்தோ—ஜீவனத்துக்
கார்தேவை செய்துய்வோம் அந்தோ நமைநீங்கா
பார்மீ தடிமைப் பணி

40 நாகரிக மென்றயலார் நாட்டுப் பொருள்வேண்டி
னாருக் தொழினமக்குண் டாகுமோ—மோகமின்றி
அன்னிய வஸ்துவினி லானமட்டும் நீக்கிலுண்டா
முன்னினமே நாகரிக முற்று

41 நாகரிக மாலயத்தி னற்பதுமை வாய்ந்திருக்க
நாகரிக மிந்திய நாட்டிலின்றிப்—பாகமின்றித்
தின்றிருந்த ஆங்கிலரின் சேர்க்கையால் கற்றோமென்
றின்றுணரச் செய்தனரென் னேய்த்து

42 மலைமேற் குறித்த வழிவிலகி மற்றோர்
மலையேறி னோர்தாம் மதித்த—மலைமீதி
லேற விறங்குமா றிந்திய நாகரிக
மேற வயலொழிப்பீ ரின்று

43 படித்தார் பணக்காரர் பட்டணத்தார் நாட்டைக்
கெடுத்தார் விதேசியத்திற் கேண்மை—பிடித்துப்
பகட்டிநா டெங்கும் பரப்பி யவர்தா
மகற்றன் முதற்கடமை யாம்

44 பொருளுடையீ ரும்மிற் புவியு மரசு
தெருளுடைமை கொண்டு தெளிமின்—அருளுடைத்தாய்
நந் நாட்டார் வாழ்வை நயந்தயலை நீக்கிலுமைப்
பன்னாடும் போற்றும் பணிந்து.

45 நந்நாட்டார் வாழ்வை நீர் நாடாதயல் வேட்டுப்
பன்னாட்டார்க் கீந்து நலம் பாராட்டின்—எந்நாடும்
ஏனோ உமை யிழிவா யெண்ணாது தானிழந்தும்
தானா வரப் பெற்றும் சாற்று.

46 தொட்டதெலா மன்னார் தொழிற்பொருளா மெவ்வாறு
விட்டகல்வ தென்று விளம்பற்க—இட்டமுட
னுன்னாலெம் மட்டயல்விட் டுன்வாழ்வைச் செய்திருப்பா
யன்னிலையே போது மறி

47 உன்மனதுக் கொவ்வா வொருதேசத் தேயிருந்துன்
றன்னகரை நோக்கிவரத் தான்றிரும்பின்—முன்னகர்விட்
டெவ்வாறவ் வெல்லைமிதித் தெட்டிநடந் தேவருவா
யவ்வா றயல் நீக்க லாம்.

48 தந்தைதாய் சோதரர் தம்மனைவி மக்களொடு
பந்து ஜனமுறவினிற் பாராது—சொந்த
விலக்குவோ மென்றுரைத மேனாட்டார் பண்டம்
விலக்க லரிதோ விளம்பு

49 சண்டைக்கா வேண்டுமுங்கள் சௌகரிய வஸ்துவினைக்
கொண்டுவந்து நீங்கள் கொடுமினெனில்—கண்டுமிண்டா
யிவ்வாறு பேச விசையுமோ நாமநமக்கா
யொவ்வாத னீக்கலரிதோ

50 உங்களை நாங்க ளெடுக்கவந்தோம் சௌகரிய
மெங்களுக்கு நீங்களிப்போ தீயுமென — நுங்கவர்க்கு
நாங்கொடுக்க வில்லையோ நாட்டின் பெருமைக்கா
நாங்கொடுப்ப தென்னவிடர் நாடு.

51 ஜீவனத்தை விட்டும் ஜெயிற்புகுந்துந் தீமைசெய்கொடா
தாவலுற்ற செல்வ மனைத்திழந்துங்—கேவலத்தைப்
போக்க முயன்றோரும் பொருந்தலார் செய்பொருளை
நீக்க லரிதோ நினைத்து

52 எல்லாத் துறைகளிலு மிங்கிலீஷ் நாகரிக
செல்லா தொழித்தாக்கால் தேவையுற்ற—பல்வேறு
நாகரிக மில்லாத நாட்டுப் புறத்தார்போ
லாகுமென வெஞ்சே லறிந்து

53 இயற்கை வளநம்பா லில்லா நவினைச்
செயற்கை வளமவர்பாற் செப்பின்—செயற்கை
யியற்கையா லன்றி யிசையுமோ வேற்றம்
செயற்கை செலாவணியைச் சேர்ந்து.

54 செலாவணியை நம்பிலவர் செய்தாக வேண்டு
மலாதவர் செய்பொருளை யார்க்குச்—செலாவணி
செப்புய்வர் நாம்நமக்குத் தேவை சுருக்கினமை
யெய்தா தவர்க்குவகை யேது.

55 அப்பா லவரை யகற்றுமவ ராதரித்
தொப்பா யிருதரத்தா ரொற்றுமையா—லிப்பூ
வுலகெலாம் போற்ற வுயர்வாழ்வு பெற்றுத்
திலகம்போல் வாழ்வோம் தெளி

56 அவர்பாலும் சிக்கியினி யாவதென்ன வென்னுங்
கவலை நமக்கில்லை கண்டோ—மவரவர்நம்
நாட்டுப் பொருளையன்றி நாடோ மெனுந்தீரப்
பூட்டுக்கு ளொன்றான போது.

57 ஆட்சி முறையோ டமர்செய்தே னன்னவர்தம்
சூழ்ச்சியால் வாடுநஞ் சோதரர்க்குத் – தாழ்ச்சி
வராதிருக்க வேண்டினினி மாற்றார் பொருளைப்
பெறாதிருக்க வேண்டும் பிணித்து.

58 பிழைப்பி னயலார்தம் பின்சென் றவர்க்கொத்
துழைப்பி னரசியலோ டொத்—துழைத்தென்
உழையாமை செய்தென் உயர்வாழ்வுண் டாகா
பிழையாம் நமது பிழைப்பு.

59 ஆளு மதிகார மன்னா ரிடத்திருக்கும்
நாளும் பல்சூதா னம்மிலவர்—கோளுரைத்து
வெம்பிழைக்கச் செய்தூடே வந்தடக்கிப் போடுவதை
நம்முளத்திற் கொண்டிருப்போம் நன்கு.

60 காந்தி மகானறிவாய்க் கண்ணலிச கோதரராய்ச்
சேர்ந்த தலைவர் சிரசுடலாய்—நாந்தொண்டு
பண்ணு மவயவமாய்ப் பந்தித்துக் காங்கிரசே
உன்னுமன தாயிருப்போ மொற்று

61 காங்கிரசின் திட்டம் கடுகளவு நாமிபற்றி
னாங்கிலே ராட்சித மவ்வளவு—தேங்கு
முயன்று முழுது முடிக்கி னவர்கள்
நயம்பயமுஞ் செல்லா நமில்.

62 எவ்வளவு தூர மிசைந்து பலனுடைத்தா
மவ்வளவுங் காங்கிரசி னாஜ்ஞைதனை—நவ்வி
யஹிம்சா தருமத்தோ டான முயற்சி
மஹிமையெனக் கொள்வோ மதித்து.

63 அன்னார் நமக்கிடரென் றாற்றிடினு மன்னவருக்
கின்னா செயற்கின் றிசையாதீர் - உன்னாமற்
றான்பிழைக்க வன்னவர்கள் தான்செய்வர் நாம்பிழைக்க
என்பிழைக்க வேண்டு மிழிந்து.

64 தேசிய வாதிகளைத் தெண்டித் தொடுக்குவதைப்
பேசி வயிறெரியார் பேதையரே—யோசி
கதவை யடைப்பதெங்கள் கைநசுங்கு தென்பார்க்
குதையு மிதிகொடுப்ப தொத்து.

65 யாரோ சிலர்முரணு வாரென் றவரையெதிர்
பாரா திரும்சட்டப் படிதவறா தாரார்நின்
றெவ்வளவு தூர மிசைந்து நடந்தார்கள்
செவ்விதினி னீரெமக்குச் செப்பு.

66 உலக மரசியலை யொட்டி நடக்கப்
பலவிதமாஞ் சட்டதிட்டம் பண்ண—வலமுடனச்
சட்டதிட்ட மெவ்வெந்தச் சந்திகளிற் கையாளப்
பட்டதென்றும் விட்டதென்றும் பார்.

67 அரசு புரளா தமைதி கெடாது
வரவு சிலவில் மடங்கா—திரவுபகல்
தந்தொழிலுந் தன்னலமுஞ் சாயா தரசாள்வ
திந்தவதி காரவர்க்க மே.

68 இதற்கா முறைதவரா தெவ்வளவு வேண்டு
மதற்காம் பலமுயற்சி யாலிங்—கிதம்பதமாய்ச்
செய்திங் கரசாளுஞ் செப்படி வித்தையின்
மெய்யுணர்ந்து பாரீர் விரைந்து

69 சட்டதிட்டத் தாலச் சனங்க டமையிசைத்துக்
கட்டி நடத்துவதைக் காட்டிலுமே—யிட்டமொடு
தாமிசைந்து கொள்ளுந் தகைமை சிறப்புடைத்
தாமென நாங் கொள்வோ மறிந்து.

70 உடைகிழிந்தால் வீட்டி னுருக்குலைந்தால் வாழ்க்கை
நடைகுலைந்தால் நாந்திருத்தி நம்மைப்—புடைசூ
ழரசியலின் சீர்கேட்டை யார்திருத்து வாரென்
றிரசமற வாழ்வோ மிசைந்து

71 அரசிய னம்மிட ராயி னதற்கு
முரணி விடரே மொழியின் திறனுற்
றெதிர்த்தரசின் போங்கை யிழுத்தொழுங்கினூட்டி
னதற்குரிமை யாம்பலனே தாம்

72 தேசபக்த ரான திறவான்க டங்களையுந்
தேசத் தொடுசேர்த்துச் சிந்தைசெய்வர் —நீசக்தி
யின்றேலிங் குன்று விசைந்ததனைச் செய்திருப்பா
யின்றேல் மனிதரா மா

73 ஐரோப்பா யுத்தத் தழிந்தா ரொருகோடி
யெய்தும் பலனென்று மின்றியினிச் —செய்வகைபால்
காந்தி மகானமது காரியமே லாமுடிக்கி
னுந்தருஞ் சேதமென் னுடு

74 இப்போ துயிர்ச்சேத மேதாகு மோவென்று
தப்பாக வெண்ணிச் சலியாதீ—ரெப்போது
மாங்கிலர்செய் யக்கிரமத் தாற்றீவு சென்றவரி
லேங்கியிறந் தார்க்கள வென்

75 கொடுமை பலபுரியுங் கொள்கை யுடையார்
தொடர்பறுத்துக் கொள்வதிலாஞ் சொற்ப—இடமையெண்ணி
நாம்பயந்தாற் பின்னெந்த நாளு மிடருளற்றி
னும்புகலென் சொல்லு மறிந்து

76 என்ன கொடுமையென் றேமாந் தறியாமற்
சொன்னவர்க்கு நாமினிமேற் சொல்லுவா—மன்னவர்க்கு
நாந்தொழிலைக் கொள்ளைதந்து நாமோவ் வொருவரு
மெந்தவிதஞ் ஜீவிக்கின் றேம்

77 தாழ்ந்தோர் பலரவரைச் சார்ந்தேவ லாளானோம்
வாழ்ந்தோ ரவர்தொழிலை வாழவைத்தோ—மாழ்ந்துணரா
துத்யோகத் தன்னார்க்கே யொத்தாசை யானோமீ
தித்தேச வாழ்வா வியம்பு

78 சத்தியமு மில்லை தருமார்த்த மேதுமிலை
யொத்தொருவ ரோடொருவ ருண்மையிலை — சுத்தமொடு
நாணயமு மில்லையொரு நம்பிக்கை யில்லையிலை
மானமொடு வாழு மதி

79 பிழைப்பவருக் கீய்ந்து பிழைக்கப் பிழைக்கும்
பிழைப்பே பெரிதாகப் பேணிப்—பிழைப்பதனு
லாறுதலை யாரடைந்தா ராய்ந்துரைப்பீர் முன்னிலையின்
மாறுதலை நன்றாய் மதித்து

80 நல்லோ ரிலையெனந் நாட்டார் தமைப்பிழிவாய்ச்
சொல்லாதீர் முன்னோர் சுதரிவரே—யில்லாமை
வாட்டி யிவர்மாற மற்றவரு மாறவிக்
கூட்டினு மாறுவது கொண்டு

81 மிடியிற் றிளைப் பதற்கே மேவின் பெரிய
குடியிற் பிறந்தாருங் கோணி—நடையிற்
பிறழ்வ தியல்பேயாம் பெற்றோரும் தொழில்கள்
வறளச் சிறுமை வர

82 மழைமாறி மானிடர் மண்டி யிவை நேர்ந்த
பிழையேனு நன்செயலைப் பேசின்—தொழிலே
எனக்கு முமக்குமற் றெல்லோர்க்குந் தேசந்
தனக்கு மமுதளிக்குந் தாய்

83 செல்வர்காள் நாமெச் சிறுமை யுறுகிறோமென்
றல்லவா யெண்ணுகிறீ ராராயி—னல்ல
வரவு சிலவில் மனது சலியா
வுறவு கிடையா துள

84 பட்டாதார் மிட்டாதார் பண்ணை யிருந்தாரே
கட்டளையாய் நுங்கழனி காத்துழு து—நட்டாடு
மாட்டைச்சம் ரக்ஷித்து வந்தபண்ணை யாட்களெந்த
நாட்டுக் குழைக்கிறாரின் றுள்

85 மைந்தரொடு சோதரர்மாமனொடு மைத்துனர்
தந்தை தமர்சுற்றத் தார்முதலா—பெந்தெந்தத்
தீவிலிருந் தயலார் தீவினைக்காற் றுமலந்தோ
வாவி யழிகிறா ராங்கு

86 இன்னாட்டி லேபிறந்த இன்னாட் டுணவையுண்
டின்னாட்டி லேவளர்ந் தென்னாளு—மின்னாட்
டுழவா லுணவளித்தோ ரோவென்று தீவி
லழநாம் சகித்திருப்ப தா

87 உத்யோகங் கைத்தொழி லோங்கும் வியாபார
மெத்தொழிற்கும் போட்டி நம்மு ளேற்படலா—லத்தொழிலை
சாதிப்ப தெவ்வருமை சந்ததிக்கு மித்துயரம்
பாதிக்க விட்டென் பயன்

88 இந்தியர் நாம் சிப்பாயா யில்லாதா லுங்களுக்
கிந்தியச்சிப் பாய்களென் றேனென்மே—யிந்தியச்
சிப்பாய்கா ணந்தேசஞ் சீருற்று லுங்களுக்
கொப்பா ருலகி லுரை

89 அயலார் வியாபாரத் தாற்பணந் தேடி
யுயர்வீ ரிலக்குமியை யொவ்வி—யயலார்க்குக்
கூட்டிக் கொடுத்துங்கள் கும்பி வளர்த்திந்த
நாட்டி லிருந்தென் னலம்

90 சூதுவா தற்ற துரைராஜ பாட்டையா
யோது மகான் காந்தி யொத்துழையாச்—சாது
மகாயுத்தத் தேயுழைக்க வாராதோன் னார்பாற்
றகாவழியிற் சார்ந்ததென்ன சாற்று

91 நம்மை யடக்கினமை நாமாள மாட்டாது
நம்மை யயலார்க்கு நாமடக்கி — நம்மை
யடிமைப் படுத்துவதா லாகுந் தொழில்போய்
விடுமிப் படியுணரு வீர்

92 நம்மி லடங்கிநமை நாமடக்கி னாலோர்
தம்மை யடக்கு தற்குஞ் சக்தியுண்டாம்—நம்மை
யயலார் தமக்கடக்கி ஆண்மையற் றேதும்
இயலாமை பெற்றோ மிழிந்து

93 நம்மை யிரக்ஷிக்க நாடியிங்கு வந்தாரோ
தம்மை யிரக்ஷிக்கச் சார்ந்தாரோ—தம்மையவர்
வாழ்விக்கத் தந்தொழிலை வாழ்வித்தார் நந்தொழிலை
வாழ்விக்க வன்னார் வரார்

94 நம்மி லவர்பிழைத்து நாம்பிழைக்க வின்றளவுந்
தம்மி லிடந்தராச் சண்டாளர்—நம்மை
யிரக்ஷிப்ப ரென்றுநீ ரேமா ந்தவர்கள்
புறக்ஷிக் கிடங்கொடுத்தீர் போய்

95 உங்களுக்காக் கைத்தொழிலை யுண்டாக்கு வோமென்பார்
தங்களுக்கா நம்மைச் சமைத்திடுவர்— தங்களை நா
மெக்காலு நோக்கி யெதிர்பார்த்திருப்பதற்குத்
தக்கமுறை யாம்பழக்கந் தந்து

96 பழையது தந்தாற பசியா வழுகாம்
பிழையா தளிப்பமெனும் பேச்சாம்—பிழைக்கத்
தொழில்வேட்கை யுள்ளார் சுயரா ஜியத்தின்
வழிகாட்டிப் பேசும் வரம்பு

97 ஒற்றுமையாய் வேற்றுமையா யொவ்வுதலா யொவ்வாதாய்
சற்றுந் தயங்காமற் சத்தியர்விட்—டொற்றுப்
பிழைப்பை யவர்விரும்பிப் பேசிற்றிருகிப்
பிழைக்[illegible] பேசிப் பிழைத்து

98 வாசன் [illegible]ரித்த மன்ன ராசாண்ட
தேச மிதிற்குறைகள் செப்புதற்காப்—பேசினர்க்கு
வாய்ப்பூட்டுச் சட்டம் வழங்கு மரசியலைக்
காப்பூட்டச் சென்றீரோ கற்று.

பிராமண ருத்யோகம் பெற்றிடமே யார்க்கும்
தாதிருக்கி றுரென்று சாற்றுந்—திராவிடமே
நந்தொழில்வி யாபாரம் நம்மிடத்தி லேயிருந்தா
[illegible]தநிலை மைக்கீழ தா

100 சுதந்தரதே சத்திற் றொழிலாளர் தங்கட்
கிதஞ்செய்வார்க் குத்யோக மீந்தால்—பதம்பெற்ற
துத்யோக மோதொழிலோ வுண்மை புணர்ந்துமது
சித்தந் தெளிந்தெமக்குச் செப்பு

101 சுயரா ஜியமே தொழிலாட்சி யென்ப
தியல்பா யறிய விருக்க—மயலா
லதிகாரம் வேண்டுகிறீ ராட்சிநம தாயி
னதிகார மாரிடத்தி லாம்

102 நாட்டினல் லாக்ஷிநடந்தாலு மந்நாட்டின்
தோட்டிபுல் வெட்டல் தொலைபுமோ—கேட்டி
தயவுக் குழைப்பார் தமது நிலையி
னியல்புக் குயர்வொன் றேது

103 சுயரா ஜ்யநமக்குத் தோன்றி லெவரு
மயலார்க் கிதஞ் செயற் காகா—நயமாக
வெள்ளையரோ பார்ப்பனரோ வேண்டுபவ ருத்யோகச்
சள்ளைபெற விட்டுவிடல் தந்து

104 அரசியலா னம்மையவ ராண்டடக்கு வாரென்
றிரசமிலா வார்த்தை யிசைத்தீர்—அரசியலா
லன்னார் நமக்கிடருண் டாக்கின் லவ்விடரை
யென்னாட் செலுந்திருப்பற் கெண்

105 ஒருவர்க் கொருவரிட ருண்டாக்கி னேமவ்
விருவிடரு நம்மை விட்டேகா—வொருவர்
வலக்கை யிடக்கையு மல்லாடி னாலவர்க்கே
அலக்கணலால் மற்றெவருக் காம்

106 பூனை குரங்கினிடர் பொப்பாகம் தீர்த்தகதை
ஏனையரை நாமுதவிக் கேற்பதுவும்—ஞானம்
உடையீர் தொழிலையவர்க் கொப்படைத்து வாழ்வின்
கடைவதின் றெத்தா லறி

107 உத்யோக மன்னாருக் கொப்படைத்துப் போடுவதே
சித்தாந்த மாயுமக்குச் செப்பவிலை—யுத்யோக
மன்னார்விட் டுத்தொழிலை யாதரித்துக் கொள்வதற்கு
முன்னும் பெறுவோ முபன்று

108 நீர்வாழ வேண்டியோ நீதி புரக்கவோ
பார்மீ ததிகாரம் பண்ணவோ—நேர்மதியீ
ருத்யோகம் வேண்டி யுழல்வீ ருமக்கிந்தப்
பித்தேறிப் போனதென்ன பேசு

109 உம்பிறந்தார் சுற்றத்தா ருன்தேசத் தார்வாழ்வைத்
தம்பிறந்தார் வாழச் சதிசெய்த—வம்பருட
னொத்துழைத்து நீரும் உயிர்வாழ்ந் திருப்பதற்குப்
புத்திதடு மாறியோ போச்சு

110 சந்ததியின் வாழ்வையெலாம் தாம்வாழ வுத்யோகத்
தொந்த மழித்துவருநீ ருதறியா—தந்தந்தோ
ஆங்கிலமோ செய்த தறிவைத் துலக்கியினி
நீங்க ளறிவீர் நினைத்து

111 ஆங்கிலத்தால் நம்மை அழுக்கிப் புதைத்திருக்கும்
போங்கறிந்தார் நெஞ்சம் புழுங்காதோ—ஆங்கிலத்தைக்
கற்றுணர்ந்தார் அவ்வழிக்கே கல்விநிற்க அஃதிலா
மற்றோ ருணரா வகை

112 தந்தேசத் தார்வாழ்வைத் தாம்வளர்த்தா ரித்தேசம்
வந்தேயதிகார வாழ்க்கையினு—னந்தேச

